A. M. D. G.

கன்னியர்களின் இராக்கினியே வாழ்க!

# "கற்பினணிகலம்"

அல்லது

கன்னிகையும் வேதசாக்ஷியுமான

## அர்ச். செசிலியம்மாளின்

## அற்புதச்சரிதை அம்மானை

இது

மாஜி T. ராசு மேஸ்திரியார் அவர்களின் குமாரர்

T. R. மரியதுரை ஆச்சாரியாரவர்களால்

இயற்றப்பட்டு,

இராஜஸ்ரீ

சங். M. அமலோற்பவநாதர் S.J. சுவாமியவர்களால்

பரிசோதிக்கப்பட்டு,

தூத்துக்குடியில் எழுந்தருளியிருக்கும்

சரியாய் வந். F. T. ரோச் S.J. ஆண்டவரவர்களின்

அநுமதியின்பேரில்,

திருச்சிருப்பள்ளி

அர்ச். சூசையப்பர் இண்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

1927.




A. M. D. G.

கன்னியர்களின் இராக்கினியே வாழ்க!

# "கற்பினணிகலம்"

அல்லது

## கன்னிகையும் வேதசாக்ஷியுமான
## அர்ச். செசீலியம்மாளின்
## அற்புதச்சரிதை அம்மானை.

இது

மாஜி T. ராசு மேஸ்திரியார் அவர்களின் குமாரர்

**T. R. மரியதுரை ஆச்சாரியாரவர்களால்**

இயற்றப்பட்டு,

இராஜரிஷி

**சங். M. அமலோற்பவநாதர் S. J. சுவாமியவர்களால்**

பரிசோதிக்கப்பட்டு,

தூத்துக்குடியில் எழுந்தருளியிருக்கும்

**சரியாய் வந். F. T. ரோச் S.J. ஆண்டவரவர்களின்**

அனுமதியின்பேரில்,

**திருச்சிறப்பள்ளி**

**அர்ச். சூசையப்பர் இன்டஸ்டிரியல் ஸ்கூல் பிரஸில்**

பதிப்பிக்கப்பட்டது.

1927.

Imprimatur:




✠ FRANCIS T. ROCHE, S.J.,

*Bishop of Tuticorin.*

C

This Book

IS

MOST RESPECTFULLY DEDICATED

TO

**HIS LORDSHIP**

**THE RT. REV. FRANCIS TIBURTIUS ROCHE, S. J., D. D.,**

BISHOP OF TUTICORIN

IN COMMEMORATION

OF

HIS EPISCOPAL CONSECRATION,

*23rd September 1923.*





சரியாய் வந். F. T. ரோச், S.J., ஆண்டவரவர்கள்,

தூத்துக்குடி மேற்றிராசனம்.

E

# முகவுரை.

ஓ! பரமண்டலமே! உன்னைக்குறித்து சொல்லப்பட்டவை மகா அதிசயமானவைகளே. உன் விலாசத்திற்கு அளவேயில்லை. உன் கட்டடத்தின் சிங்காரமே சிங்காரம். உன் தளவாடமோ விலை வரம்பு அறியாது. உன் பிரஜைகளின் மகிமையாலும் மகத்துவ சீவியத்தாலும் பிரகாசித்து சகலவித இன்ப நலங்களையெல்லாம் நிறையக் கொண்டிருக்கிறாய். அஸ்திவாரமிட்டு உன்னைக் கட்டினவரின்பேராலும், பெருமையாலும், உன்னதத்தாலும் மாக்ஷிமையாலும் சிறந்து விளங்கும் திரு மாநகரமே! நீ நீடூழி வாழ்க! வாழ்க!!

இவ்வித தெவிட்டாத பேரின்பத்தைக் கனவிலும் நினையாமல் இவ்வுலகமே சதமென்றாற்போல் இலௌகிக மாய்கையில் சிக்குண்டு மதிமோசம் போகிறோம். கண்ணீர்க் கணவாயாகிய இப்பிரபஞ்ச சமுத்திரத்தில் மூழ்கித் தவிக்கும் நமக்கு ஒரு தெப்பம் தேவையன்றோ? ஆம்; அதுதான் விசுவாசம். ஆதிக்கிறீஸ்துவர்கள் இத்தெப்பத்தில் ஏறிச்சென்றமையால்தான் எவ்வித ஆக்கினைக்கும் அஞ்சாமல், ஆஸ்திபாஸ்தி, பூமிகாணி, இன்பதுன்பம் எதையுமே பொருட்டா யெண்ணாமல், தங்களையும் மக்களையும் பலியாயீந்தார்கள். அதனாலல்லோ திருச்சபையும் அவர்களை சதாகாலங்களிலும் பூஜித்துக் கொண்டாடி வருகின்றது. அப்புண்ணியவாளரைப் பெற்றெடுத்து மோக்ஷம் அனுப்பினவர்கள் யார்? உங்களைப்போன்ற பெண்மணிகளன்றோ?

ஆனால் "ஆவதும் பெண்ணாலே அழிவதும் பெண்ணாலே" என்பதற்கொப்ப அக்காலப் பொன்மணிகள் முழு விசுவாசத்துடன் தங்களையும் மக்களையும் சுவாமிக்கு ஒப்

புக்கொடுத்திருக்க, நாகரீகம் மலிந்த இக்காலப் பெண்மணிகள் ஆனந்த அமிர்தத்தை விட்டு துர்க்கந்த விஷமாகிற அசுத்த நாடகங்கள், பாடல்கள், கதைகளை விரும்பி, மதி மோசம்போவது மகா விசனமே. ஆகவே, நம் கன்னிகா சிரோன்மணிகள் தம் வாழ்நாளை வீணாக்காது ஞானப்பலனடையவேண்டியே இச்சிறு புத்தகத்திற்கு "கற்பினணிகலம்" என மகுடஞ்சூட்டி, உங்களைப்போன்ற பெண்ணாயகமான அர்ச். செசிலியம்மாளின் திருச்சரிதையைச் சொல்ல வந்தேன். என்றாலும், இதை எழுதுவதில் வித்வபட்டத்தையும் பாஷை அலங்காரத்தையும் தேடாமல் சிறுவர் முதலாய் சுளுவில் பாடிப் படித்தறியவேண்டி, என் சகோதரிகளோடு பேசுவதுபோலவே வெகு சாதாரண நடையில் என் சிற்றறிவு கொண்டமட்டும் அம்மானையாக எழுதினேன். ஆகவே, கற்றோரும் மற்றோரும் இந்நூலைச் சன்மானித்து நற்பலனடைய வேண்டுகிறேன்.

மேலும் இதை அன்புடன் ஏற்று வெளியிடக் கருணைகூர்ந்து அனுமதியளித்த தூத்துக்குடி மேற்றிராசனம், சரியாய் வந்திக்கத்தக்க பிரான்சிஸ் திபூர்சியூஸ் ரோச் S.J. ஆண்டவரவர்களின் ஞானபிஷேக ஞாபகார்த்தமாய் இயற்றியமையால் அவரது பாதாரவிந்தம் சமர்ப்பிப்பதுமன்றி, இதனை முற்றும் பரிசோதித்த சங். M. அமலோற்பவநாதர் S.J. சுவாமியவர்களின் சிரமத்திற்கு எனது தாழ்மையான நன்றியறிதலைச் செலுத்துகிறேன்.

இதை வாசிக்கும் அல்லது வாசிக்கக்கேட்கும் சகலருக்கும் தேவசுதன் மெய்யான விசுவாசம் நம்பிக்கை தேவசிநேகத்தை அளித்தருளுவாராக.

**T. R. M.,**
*Client of St. Cecilia.*

# பொருளட்டவணை.





கன்னிகையும் வேதசாக்ஷியுமான அர்ச். சேசீலியம்மாளே!
எங்களுக்காக வேண்டிக்கொள்ளும்.



# "கற்பினணிகலம்"

அல்லது

## கன்னிகையும் வேதசாக்ஷியுமான
# அர்ச். செசீலியம்மாளின் அற்புதச் சரிதை.



### வெண்பா.

கத்துங் குயின்மொழிசேர் கன்னிஜெய சீலியின்மேற்
பத்திநிறை யம்மானை பாடுதற்கு—இத்தரையில்
மெய்விரித்து மானிடரை மீட்டடிமை கொண்டபரன்
கைவிரித்த பொற்சிலுவை காப்பு.



## அம்மானை.



## 1-வது அத்தியாயம்.



### கடவுள் வணக்கம்.

திங்களொளி வீசிடவே : திருக்குருசி லேமரித்த
எங்குருவே யாண்டவனே : இன்றிரங்கி யாண்டருளே
செங்குருதி தோய்ந்தயர்ந்து : திருச்சிலுவை மீதமர்ந்த
ஐங்காய வாண்டவனே : அண்டிவந்தே னுன்பாதம்.

காசினியை மீட்டுபர : கதிசேர்க்க வேண்டுமென
நாசமுற்ற மண்ணுலகை : நாடிவந்த நாயகனை.
நிச்சயமாய்ப் பெற்றுவளர் : நேயமரி சூசையரின்
உச்சிதபொற் பாதமதை : உண்மையுட னேவணங்கி.
கற்பலங்கா ரக்கொடியாள் : கன்னிகைசெ சீலியரின்
அற்புதஞ்சேர் நற்சரிதை : அறைகுவேன் தங்கையரே.
உத்தமசெ சீலியரே : உண்மையுட னுன்பதத்தை
முத்தமிட்டு வாழ்த்தியந்த : முடிவிலனைத் தோத்தரித்து-
இம்மைதனி லுன்னரிய : இணையில்லா சீவியத்தை
அம்மானை யாய்ப்பாட : ஆசீ ரளித்திடம்மா.
நன்மனதோர் போற்றுகின்ற : நாயகியே யித்தருணம்
என்னுவில் வந்திறங்கி : எந்தனுக்கு வாக்கருளே.
பத்திசுவா லர்கணங்கள் : பார்த்திபனே மிக்கேலே
இத்தருண மென்னருகில் : இறங்கிநீ வந்திடுவாய்.
மனிதாவ தாரமெனும் : மாவரிய வற்புதத்தை
கனிவாக மாமரிக்கு : காதலுட னோதவந்த.
காபிரியேல் வானவனே : கனபெரிய தூதுவனே
தாபரவா யென்நாவில் : தாவியெழுந் தாண்டருள்வீர்.
வேதாந்த விண்ணொளியே : வித்தகவந் தோணிமுனி
நாதாநீ ரென்னருகில் : காணுமிருந் தாளுமையா.
காக்ஷிநிறை மோக்ஷமதில் : கண்ணியமாய் வாழ்வேத
சாக்ஷிகளே யும்பதங்கள் : தானடைந்தேன் தாலமிசை.
மக்கள்பல பெற்றெடுத்த : மாதாபி தாக்களேநான்
துக்கமனஸ் தாபமொடு : சொல்லுவதி லேபிழைகள்.
இருந்தாலும் பெற்றவர்போல் : இதமாய்ப்பொ றுத்திதனை
சிறந்தமன தோடுவெகு : சிலமுடன் கேட்டிடுங்கள்.
வின்னமதி ருந்தாலும் : வேதாந்த வேதியர்கள்
அன்னம்போல் பாலருந்தி : அகற்றுவார் நீரதையே.

குற்றமது கண்டாலும் : கூறியிகழ்ந் தேசாமல்
கற்றவரும் மற்றவரும் : காத்தாள்வ தும்கடனே.
சீதமதி கொள்வதனச் : செல்வியரோ மெல்லியரோ !
பூதலத்தி லுள்ளகுணப் : பூவையரோ புண்ணியரோ !
கல்லாத மூடனெனக் : கண்டாலும் நல்லோர்கள்
அல்லாத மானிடரோ : அவமதித்துப் பேசிடுவார்.
தங்க முடி தானணிந்த : தாய்மரியின் மக்களேநீர்
உங்கள்பல சிந்தனையை : ஓர்புறமே நீக்கிவைத்து.
உங்களைப்போ லிவ்வுலகில் : உயர்குலத்தி லேயுதித்த
தங்கைஜெய சீலியரின் : தன்சரிதை கேட்டிடுங்கள்.
சம்மனசோர் தங்கையென : தார்தலத்தி லேயுதித்த
அம்மணியே ஆருயிரோ : ஆயேசெ சீலியரோ.
சத்தியமே மெய்மறையின் : தற்பணமே யிப்புவியில்
உத்தமியா யுற்பவித்த : ஓய்வனமே விண்ணொளியே.
கற்பலங்கா ரக்கொடியே : காதலியே கண்மணியே
துற்சனனிப் பாவிமனம் : சோர்ந்திடுதே சொல்லிடவும்.
சொல்லரிய நாதனுக்காய் : தூயவளின் பாடுகண்ட
கல்லுங்க ரைந்திடுமே : கன்மலைகள் சாய்ந்திடுமே.
செங்குருதி நீர்சொரிந்த : சீரதனைக் கேட்கையிலே
கங்கைஜலம் போலமிகக் : கண்ணீர்பெ ருகிடுமே.
மங்கையரின் மங்கையிந்த : மாதரசின் பாடுகளை
சங்கையுடன் கேட்டாலும் : சஞ்சலங்கள் தீருமம்மா.
தேடரிய வானவனின் : தேசுலவுஞ் செல்வியுற்ற
பாடுகளைக் கேட்டாலும் : பறந்தகலு மும்பவங்கள்.
ஆகையினு லென்பிரிய : அன்னைதங்கை அன்பர்களே
சாகரத்தி லுள்ளவெந்தன் : சன்மார்க்க நேயர்களே !
முன்னாளின் மாமறையோர் : மொழிப்படியே யான்பேதை
என்னாலி யன்றமட்டும் : ஏற்கையுடன் சொல்லிடுவேன்.

பத்தியுட னேபடித்துப் : பாடினல் தங்கையரே
சத்தியமா யுங்களுக்கு : சகலநன்மை யுண்டாகும்.
ஆகையினு லிப்பொழுதே : ஆதிமுத வீருக
சோகமுரு துங்களுக்கு : சொல்லுவேன் கேட்டிடுங்கள்.

---

## 2-வது அத்தியாயம்.

### நகர் வளமை.

ஓதரிய தேவபரன் : ஓர்மொழியா லுண்டமைத்த
பூதலத்தி லுத்தமர்வாழ் : புகலரிய தேசமொன்று.
அத்தேச மானதின்பேர் : ஆவலாய்க் கேட்டிடுவீர்
இத்தாலி யாவெனவே : இயம்புவா ரித்தலத்தோர்.
எத்திசையும் சூழ்கடலால் : இதமாய்க்க விழ்ந்தவதின்
மத்திபத்தி லேசிறந்த : மாநகர மொன்றுண்டு.
அந்நகரின் வண்மைதனை : ஆரணமே கூறவெனில்
சுந்தரியே யேலாதே : தோகைமயி லணங்கே.
அந்தகருக் கெவ்வளவாய் : அறைந்தாலு மாதவனின்
சுந்த்ரவொளி மாகூஷிமையின் : சூகூஷியறி வாருளரோ ?
ஆரணமே யந்தமிகும் : அந்நகரின் மாவழகை
பூரணமாய் சொன்னவர்கள் : புவனமதி லில்லையம்மா.
எத்தனைநான் சொன்னாலும் : ஏற்றமொழி யாகாமல்
அத்தனையு மேவிழலாய் : ஆகுமென்றே யஞ்சுகிறேன்.
என்றாலுஞ் சொல்லிடுவேன் : ஏக்கமுகங் கொள்ளாதீர்
நன்றாக வுங்கள்மனம் : நாளுங்க ளிப்படைய.
அந்தரத்தில் வாழுகின்ற : அமரர்கண மோரணியாய்
தந்திரமாய் வந்திரவில் : தரிசித்தே யேகிடுவார்.

மோக்ஷமதில் வாழுகின்ற : முத்தர்களை யீன்றெடுத்த
தாழ்ச்சியுள்ள மாதாவாம் : தங்கையரோ யந்நகரம்.
மேலோகர் போற்றுமந்த : மேநகரைக் கண்டோர்கள்
பூலோக மோக்ஷமென்றே : போற்றிப்பு கழ்ந்திடுவார்.
அப்பெரிய மாநகரின் : ஆனந்த சீர்தனக்கு
இப்புவியி லெங்குமொரு : இணையுமில்லை யன்னையரே.
பரமதி ரித்துவத்தின் : பார்த்திபனு ரேசுபரன்
பிரதிநிதி யானபல : பிரபலர்கள் வாழுமிடம்.
ஆனகர் தன்னிலுள்ள : அழகுவத்திக் கானரணில்
தானமதே மன் னுருவாய் : தாரணியு தித்ததுபோல்.
பற்பலரு மேமுறையாய் : பார்புகழும் பாப்புகளாய்
தற்பரனின் மாசபையை : தார்தலத்தி லாண்டுவர.
மாசில்லா ஞானகுரு : மன்னவன்ப தினைந்தாம்
ஆசீர்வா தப்பரொ னும் அர்ச்சியபாப் பாளுகையில்.
வல்லரசோ ரால்நிகழ்ந்த : வரம்பில்லாப் போரதைத்தன்
சொல்லாலே தானமர்த்தி : தோஷமுற்ற மானிடர்க்கு.
செய்யாத நன்மையெல்லாம் : செய்ததினால் சீர்சிறந்த
மெய்யான ராயரென : மேதினியோர் தாம்புகழ.
நித்தியச்ச மாதான : நேர்மைகுண நேசரென
இத்தலத்தோர் வாழ்த்தலுடன் : இறைவனடி சென்றிடவே.
புத்திநிறை ஞானபரி : பூரணன்ப தினோராம்
பத்திமிகு நாதரவர் : பாப்பரசா யாளுகிறார்.
ஆளுமிவர் செய்துவரும் : அளவில்லா நன்மைகளை
மாளாதே சொல்லிடவும் : மானிலத்தி லுள்ளவரால்.
இப்பாப்பு செய்தபல : எண்ணரிய நன்மைகளை
எப்பாப்பும் செய்ததில்லை : என்றாலு மேற்குமம்மா.
சற்குருரா யப்பரவர் : தாரணியில் வீற்றிருந்த
அற்புதமா வாசனத்தில் : அமர்ந்திலங்கு மன்னனிவர்.

கணையாழி கையணிந்து : காசினியை யாளுமிவர்
இணையில்லாப் புண்ணியனார் : இத்தாலி மன்னவனார்.
தீனதயா ளக்குணவான் : ஜெகத்குருவே யாகுமிவர்
ஈனமனு மக்களெனும் : இந்தியர்மேல் வைத்ததயை.
செப்பிடவு மேலாதே : சேதிபல வுண்டதனால்
தப்பாதோர் சங்கதியைத் : தானுரைப்பேன் நீர்மகிழ.
நாதனவர் மானிலத்தில் : நாடித்தெரிந்ததுபோல்
ஓதரிய கோத்திரத்தில் : உத்தமராய்த் தானுதித்து.
இன்பகுண மேமிகுந்த : இந்தியரா மோர்குருவை
அன்புடனே தேர்ந்தெடுத்து : ஆவலாய்ச் சொல்லிடுவார்.
உத்தமனே சத்தியனே : உண்மையிலென் புத்திரனே
சித்தமகிழ்ந் தோமுனது : சேதிகளைக் கேட்டவுடன்.
ஆண்டவரின் தோட்டமதில் : அயராது மைத்தபலன்
நீண்டபுவி மீதினிலே : நேர்முகமாய்க் கண்டிடுவாய்.
நித்தியர்பூஞ் சோலைதனில் : நீடித்து ழைத்தபலன்
சத்தியமாய்க் கண்டடைவாய் : சஞ்சலங்கள் கொள்ளாதே.
ஆண்டவருக் காகவேநீ : அன்பாயு ழைப்பதினால்
நீண்டபுகழ் மாக்ஷியுடன் : நீள்புவியில் வாழ்ந்திடுவாய்.
போற்றரிய வென்மகனே : போதகனே யின்றுமுதல்
மேற்றிரா ணியமொன்னும் : மேன்பதவி நாமளித்தோம்.
துகையில்லா மானிடர்வாழ் : தூத்துக்கு டியதனை
வகையாக நாம்தெரிந்து : வாழ்த்தினோ மத்தலத்தை.
ஒப்புயர்வே தில்லாத : உத்தமர்வாழ் பட்டணத்தை
ஒப்புரவா யித்தினமே : உன்கரத்தி லொப்படைத்தோம்.
அத்தலத்தி லுள்ளவெந்தன் : அன்பான மக்களைநீ
சித்தமகிழ் கொண்டுமிக : சீலமுட னண்டிடுவாய்.
உண்மைமறை விட்டகன்று : ஊதாரி போலலையும்
கண்மணியாம் மக்களுக்கு : காட்டிடுவாய் நல்வழியை.

தப்பிவழி விட்டகன்று : தவித்துழலும் மக்களையும்
கப்பியே சேர்த்தணைத்து : காசினியில் வாழ்ந்திடுவாய்.
மாற்றில்லா சொர்ணமணி : மாமகுடஞ் சூடியேநீ
மேற்றிரா ணியராக : மேன்மையுட னாண்டிடுவாய்.
நீண்டயிந்தி மானிடரும் : நீள்புவியி லுள்ளவரும்
ஆண்டவரே வாழ்கவென : அன்புடனே தாமழைப்பார்.
செங்கோல்த ழைத்தோங்க : தேசுலவு மன்னவராய்
மங்காநற் கீர்த்தியுடன் : மானிடரை யாண்டிடுவாய்.
தந்தோமப் போஸ்தலிக்கு : சாசனமா மாசீரை
உந்தனுக்கே முந்தமுந்த : உவந்தளித்தோம் பெற்றிடுவாய்.
என்றுரைத்த வன்றுமுதல் : என்பிரிய தங்கையரே
இன்றுமர சாளுகிறார் : இந்தியமேற் றிராணியர்தான்.
கோசரமா யாளுமிந்த : குணவாளன் யாரெனிலோ
ரோசமலர் மாவதனன் : ரோச்சென்னு மாண்டவர்தான்.
தாழ்வில்லா நங்கையரே : தாட்டிகஞ்சேர் ரோம்நகரில்
வாழுமனு மக்களவர் : வண்மைசொல்ல வாய்க்காது.
ராஜகொலு மண்டபமும் : ரத்னமணி மாலையணி
ஆஜார போஜர்களின் : அரண்மனைக ளேயனந்தம்.
மங்களஞ்சேர் கன்னியர்கள் : மாடிகளில் பாடுவதும்
சங்கீத நாதமெங்கும் : சப்தித்தொ லிப்பதுவும்.
பொங்குகடல் பேரொலியும் : பூம்பொழிலி னோசைகளும்
எங்கும்ப றந்துலவும் : இனியபக்ஷி நாதங்களும்.
பர்வதங்கள் மாக்ஷிமையும் : பாயும்பு கைரதங்கள்
கர்வமுள்ள யானைகள்போல் : கதறிவருங் காக்ஷிகளும்.
சொல்லிடவு மேலாத : சோதிமுகச் செல்வர்கள்வாழ்
பல்லடுக்கு மெத்தைகளை : பார்த்தாலும் போதுமம்மா.
அணியணியாய் நின்றிலகும் : அமலன்திருக் கோவில்களில்
மணியோசை யல்லாமல் : மனுவோசை கேளாது.

மின்னுமணி மாலையணி : மெல்லியரோ செல்வியரோ
பன்னரிய வங்கரின் : பகரறிய காக்ஷிதனே.
முற்றும்மு டிவுபெற : முன்வந்து சொல்வதெனில்
சற்றுஞ்ச லியாமல் : சாற்றிடலாம் செல்வியரோ.

---

## 3-வது அத்தியாயம்.

### நாயகியின் ஜெனனம்.

ஆதிநரர் தாம்புரிந்த : ஆதிபழம் பார்வினைக்காய்
மேதினியில் பாடுபட்டு : மேலுலகஞ் சென்றமிக.
பேர்பெரிய தேவசுதன் : பிறந்தவொரு நூறுடனே
ஆறுபத்து மூன்ருகும் : ஆண்டினிலே மாகொடிய.
மூர்க்கவெறி சண்டாளன் : மூதறின மில்லாதோன்
மார்க்கொரோ லென்னுமொரு : மாகொடிய பாவியப்போ.
வேந்தனென வார்ப்பரித்து : வெற்றிமுடி வேல்தரித்து
சாந்தமெனும் புண்ணியத்தை : சாகரத்தில் விட்டகற்றி.
கானகத்தி லேதிரியும் : கார்கோட நாகனைப்போல்
ஈனகுணப் பாதகனுய் : இந்நகரை யாண்டுவந்தான்.
சீர்சிறந்த வப்பெரிய : திருநகராம் ரோமையிலே
பார்புகழும் மன்னவர்வாழ் : பண்புறுநல் வீதியிலே.
முத்தால்ப லகணியும் : மூடிநிற்கும் மண்டபத்தில்
கொத்தாக வேஜொலிக்கும் : கோடிம ரகதங்கள்.
கடல்முத்தை நீராக்கி : கள்ளமில்லா வெண்பாலே
குடங்குடமாய்ப் பாயவிட்டு : குத்தியதைச் சேருக்கி.
கட்டிமுடித் திட்டபல : கண்ணுடி போற்சுவரை
எட்டிநின்று பார்த்தால்நம் : எதிர்பிம்பம் தோன்றுமதில்.

கணக்கில்லா மாணிக்க : கற்கள்வகை யன்றிவெகு
இணக்கமாய்த் தேடினுமோர் : ஈனமில்லா தவ்விதமாய்.
வித்தகமா சாஸ்திரிகள் : மிக்கவழ காயமைத்த
புத்திதனுக் கெட்டாத : புகழ்பெரிய மாளிகையில்.
புத்தியில்சி றந்தவரும் : புண்ணியத்தில் தேர்ந்தவரும்
சத்தியமா மெய்மறையின் : சாரமறி யாதவரும்.
எத்திசையும் கீர்த்திமிகும் : எழில்குலத்தி லேயுதித்த
மெத்தெல்லூ ஸென்னுமொரு : மேன்பிரபு வக்ஷயமாய்.
பொன்மேனி வாய்ந்தவிளம் : பூங்கொடியாள் தேவியுடன்
அன்பேயு ருவமைந்து : ஆதரையில் வந்ததுபோல்.
நோக்கிடுவோர் மெய்மறந்து : நோகாமல் தம்விரலை
மூக்கின்மேல் வைத்துமிக : மூர்ச்சித்து நின்றிடுவார்.
வனமயிலோ பஞ்சவர்ண : வாமப்ப சுங்கிளியோ
கனவொயிலாய் கூவுகின்ற : கானகக்க ருங்குயிலோ.
இன்னதெனச் சொல்லிடவே : இணையில்லா மங்கையுடன்
உன்னிதமா யவ்விருவர் : உயர்மனையில் வாழ்ந்துவரும்.
அக்கால மானதிலே : அன்புநிறை பத்தினியாள்
எக்கால முள்ளதிரு : ஏசுபரன் மாவருளால்.
சங்கைமிகு மங்கைவெகு : சடுதியிலே சூலாகி
பங்கமின்றி நம்மைமிகு : பத்துதிங்க ளுங்கடந்து.
புஷ்பம்ம லர்வதுபோல் : பூங்கொடியா ளம்பாய
கஷ்டமொன்று மில்லாமல் : கடுந்துயரங் கொள்ளாமல்.
பாங்கியர்கள் சூழநின்று : பலசோப னங்கள்சொல்ல
தாங்குதடை யின்றியப்ப : தாமதமொன் றில்லாமல்.
உற்றுறு றவினர்கள் : உளம்மகிழ வோர்மகவை
பெற்றாளென் தங்கையரோ : பேதையரோ கேட்டிடுங்கள்.
அச்சணமே வானவர்கள் : ஆர்ப்பரித்து வாழ்த்திமிக
உச்சிதமா யாசீரா : உவந்தளித்தா ரச்சிசுக்கு.

பாங்கியரு மங்கிருந்த : பாவையரும் மற்றவரும்
வாங்கியதை முத்தமிட்டு : மாமகிழ்வ டைந்தபின்னே.
ஆடினு ரெல்லோரும் : அக்களிப்பு தாளாமல்
ஓடினர் வேறுசிலர் : உபசரித்தா ருத்தமியாள்.
இவ்வினிய சேதிதனை : இச்சணமென் நாதனுக்கு
செவ்வையாய்ச் சொல்லெனவே : சென்றூரப் போதுசிலர்.
சென்றோர்சி ரம்வணங்கி : சீர்கரங்கள் தான்குவித்து
நின்றூர்க ளோரணியாய் : நேர்பிரபு முன்பாக.
ஆனந்த சாகரத்துள் : ஆழ்ந்தவந்த பாங்கியர்கள் [வார்.
தேனருந்தும் வண்டினம்போல் : சேர்ந்துநின்று சொல்லிடு
உத்தமனே கோமானே : ஓதரிய மன்னவனே
சத்தியமா யோரரிய : சம்பவந்தான் கேளுமிப்போ.
தேவியராம் தங்களரும் : திருமங்கை தேவுலக
கோவிறைவி போன்றசிறு : குழவிதனை யீன்றெடுத்தாள்.
மெய்யாயிச் சேதிதனை : மேன்கொடியா ளேமொழிந்து
கையோட ழைத்துவரக் : கற்பித்தா ளெங்களுக்கு.
என்றமொழி கேட்டவுடன் : எழுந்தார்கு தூகலமாய்
சென்றூர்க ளெல்லோரும் : சீர்பெருகு மாளிகையில்.
சந்திரனே வந்திரங்கி : சாய்ந்துறங்கும் தன்மையதாய்
சுந்திரவ தனமுடன் : தூங்குந்தன் பாலகியை.
கண்டுமகிழ்ந் தக்களித்து : கண்மணிதம் மாவியென
கொண்டாரோ மாபிரபு : கொடுத்தாரோ நன்கொடைகள்.
அக்ஷயமாய்த் தன்குழவி : ஆதரையில் வாழ்கவென
பக்ஷமுட னேகொடுத்தார் : பலகோடி ரத்தினங்கள்.
களஞ்சியத்தி லுள்ளபல : கண்ணொளிமின் நாணயத்தை
அளந்துவளந் தேகொடுத்தார் : ஆதரையோர் தாமகிழ.
இவ்வளவு தானென்வே : எண்ணுதீர் தங்கையரோ
செவ்வையாய்ச் சொல்லவெனில் : சீர்பெருகு மாளிகையில்.

இங்குமங்கும் நின்றார்கள் : ஈனமில்லாப் பாங்கியர்கள்
தங்கவடி வோடிலங்கும் : தாரகையி னங்குயிலை.
பார்க்கபல பாங்கியரும் : பால்கொடுக்கத் தாதியரும்
சேர்த்தணைத்து முத்தமிட : செல்விழிகொள் மாதர்களும்.
பணிபுரியப் பாவையரும் : பாங்குவர்ணக் கல்லிழைத்த
அணிமணிக ளால்சிசுவை : அலங்கரிக்க சேடிகளும்.
நந்தவனச் சோலையிலே : நறுமலர்கள் பூத்ததுபோல்
சுந்திரபொற் பாலகியை : சூழ்ந்திருந்தா ரவ்விடத்தில்.
அந்நேர வேளையிலே : அப்பிரபும் பத்தினியும்
சொன்னசில வார்த்தைகளை : சொல்லிடுவே னுங்களுக்கு.
பாங்கியரோ யெம்மனையில் : பாசமுட னேயிருந்து
சாங்கியநல் லேவல்செய்யும் : சாந்தகுண வாளர்களே.
தாவிநிற்குந் தாதியரே : தாரணியி லெங்களரும்
ஆவியேதா னிக்குழந்தை : ஆகையினா லின்றுமுதல்.
முற்றுங்க ரிசனமாய் : மூவுலகு மேற்கவந்த
நற்றும ணாமகவை : நாளுமுங்கள் கண்மணிபோல்.
சற்றுஞ்சலி யாமல்வெகு : சாக்கிரதை யாகமனப்
பற்றுதலோ டிந்தசிறு : பாலகியைத் தான்வளர்ப்பீர்.
என்றுபல கட்டளையை : இன்பமுட னேயுரைத்து
அன்றுமுத லவ்விருவர் : ஆனந்தங் கொண்டிருந்தார்.
அம்பிகையே யந்தவிரு : தம்பதிகள் பாக்கியத்தை
எம்போலி யானவரால் : எடுத்துரைக்க வேணுவதோ.
பிள்ளையின ருமைதனை : பெற்றவளே யல்லாமல்
கள்ளமல டியொருக் : காணுமறி வாளோசொல்.
பேசுவதெல் லாமினிய : பெண்குயிலைப் பற்றியன்றி
ஆசையுடன் பேசார்கள் : அவ்விருவர் வேறெதையும்.
காலையிலும் மாலையிலும் : கண்வளரு மட்டும்பல
வேலையிலும் சோலியிலும் : வித்தகமாய்ப் பேசிடுவார்.

துப்புறவா யவ்விருவர் : தூங்கிடுமவ் வேளையிலும்
குப்பெனவே தாமெழுந்து : குதித்திடுவார் பேசிடவே.
மாலையணி செல்வியிவள் : மாசில்லா வெண்பிறைபோல்
காலமுறை தன்னளவில் : கதித்திடுவா ளென்பார்கள்.
இளங்குயிலே நாங்களின்னும் : ஈராறு மாதமதில்
விளங்காவுன் பேச்சுகளை : விரைவிலே கேட்டிடுவோம்.
வாமப்ப சுங்கிளியே : மாகனமே வுன்சிறிய
தாமரையா நற்கரத்தை : தாவியேநீ நீட்டுவதும்.
வேளையெந்த வேளையிலும் : வினைகளறி யாதவிளம்
காளையைப்போல் துள்ளிடவே : களிப்பதுவும் காணரிய.
பாலகியே பேசுமெங்கள் : பசுங்கிளியே யென்றவர்கள்
சாலரிய முத்தமதை : சலியாம லேகொடுப்பார்.
பின்னுமந்த பேர்பெரிய : பிரபுமவர் பத்தினியும்
சொன்னசில வாக்குகளை : சொல்லிடுவேன் கேட்டிடம்மா.
மல்லிகைபூப் போலுதித்த : மாதரசே வுன்சிறிய
பல்லழகைக் கண்டவர்கள் : பணிகுவா ருன்பதத்தை.
வல்லவரும் நல்லவரும் : மானிலத்தி லுள்ளவருன்
சொல்லழகைக் கேட்கமலர் : சுறும்புபோல் சூழ்ந்திடுவார்.
தேசுலவு மாமயிலே : தெள்ளமுதே யுன்கரத்தை
வீசிநடந் தேகுவதை : வேந்தர்களுங் கண்டுவிட்டால்.
தவமேயோர் பெண்ணுருவாய் : தார்தலத்தி லேயுதித்த
நவகணத்தின் மாதரசோ : நாமறியோ மென்றவர்கள்.
மரம்போலே நின்றுசிலர் : மாமயிலே வுந்தனெழில்
காமதனைப் பற்றியேநான் : கல்யாணஞ் செய்யேனோ.
என்றுமனப் பால்குடித்து : ஏகமா யக்களித்து
சென்றேகும் பாதையிலும் : சிந்தித்துத் தானடப்பார்.
பாரரிய பொக்கிஷமே : பாருலகி லுன்னைமணம்
யார்புரிவா னெவனோ : ஆதலையில் பாக்கியவான்.

தீர்க்கசுப மங்கிலியாய் : செந்திருப்போல் வாழுகையில்
யார்க்குமெ ளவுபடா : வானந்தங் கொண்டிடுவோம்.
உன்னைப்போ லுன்கமல : உந்தியிலு திக்கும்பல
நன்னயஞ்சேர் பாலர்களை : நாதன்கி ருபையினால்.
மதிவதனக் கண்ணேயெம் : மாமணியே மேதினியில்
பதினாறும் பெற்றுகன : பெறுவாழ்வு வாழ்ந்திடுவாய்.
என்றேயத் தம்பதிகள் : எண்ணாத வெண்ணமெல்லாம்
ஒன்றாயு ருவமைத்து : உள்ளமகிழ் கொண்டிருந்தார்.

---

## 4-வது அத்தியாயம்.

### பிரபஞ்ச மாய்கை.

வாருங்கள் தங்கையரே! : வாணிகனி லாசைதனை
கூறிடுவார் சான்றோர்கள் : கோணியுங்கொள் ளாதெனவே.
மண்ணுலகை யுண்டமைத்த : மாதவன்போல் காசினியோர்
எண்ணுகின்ற வாசைகணக் : கில்லையம்மா தங்கையரே.
உண்பதொரு நாழியேதான் : உடுப்பதோ நான்குமுழம்
எண்பதிரு கோடிநினைந் : தெண்ணுகிறா ரிப்புவியோர்.
வாழ்வுசில காலமிந்த : மானிலத்து மானிடர்க்கு
தாழ்வுசில காலமென்று : சாற்றியதை யோராமல்.
ஆதலாயி லேபலபேர் : அன்னவற்றை யேமறந்து
காதல்பெ ருகிடவே : காசினியில் வாழுகிறார்.
மின்னலது தோன்றினதும் : மிகவேம றைவதுபோல்
கன்னல்மொழி தங்கையரே : காசினியில் வாழ்வதெல்லாம்.
நீர்மேலே காண்குமிழி : நிமைப்பொழுதா மென்பதுபோல்
பேர்பெறவே வாழ்ந்தவரின் : பேர்முதலாய்க் காணேமே.
சீர்பெருகும் தங்கைஜெய : சீலியம்மாள் தான்ஜெனித்து
ஈரைந்து மாதங்களே : இன்னுங்க ழியாமுன்.

மெத்தப்பு கழ்படைத்து : மேட்டிமையாய் வாழ்ந்தமகா
மெக்தெல்லூ ஸாம்பிரபு : மேதினியில் மாண்டுவிட.
அன்றேவோ ரூழியனும் : ஆத்திரமா கக்கிளம்பி
சென்றுனே தேவியிடம் : சேதிதனைச் சொல்லிவர.
ஆகவே யென்பிரிய : அன்பர்களே துக்கமெனும்
சாகரத்துள் மூழ்காமல் : சாந்தமுடன் கேட்டிடுங்கள்.
இவ்வாறே யுங்களையும் : எங்கிப்ப தறவிட்டு
செவ்வையாய் மேனுலகம் : சேர்ந்தமனு மக்களேநீர்.
எண்ணிம னங்கசிந்து : ஏராள நீர்ச்சுனைபோல்
கண்ணீரு திர்க்காமல் : கவனமாய்க் கேட்டிடுங்கள்.
அந்நேர வேளையிலே : அங்கிருந்த பாங்கியர்கள்
சின்னபின்ன லாடியவர் : சிந்தைமகிழ் வேளையம்மா.
பூங்குழலாள் தேவியப்போ : புத்தமுதாய்ப் பெற்றெடுத்த
தீங்குழவி மாதரசை : தேட்டமுடன் கையேந்தி.
கானேக னிரசமே : கார்முகிலே கற்பிஞெளி
மானேம ரகதமே : மாமயிலே மாங்குயிலே.
வந்தியென மானிடர்கள் : வாய்பதறிச் சொல்லுகின்ற
நிந்தையைய கற்றவந்த : நீள்புவியின் தாரகையே.
எந்தனிரு நேத்திரமே : எங்குலநற் பாத்திரமே
சொந்தமென வந்தவிளஞ் : சுந்திரநட் சேத்திரமே.
சுத்தமுத்து சிப்பியினுள் : சூழ்ந்திருக்குந் தன்மையதாய்
பத்துமதி யென்வயிற்றில் : பாலகியாய்த் தானுதித்த.
தெள்ளமுதே பைங்கிளியே : தேசுலவுந் தேன்மொழியே
கள்ளமில்லா வெங்களது : காரிழையே யென்றவளும்.
மார்போடே சேர்த்தணைத்து : மாசில்லாப் பாலகியை
ஆர்ப்பரித்துக் கொஞ்சியவள் : அகமகிழு வேளையிலே.
வந்தானே ஆழியனும் : வாய்பதறி வாசலிலே
விழுந்தானப் போதுடனே : விளம்பிஞன் சங்கதியை.

சொல்லியவன் சொல்லாமுன் : சோலைமயில் போன்றவிள
மெல்லிரல்லாள் மாதரசின் : மேன்மைநிறை தாயவளும்.

மின்னுதி டிவிழுந்த : மேனையதா யன்னையவள்
எண்ணாது வெண்ணியபின் : ஏங்கிமனம் பேதலித்து.

ஆணைப்பி ரிந்தலையும் : அன்றிலைப்போ லேகதரி
நாணமிருந் தேவியவள் : நாகமது போலெழுந்து.

தேங்கித்தி கைத்தழுது : செல்விமுகஞ் சோர்வடைந்து
ஏங்கியவள் மார்பறைந்து : ஏமாறிக் கைமுறித்து.

பதரித்து டிதுடித்து : பாலகியைப் பாங்கியிடம்
உதரிக்கொ டுத்தெழுந்து : ஓடுகையி லங்கிருந்த.

பக்ஷமுள்ள தாதியரும் : பாங்கியரும் சேடியரும்
அச்சணமே பாய்ந்தார்கள் : அன்னையர்பின் னெல்லோரும்.

மின்னலொளி போலவெகு : வேகமா யோடுமந்த
கன்னல்மொழி தேவியொரு : கணப்பொழுதில் சேர்ந்த
வுடன்.

கண்டாளே தன்னினிய : காதலனைக் கண்டவுடன் [கள்.
கொண்டாளே தன்மனதில் : கொள்ளொண்ணு சஞ்சலங்

துப்பறியா தேவியவள் : துயரமொடு நாயகன்மேல்
குப்பெனவே வீழ்ந்தெழுந்து : கூவென்ற முதலறி.

ஐயையோ நாயகனே : ஆதரையில் நானுமினி
மெய்யாக வாழவுந்தான் : மேலவனே நீதியுண்டோ.

தண்டாம ரைக்கரனே : தர்மனே யுன்முகத்தை
கண்டாலும் தீர்ந்திடுமே : கனதுயரம் நீங்கிடுமே.

சிரமில்லா முண்டமென : சீர்குலைய வென்னைவிட்டு
அரைநொடியில் மாண்டீரோ : ஆதியிடஞ் சென்றீரோ.

அடியேயென் தாதிகளா : அன்னையென்தன் மேனியது
பொடிப்பொடியாய்த் தானொறுங்கி : போகுதடி யெந்த
[னுயிர்.

சூரியனில் லாமல்மதி : சோதிகொடுக் காததுபோல்
ஆரியனில் லாமனேயில் : அரசுரிமை செய்திடவோ.
மண்ணுய்ப்பி றந்தாலும் : மாகூஷியுண்டு மானிலத்தில்
பெண்ணுருவாய் நான்பிறந்து : பெற்றசுகம் பொதுமடீ.
வளர்ந்தபெ ருமையென்ன : வாழ்ந்தவென்ன ருமையென்ன
இளந்தைப்ப ருவமென்ன : இக்கதிக்குள் ளானேனே.
என்றழுது பேதையவள் : எழுந்தெழுந்து மேல்விழுந்து
கன்றினைப்போ லேகதறி : காதலனைக் கண்ணேற்றி.
சித்திரப்பூம் பாவையவள் : சிந்தியகண் ணீரொழுக
முத்தமிட்டு மாரடித்து : மூர்ச்சித்துச் சோர்வடைந்து.
காதலனின் பாதமதில் : கட்டழுகி தான்வீழ்ந்து
காதல்மிகு மொப்பாரிக் : கண்ணீரு திர்த்தழுது.
சொல்லிடுவாள் தாதியரோ : சூட்சமுடன் சொல்லுவதை
மல்லிகைப்பூக் கூந்தலரோ : மங்கையரோ கேட்டிடுங்கள்.
என்னழகு சோபனத்தை : ஏற்றுமகிழ் வுற்றவெந்தன்
கன்னல்மொழி மன்னவனுர் : கணையாழி கையிலிட்டு.
சட்டமிகுந் தேவியெனச் : சாற்றியிந்த மானிலத்தில்
மட்டுதிட்ட மில்லாத : மகிழ்வுடனே வாழ்ந்தோமே.
அன்றுயெந்தன் சுந்திரன்தான் : ஆசையுட னேகொடுத்து
நின்றமுத்த மின்னமுமென் : நினைவிலிருந் தாடுதடி.
செப்பியசுற் போதகங்கள் : செவியைவிட்டு நீங்காமுன்
இப்புழுதி மண்ணிணுக்கோ : இறையானீர் மன்னவனே.
ஐயையோ நாயகனே : ஆதரையி லென்னைவிட்டு
மெய்யாக மாண்டீரோ : மேலுலகஞ் சென்றீரோ.
தாலமதி லிக்கொடிய : தாழ்வுபெறத் தானோநான்
சூல்வயிறு கொண்டிந்த : சுந்தரியைப் பெற்றெடுத்தேன்.
பாலகியுந் தான்வளர்ந்து : பாராளும் மன்னவனை
கோலமணந் தான்புரிந்து : கொண்டிருக்கப் பார்த்திடுவே [ன்.

என்றீரோ யென்றதெல்லாம் : இலவங்காய் காத்தகிளி
நின்றிருந்த மாகதைபோல் : நீங்கினதே யென்றுரைத்து.
கடல்நீர்கு முறுதல்போல் : கதறியழு மோசையதால்
மடமாதர் மற்றுமுள்ளோர் : மனதுமிகத் தாளாமல்.
தாதியர்க ளோர்புறமும் : தர்மகுண பாங்கியரும்
வாதியர்க ளோர்புறமும் : வண்டினங்கள் போலிறைந்து.
அழுங்குரலைக் கேட்டுநின்ற : அரண்மனையி லுள்ளவரும்
ஒழுங்காய வர்களுடன் : ஓசையெழக் கூவினதால்.
காரிருளின் மேகமது : கர்ச்சித்தி டிப்பதுபோல்
கோரமுடன் கேட்டதம்மா : கோவென்ற ழுதகுரல்.
ஆண்டுபல வாண்டாக : அழுதுபுரண் டாலுமம்மா
மாண்டாரை யிவ்வுலகில் : மானிடர்கள் காண்பதெப்போ?
கூந்தல்கள விழ்ந்துவிழ : கூத்தாடி மார்பறைந்து
சாந்தமில்லாப் பெண்பலரை : சாடிப்பி டித்தழுது.
ஒப்பாரி வைத்துமிக : ஓசையெழக் கூவிடினும்
இப்பாரை விட்டகன்றோர் : இனிவருவ தெக்காலம்?
ஆகவே கேட்டுவரும் : அன்னைதங்கை யானவரோ!
சோகமுற வேயழுது : சோர்ந்தயர்ந்த சுந்தரிதன்.
மரித்தகன்ற காதலனை : மண்ணில்கிடத்தி மிகத்துமிக
சிரித்துமுகம் நோக்கிடுந்தன் : சேயிழையைக் கையேந்தி.
நீண்டகுரல் காகங்கள் : நிமையில்க லைவதுபோல்
ஆண்டகையும் தாதிகளும் : அகன்றார வர்மனைக்கு.

---

## 5-வது அத்தியாயம்.



### மரணுபாய விபத்து.

இந்தவிதம் நேயர்களே ! இருக்குமந்த நாளையிலே
கந்தமணி தேவியவள் : காசினிவாழ் வைக்கலாந்தாள்.
என்றாலும் தன்னினிய : ஏகமகள் பாலகியை
நன்றாகப் பார்த்துவர : நவின்றாள்தன் தாதியர்க்கு.
சத்தியமே நீங்காமல் : சன்மார்க்கம் மாறாமல்
முத்தியைய ளித்திடுமா : முகலோனைத் தோத்தரித்து.
ஈனகுண மெள்ளளவும் : இல்லாம லெப்பொழுதும்
தானமெனும் புண்ணியத்தை : தாராள மாய்ப்புரிந்து.
பத்திநிறை கற்பழகும் : பாகொழுகும் ஞானமுமே
எத்தினமுஞ் சீர்முகத்தில் : இசைந்திலகு மேனையதாய்.
பேருக்கு வந்தகன : பெருந்தகமை வாய்ந்தவொரு
சீராளென் றோர்சிறுமி : சித்திரம்போ லம்மனையில்.
மான்விழிகள் போன்றசிறு : மருட்பார்வை கொண்டவளா
ஊன்வளர்க்க வம்மனையில் : ஊழியங்கள் செய்துவந்தாள். [ய்
நற்குணபொற் பாலகியாம் : நன்மகவுக் கெப்பொழுதும்
சற்குணநற் பூஷணியே : சங்குப்பா லூட்டிவந்தாள்.
தாண்டிக்குதித் தாடியுங்கள் : தலைகீழாய் நின்றிடினும்
ஆண்டவனார் சித்தமதற் : கட்டியுண்டோ தங்கையரே !
மாயமாய் வந்ததம்மா : மாசில்லாப் பாலகியாள்
நாயகிசெ வியர்க்கு : நாலாறு மாதமதில்.
கண்டதுக டுங்காயல் : கர்த்தனவர் கட்டளையால்
தண்டாம ளைமுகத்தாள் : தாயகியும் சோர்வடைய.
கண்டாளோர் தாதியப்போ கண்ணீர்விட் டேயழுது
சென்றாள்தன் தேவியிடம் : சேதிதனைச் சொல்லிவர.

இட்டமா யோடியந்த : ஊக்கமிகுந் தாதியுங்கை
நீட்டியே மார்பறைந்து : நீண்டகுர லோசையுடன்.
"ஒருமகளின் தாயாரே! உருகுதம்மா நெஞ்சமது
சிறுமியா மென்னுடைய : திரேகம்ந டுங்குதம்மா.
எமையாளு மன்னையரோ! ஏங்கிடுதே யெம்மனது
இமைப்பொழுதில் வந்ததம்மா : நிஷ்டூர மெங்களுக்கு.
விளம்பிடவு மென்னுடைய : வினையில்லா நாவதுதான்
தளம்பித்து டிக்குதம்மா : தர்மகுண மாதரசே!
ஆடிவிளை யாடிவரும் : அதிரூப பாலகியை
காடிப்பிடித் தாட்டுதம்மா : நாசமிகுங் காயலது."
என்றுசொல்லிப் பாங்கியவள் : ஏங்கிடவே பெற்றவனை
சென்றுடனே பாலகிசெ : சீலியெனும் தன்மகளை.
வாரியெடுத் தேயணைத்து : வதனமுத்தி தான்கொடுத்து
வீறிட்ட ழுதலறி : விளம்பின "ளென்னருமை.
யாகொழுகுஞ் செவ்வாயின் : பாலகியுன் தந்தைமரித்
தாகவில்லை கண்மணியே! அவனிதனி லோர்வருஷம்.
தாரணியி லெந்தனையே : தன்னுயிர்போ லாதரித்து
பூரணமாய்க் காத்துவந்த : புகலரிய வென்னினிய.
நாதனையே நானினைந்து : நசிந்துருகு மென்னுடைய
வேதனையை நீக்கவந்த : வித்தகியே! நீயுமென்னை.
விட்டுப்பிரிந் திட்டாலென் : வேதனைகள் தாளாமல்
சிட்டாய்ப்ப றந்திடுமே : ஜீவனுமோர் கைநொடியில்.
நொய்யுதடி யங்கமெல்லாம் : நோகுதே யென்னுடலம்
ஐயோயி தென்விதியோ : அன்னையைநீ விட்டகல.
மங்கிமடிந் தேகிடவோ : மாபாவி யென்னுடைய
அங்கமது நொந்திடவே : அன்றுன்னைப் பெற்றெடுத்தேன்.
நேசமிகும் பாலகியே! நிகரில்லா நாயகியே!
காசினியி லிக்கொடிய : காக்ஷிக்கோ வின்றெடுத்தேன்?

ஆரணமே கண்ணொளியே ! ஆர்கலையே விண்ணொளியே !
காரணமு மின்னதெனக் : காட்டிடம்மா வன்னையர்க்கு.
பாலகியே செங்கதிரோ : பாக்கியமே செல்வியேயுன்
பாலொழுகும் வாய்திறந்து : பாவியெனக் கோதிடம்மா."
என்றழுது பாங்கியரை : ஏசிக்க டிந்திடவே
அன்றவர்கள் தந்தார்கள் : அருமருந்தை யன்னையிடம்.
வாரமல்ல நாட்களல்ல : வண்மையுட ணோர்மாதம்
நேரமறிந் தேயவர்கள் : நேயமுட னேகொடுத்தும்.
மும்முறித்தே பாலகியை : மூர்க்கமாய்த் தாக்குதல்லால்
செம்மையா யோர்பலனும் : செய்யவில்லை யம்மருந்து.
செக்கிலிட்ட வெள்ளதைப்போல் : சேர்த்துப்பி ழிந்திடவே
திக்குமுக்க லாடுதம்மா : சீர்குழந்தை தான்மரிக்க.
பட்டணிந்த பாலகியாள் : பட்டதுன்ப மத்தனையும்
திட்டமுடன் சொல்லவுமென் : தேகம்ப தருதம்மா.
ஐயையோ தங்கையரோ ! : ஆதரையில் பிள்ளைகளை
மெய்நோகப் பெற்றெடுத்த : மெல்லியரோ மாபிணியால்.
ஆறுட்டம் மேலிடவே : அங்கிருந்த தாதியர்கள்
மாறுட்ட மின்றிசிசு : மாண்டாலும் வாசியென்றார்.
பாலகியு மப்பொழுதே : பார்க்கிறாள் பாழுலகை
நீலமணி பொன்விழியால் : நிமைக்குநிமை கண்திறந்து.
வானுலக மேகிடவே : வழிவிடுங்க ளென்பதுபோல்
தேனமுதச் செல்விபிரு : சிரகரத்தை யாட்டுகிறாள்.
பையவே மூச்சடங்கி : பாலகியு டல்நடுங்க
கைதவறி விட்டதென்று : கத்துகிறா ரெல்லோரும்.
ஆவிபிரிந் திட்டதென : அங்கிருந்த தாதியர்கள்
கூவியவர் மார்பறைந்து : கூவென்ற லறுகிறார்.
எல்லாம்மு டிந்ததென்று : ஏக்கமுகங் கொண்டவர்கள்
வில்லாய்வ ளைந்துகொண்டு : வீறிட்ட லறுகிறார்.

மற்றவரோ யிவ்விதமாய் : மார்பறைந்து மாய்கையிலே[ன்ன ?
பெற்றவளின் வேதனையை : பேதையன்நான் சொல்வதெ
முந்தித்த வம்புரிந்து : முந்நூறு நாட்சுமந்த
சுந்திரத்தா யல்லாது : தொல்லுலகில் யாரறிவார்.

அன்னையந்த நேரமதில் : அடைந்ததுய ரத்தனையும்
இன்னதென நீரறிய : இதுவேச மயமம்மா.

மாடப்பு றாவினமே : மாமயிலே யுன்பிறப்பை
பாடிவரு மென்னையிந்த : பாரினில்விட் டேயகல.

வேண்டாமென் நாயகியே : வேதனையோ டென்னைவிட்டு
தாண்டிடவும் வேண்டாமென் : தாரகையே தாயேநான்.

விழுந்தழுது வுன்பதத்தை : மேவிப்பி டித்துதினம்
தொழுதுவரு மென்னுடைய : தோஷமற வேண்டிடம்மா.

---

## 6-வது அத்தியாயம்.

### கிறீஸ்துவ பாங்கி.

யாகாய்ம னமுருகும் : பாவையரோ! யாண்டவரால்
ஆகாத காரியங்கள் : அவனிதனி லேயுளதோ ?

எல்லோரும் பாலகியை : ஏகமாய் சூழ்ந்துநிற்க
வில்லம்பு பாய்வதுபோல் : விரைந்தோடி னொருத்தி.

மாறும னதுடனே : மானைப்போ லோடுமந்த
சீராளெ னுந்தாதி : சென்றவுடன் தன்மனையின்.

வாசல்க தவடைத்து : வாகுடனே தாளுமிட்டு
பாசுரம்போ லோசையெழப் : பாவைக்கண் ணீர்சொரிந்து.

காஷ்டப்பிணம் போலவந்த : கட்டழகி பூமியின்மேல்
சாஷ்டாங்க மாய்விழுந்து : சர்வேச னைத்துதித்து.

பூவில்மனு வாய்ப்பிறந்து : புதுமைகளி னுல்சிறந்து
பாவிகளுக் காயுயிரை : பாசமுடன் தந்தவெந்தன்.

ஆண்டவரோ யான்பாவி : அழுங்குர லுக் கேயிறங்கி
நீண்டசிலு வைதனிலே : நீரடைந்த பாடுகளே.

பார்த்துமன முற்றிரங்கி : பாலகிக்கு யிரளித்தால்
சேர்த்திடுவேன் நானவளை : சீலமிகு முன்சபையில்.

என்றவளும் வேண்டியபின் : எழுந்தவுட னுத்திரமாய்
சென்றுளென் தங்கையரோ : தேவியர ரண்மனைக்கு.

சிந்தைதனிந் தோடுமந்த : சீர்சிறந்த தாதியவள்
நிந்தைமிக நேருமென : நினைந்துமனம் புண்ணுகி.

அற்பசொற்ப தோஷமல்ல : அடுக்குமோ வாண்டவர்க்கு
பொற்பாவை பாலகிக்கு : புகழ்ஞானஸ் நானமதை.

கொடுக்கவறிந் துள்ளவள்நான் : கூடவே தானிருந்தும்
கொடுக்காது யிர்பிரிந்தால் : கோமான்பழிசுமர.

மறையோரு ரைப்படியே : மாண்டிடுமிப் பாலகியாள்
நிறைமோக்ஷ லோகமின்றி : நீடூழி காலமெல்லாம்.

இருட்டான வோரிடத்தில் : இருந்திடுமே யென்றெண்ணதையும்
பொருட்டாயெண் ணுமலவள் : போனவுடன் சொல்லுகிறுள்

"அஞ்சிடவே வேண்டாமென் : ஆண்டகையே ! வுந்தனிடம்
கெஞ்சிடுமோர் மன்றுட்டை : கேட்டடனுத் தாரமதை.

தந்திடுவீ ராமாகில் : தற்பரன்நீர் பெற்றெடுத்த
சிந்தாம ணிமகளை : சேதமின்றி காத்திடுவார்."

என்றவளுஞ் சொல்லாமுன் : ஏக்கமுகம் நீக்கியவள்
" இன்றுடனே செய்திடம்மா : ஏதுந்தடை யில்லையடி.

எப்படியா னுலுமெந்தன் : ஏகமகள் தான்பிழைத்தால்
செப்பிடுவா ருன்பேரை : சீலமுடன் மானிடர்கள்."

என்றியம்பக் கேட்டசிறு : இளம்பாங்கி யப்பொழுதே
ஒன்றுய்மூன் றுயொளிரும் : ஓதரிய தேவனைத்தன்.

சிந்தைகளி கூர்ந்துடனே : சிரங்குனிந்து தோத்தரித்து
அந்தமாதி யில்லாத : ஆனந்தங் கொண்டவளாய்.
கஞ்சமலர் மாவதனக் : காரிழையா ளப்பொழுதே
சஞ்சலமொ ழிந்ததுபோல் : சாடியவ ளோடியப்போ.
தேடினளோர் பாத்திரத்தை : திரட்டினள் நல்ஜலத்தை
ஓடோடி வந்துடனே : உள்நுழைந்தா ளப்பொழுது.
மெய்சோர்ந்து மூச்சடைந்து : மேல்நோக்கும் பாலகியை
கையேந்திக் காத்திருந்த : காதல்நிறை தாயினிடம்.
சொன்ன "ளென் நாயகியே ! : சோர்ந்துமனம் வாடுவதில்
என்னபல னுண்டுகண்டீர் : ஏகபரன் சித்தமின்றி.
ஒன்றுமாவ தில்லையம்மா : ஓய்ந்தழுகும் நம்மாலே
இன்றுமுதல் பாலகியை : ஏகபரஞ் சோதியர்க்கு.
காணிக்கை யாய்க்கொடுத்து : காத்திருந்து வேண்டல்செய்
மாணிக்கம் போல்துலங்கி : மானிலத்தி லேதழைத்து. [தால்
அக்ஷயமாய் வாழ்வடைந்து : அவனியோர் போற்றிடவே
நிச்சயமா யென்றென்றும் : நீடூழி வாழ்ந்திடுவாள்.
ஆகையின லிக்கணமே : ஆதிபிதா வானவர்க்கு
தாகமுடன் வாக்களித்து : தந்திடவு மட்டியுண்டோ ?"
"உத்தமியே சீராளே ! ஓர்தடையு மில்லையென்று
சத்தியமாய்ச் சொல்லுகிறேன் : சந்தேகங் கொள்வதெனில்.
மெய்வாக்கி தென்பதற்கு : மேதினியில் நீதொழுவும்
தெய்வமே சாக்ஷிநிற்க : செய்திடம்மா வுன்மனம்போல்."
என்றவுடன் தாதியவள் : ஏகனையே போற்றிசெய்து
கொண்டுவந்த பாத்திரத்தை : கூசாம லேயெடுத்து.
குற்றுயிராய்த் தானிருக்கும் : குழந்தைசிர சானதின்மேல்
கற்றதிரு மந்திரத்தை : காதலொடு தான்மொழிந்து.
நிதானித்துச் சொல்லுகிறள் : நேயஜெய சீலியுன்னை
பிதாச்சுத னிஸ்பிரீத்தின் : பேரரிய நாமமதால்.

கழுவுகிறே னின்றுமுதல் : கர்த்தனருங் கையதனில்
வழுவாது யிரடைந்து : வாழ்ந்திடுவா யென்றுசொல்லி.
ஞானஸ்நா னங்கொடுத்து : நன்மைநிறை பாலகிக்கு
போனவுயிர் வந்ததென்று : பூரித்து ளம்மகிழ்ந்து.
பஞ்சணைமே லோரறையில் : படுக்கவைத்து பக்கம்நின்று
அஞ்சாம னத்தினளாய் : ஆண்டவனைத் தோத்தரித்தாள்.
கங்குல்ம றைந்திடவே : கதித்தொளிரும் சந்திரன்போல்
பொங்கும்ம னைகளில்வாழ் : புண்ணியஞ்சேர் தங்கையரே!
தாதியவள் தாயுடனே : தனித்திருந்து வேண்டல்செய்து
ஓதிடவே யவ்விருவர் : ஒப்புரவாய்க் கண்விழித்து.
உறக்கமின்றி கஸ்தியுடன் : ஓரிரவைப் போக்கியபின்
சிறக்கவெழுந் தார்களம்மா : சீரான காலையிலே.
வேகின்ற ளன்னைமன : வேதனைகள் தாளாமல்
போகின்ற ளாவலுடன் : புத்திரியைத் தான்பார்க்க.
அந்நேர வேளையிலே : அம்புலிபோ லக்குழந்தை
வின்னமொன்று மில்லாமல் : விரைந்தயர்ந்து தூங்குதம்மா.
அருங்குழவி செல்வதியாள் : அவ்வறையி லார்ந்தயர்ந்து
உறங்குவதின் சூக்ஷமதை : ஒன்றுமறி யாததினால்.
மின்னலிடை யன்னையவள் : மீறிமனஞ் சோர்ந்தவளாய்
என்னவினி செய்திடுவேன் : ஏகமகள் மாண்டனளோ.
என்னவோ நானறியேன் : ஏகனே யென்றலறி
சின்னத்து யில்விலக்கி : சீக்கிரமாய்ப் பார்த்திடவே.
துக்கக்கு றிகளின்றி : தூங்குந்தன் பாலகியை
மிக்கமகா வூக்கமுடன் : வெகுநுணுக்க மாயறிந்து.
அக்களிப்ப டங்காமல் : ஆனந்தங் கொண்டவளாய்
எக்காள முதுதல்போல் : இறைந்தா ளதைக்கேட்டு.
ஓடிவந்தாள் சீராளும் : ஓ! ஓ! ஓ! வென்றலறி
நாடிவந்த பாங்கியளை : நாட்டமுடன் சேர்த்தணைத்து.

விம்மிக்கண் ணீருதிர்த்து : வேகமாய்ச் சொல்லுகிருள்
" இம்மையிலே நானெங்கும் : இப்புதுமை கண்டதில்லே.
அம்மம்ம ! நம்குழந்தை : அற்புதமா கற்பகம்போல்
செம்மையாய்த் தூங்குதடி : செல்வவடி வேயிலங்க.
அந்தரமா யிவ்விரவில் : ஆண்டவர்தான் வந்தாரோ ?
சுந்திரபொற் பாலகிக்கு : சூக்ஷவுயிர் தந்தாரோ ?
நானறியே " னென்றுசொல்லி : நங்கைபல முத்தமிட்டு
தேன்வண்டு போலிறைந்து : தேம்பியழும் வேளேயிலே.
ஆனந்தந் தாளாமல் : அந்தமிருந் தாதியவள்
தானுந்தன் தேவியுடன் : சந்தோஷத் தாலழுக.
வீணையொலி கேட்குதென்று : விரைந்துறக்கும் பாலகியும்
கோணுமை லேவிழித்துக் : கொண்டழுக வட்பொழுதே.
பாய்ந்தாரி ருவருமாய் : பாலகியைக் கையேந்தி
ஓய்ந்தார்க ளில்லேயம்மா : உத்தமிக ளப்பொழுதே.
சச்சிதா னந்ததிரு : சர்வேச னேநினைந்து
கச்சிதபொற் பாலகிக்கு : கணக்கில்லா முத்தமிட்டு.
வினேகளேந்த வேதாந்த : விண்ணெளியைத் தோத்தரித்து
மனமாற வாழ்த்தியபின் : மாமனேயி லுள்ளவர்க்கு.
கொடுத்தாளோர் கட்டளேயை : கோதில்லாப் பாக்கியர்கள்
அடுத்தடுத்து வந்துடனே : ஆவலாய் வாய்பொதிந்து.
பட்டாளச் சேவகர்போல் : பாவிநிற்க மத்திபத்தில்
கட்டாயி ருவர்நிற்க : காதலுடன் சொல்லிடுவாள்.
" வகைமோசம் வந்ததென்று : வாடிமனம் புண்ணுகி
திகைத்திருந்த வெந்தனுக்கு : தேறுதலேக் கூறியவென்.
தாதியம்மா ! வின்றுமுதல் : தாய்நீதா னெந்தனுக்கும்
மேதினியில் நானீன்ற : வித்தகிபொற் பாலகிக்கும்.
ஆகையினு லம்மணிநீ : அம்பரிபோ லென்மனேயில்
சோகமுறு தென்னுடனே : சுகமாக வாழ்ந்திடுவாய்.

இங்குநிற்கும் தாதியர்கள் : இன்றுமுத லுந்தனுக்கு
சங்கையுடன் செய்திடுவார் : சகலவித வூழியங்கள்.
கப்பிக்க விழ்ந்துநிற்கும் : காவலரும் பாங்கியரும்
தப்பாம லூழியங்கள் : தான்செய்வா ருந்தனுக்கு."
என்றுரைக்க வெல்லோரும் : ஏகமாய்க் கைகுவித்து
நின்றவளை வாழ்த்தியதே : நிமையிற்க லேந்தபின்னர்.
துக்கமெனு மூழ்வினையை : தூரவ கற்றியவர்
மிக்கமகிழ் கொண்டவராய் : மேதினியில் வாழ்ந்திருந்தார்.
கேட்டீரோ நேயர்களே ! : கேவலப்பெண் தாதியவள்
நாட்டமுடன் செய்தமகா : நன்மையுள்ள வேலைதனை.
பணிவிடைகள் செய்துவந்த : பத்திநிறை யுத்தமியாள்
துணிவாகச் செய்தவொரு : சுகிர்தக்கி ரிகையினுல்.
அணிகலமாம் கற்புநிறை : அன்னைஜெய சீலியம்மாள்
இணையில்லா வானுலகில் : இங்கிதமாய் வாழுகிருள்.
பெண்களெனப் பேர்வகித்து : பேர்பெறவே வாழ்பவரோ !
பெண்களெல்லாம் பெண்களல்ல : பேரறிவு வேணுமம்மா.
மங்களஞ்சேர் தங்கையரே ! : மாமரியின் மைந்தர்களே !
உங்களரும் பாலர்களோ : ஊரிலுள்ள சேயர்களோ.
மரணவிபத் துள்ளாகி : மாளுவதைக் காணுமந்த
தருணமதில் மாதுணிவாய் : தர்மகுண தாதியைப்போல்.
அஞ்சாம னத்தினராய் : ஆண்டவனர் பேராலே
கொஞ்சுமொழி பாலருக்கு : கொடுத்திடுங்கள் தீக்ஷதனை.

---

# 7-வது அத்தியாயம்.

## பால சீவியம்.

வாரீரொன் நேசர்களே ! வண்மைமிகும் நாயகியின்
சீர்பால சீவியத்தை : செப்பிடுவே னிப்பொழுதே.
துன்பமெனு மாழிதனில் : துவண்டெழுந்த பாலகியாள்
கன்னலதைப் போல்வளர்ந்த : காரணத்தைக் காண்பவர்கள்.
அந்தரமா யிம்மனையில் : யாருமறி யாமலேவான்
சந்திரனே பெண்ணுருவாய் : சாடினதோ வென்றிடுவார்.
சென்றோரும் நின்றவரும் : சின்னஞ்சிறு பாலகியை
ஒன்றாக வார்ப்பரித்து : ஓசையெழ வாழ்த்திடுவார்.
சொன்னார்சி லர்களப்போ : சோபனங்கள் சுந்தரிக்கு
முன்னாலே வந்தவர்கள் : மொழிந்தார்ப லபுகழ்கள்.
பாலகியே வுன்னையுமிப் : பாருலகி லீன்றவர்கள்
மேலான புண்ணியர்கள் : மேதினியி லம்மணிநீ.
மண்ணைத்தான் தொட்டாலும் : மாறிடுமே பொன்னாக
புண்ணியமே பெண்ணுருவாய் : பூமியிலு தித்தனையோ. ?
என்பாரும் பாலகியின் : எழில்முகத்தைக் காண்போரும்
அன்பாரங் கோர்த்ததுபோல் : அலங்கரித்து வார்ப்பரித்து.
நன்றாகப் போற்றிவெகு : நளினமுக நட்புடனே
பொன்மேனி பாலகியை : போற்றிடுவா ரெந்நாளும்.
இவ்விதமாய் நம்மினிய : ஏந்திழைபூம் பாலகியாள்
செவ்வையுட னேழாகும் : சிறுவயதைத் தானடைய.
தாயாரும் தாதியரும் : தாளாம கிழ்வுடனே
ஓயாமல் செய்தார்கள் : உற்றபல யோசனைகள்.
எண்சாணு டம்பினுக்கு : எழில்சிரமே முக்கியம்போல்
மண்ணுலக மானிடர்க்கு : மாகல்வி முக்கியமே.

அல்லவோ வாண்டகையே ! : ஆகையினு லந்நெறியை
சொல்லிவைக்க வேணுமம்மா : சூக்ஷியா யின்றுமுதல்.
வில்லேந்தும் மன்னருக்கு : விளம்பவே தம்முடைய
எல்லைமட்டு மல்லாமல் : எங்கும்புக ழெய்வதில்லை.
சென்றவிட மெங்குமெங்கும் : சிறப்புகள்தான் கற்றவர்க்கு
மன்னவருக் கில்லையம்மா : மானிலத்தி லிப்புகழ்கள்.
என்றிருவ ரோர்மனதாய் : ஏற்றநல்மு யற்சியுடன்
அன்றுமுதல் பாலகிக்கு : அளித்தார்கள் வித்தைதனை.
உற்றபளிங் கானதிலே : உருவம்ப திவதுபோல்
கற்றுவந்தாள் பாலகியும் : கல்வியதை மாசமர்த்தாய்.
பூலோக சாஸ்திரமும் : புத்திதனுக் கெட்டாத
மேலோக சாஸ்திரமும் : வெவ்வேறு கப்படித்தாள்.
அகண்டமதி கொண்டசிறு : அம்மனுமிக் காவலுடன்
நிகண்டுமுதல் நன்னூல்கள் : நீகிநா வீறுக.
சகலகலை வித்தைகற்று : சாஸ்திரங்கள் மற்றுமுள்ள
புகலரிய வேதாந்த : புஷ்பமெனு மாகமத்தை.
பார்புகழ வந்துதித்த : பாலகிசெ சிலியம்மாள்
ஈராறு மாதமதில் : இங்கிதமாய்த் தான்முடித்து.
திருமறையின் மேலான : சீர்பெருகும் வேதநெறி
பரமவிர கசியத்தின் : பாக்கியத்தைப் பார்த்திடவே.
மட்டடங்கா ஞானமுற்று : மனமகிழ்வு கொண்டவளாய்
சட்டெனவே கைகுவித்து : தாரைக்கண் ணீர்சொரிந்து.
குழைந்துமனம் பொங்கினளாய் : குணவழகி யப்பொழுதே
முழங்காலி லேயிருந்து : மூர்ச்சித்து வானுலகை.
அண்ணார்ந்து பார்த்துடனே : அம்மோக்ஷ வானுலகை
கண்ணாரக் கண்டுமனங் : களித்தங்கி ருப்பவள்போல்.
பரவசத்தி லேயுயர்ந்து : பார்க்கையிலே வானுலகின்
அரூபிகளாம் சம்மனசோர் : அங்குலவு மேனைதனை.

கண்டுமகிழ்ந் தக்களித்து : கைகாட்ட வக்கணமே
அண்டிவந்தா ரங்கொருவர் : அம்மணியி ருப்பிடத்தை.
மின்னலைப்போ லோடிவந்த : மேனுலக வானவனும்
கன்னல்மொழி செல்வியிடம் : காதலுட ஞேதுகிறூர்.
“ தங்கையரே விண்ணுலகைத் : தான்காண வாவனுண்டோ
சங்கையுடன் நானழைத்துச் : சாடிடுவேன் வந்திடுவாய்.”
என்றுரைத்த வானவனின் : இங்கிதமொ ழிக்கிசைய
சென்றூரி ருவருமாய் : சீர்பெருகு மோக்ஷமதின்.
மட்டுதிட்ட மில்லாத : மாக்ஷியையும் காக்ஷியையும்
எட்டிநின்று பார்க்கையிலே : ஏகசரு வேசுரனை.
சுற்றியங்கு வீசுகின்ற : சுடரொளியும் காந்தியையும்
சற்றுங்கண் ணேக்கிடவே : சாத்தியமில் லாதவளாய்.
பார்க்கின்றூ ளப்பொழுதே : பறந்துலவு மாஞ்சுகளை
தீர்க்கமனக் கன்னிகையாள் : திகைதிகைத்து நிற்கையிலே.
பத்ராச னர்களுடன் : பங்கமில்லா தூதர்களும்
சத்துவக ருஞ்சேர்ந்து : சங்கீதம் பாடுவதும்.
நாதகி ருத்தியர்கள் : நாற்றிசையு மேபரவி
ஓதரிய மாவிதமாய் : ஓசையெழப் பாடுவதும்.
பலவத்த ரோடுகன : பிராதமிக ருஞ்சேர்ந்து
துலைவிலிருப் போரும்வெகு : துல்லிபமாய் கேட்டிடவே.
வீணைசுர வாத்தியங்கள் : விதம்விதமாய் மீட்டிமனம்
கோணமை லெல்லோரும் : கூடியங்கு பாடுவதும்.
சுரதாபித் தோர்திரள்கள் : சூக்ஷமுடன் தங்களெழில்
சிரகாலே தம்முகத்தை : சீராய்ம றைத்துநின்று.
சுத்தர்பரி சுத்தரென : சொல்லிப்புகழ் கூறிப்பரி
சுத்தத்தி ரித்துவத்தை : சூழ்ந்துகொண்டு போற்றுவதை.
காதலுடன் கண்டுடனே : கண்களைசற் றேதிருப்ப
மேதினியி லேமிகவும் : மேன்மையாய் வாழ்ந்தவருள்.

ஆதன்முதல் தானறிந்த : அனைவோரு மங்கிருந்து
கோதிலனைத் தோத்தரித்து : கொண்டாடிப் போற்றுவதும்.
உன்னதமா தேவனுக்காய் : உயிர்கொடுத்த சுத்தவிளங்
கன்னியரும் வாலர்களும் : காக்ஷிமிகும் பாலர்களும்.
வேதமதற் காயுழைத்த : வேதியர்க ளோர்புறமும்
கோதிலராய் வாழ்ந்திறந்த : குணவாளர் வேர்புறமும்.
பிதாக்களுந்த போதனரும் : பேதமின்றி யேகலந்து
நிதானிக்க வேலாத : நேர்மையுட னேபரவி.
விதம்விதம தாயுடுத்தி : மேகாச னத்துயர
கதித்தெழுமா சந்திரன்போல் : கண்ணியமாய் வீற்றிருந்து.
அன்பனரு ளப்பரவர் : அன்றுகண்ட காக்ஷியிலே
ஒன்றும்பிச காமலங்கே : உயர்மோக்ஷ ராக்கினியாய்.
ஆயிரமா சூரியனை : ஆடையதாய் மேலணிந்து
நேயமுட னம்புலியை : நித்தியமாய்க் கால்மிதித்து.
பன்னிருநட் சேத்திரங்கள் : பாங்கொளிவீ சித்துலங்க
உன்னிதமாய் பொற்சிரசில் : ஓர்முடிய தாய்ப்புனைந்து.
வீற்றிருக்கும் ராக்கினியை : வீட்சித்த வர்களெல்லாம்
போற்றிப்பு கழுவதை : பூங்கொடியாள் கண்டவுடன்.
சட்டெனவே தான்மகிழ்ந்து : சாஷ்டாங்க மாய்விழுந்து
திட்டமுடன் போற்றியபின் : தினகரன்போ லேயெழுந்து.
பார்த்திடவே யிப்புவியில் : பரமசுத னைவளர்த்த
கீர்த்தியுள்ள கைத்தாதை : கீழ்ப்புறமாய் வீற்றிருக்க.
அவரருகே ஸ்நானகரும் : ஆனுள்சு வக்கினும்
நவவரங்கள் கொண்டிருந்த : நாமூன்று சீஷர்களும்.
தபமுனிவ ரொன்றுலகில் : தழைத்தோங்கி வாழ்வடைந்த
அபிராமு மீசாக்கும் : அவர்புதல்வன் யாக்கோபும்.
பன்னிருவ ரோடுதித்து : பகரரிய வாதையுற்று
நன்னயமாய் மீட்படைந்து : நளபதியா யாண்டுவந்த.

பேசரிய கற்புநிறை : பிரபலஞ்சேர் பார்த்திபனும்
சூசையப்ப னென்னுமந்த : சூதனுகா சுந்திரனும்.
மங்காநற் கீர்த்திபெற்ற : மாமுனிமோ ஸேசவரும்
சங்கைநிறை மன்னவனார் : தவிதரசும் சாந்தகுண.
தவமிகுத்த சுத்தர்களும் : தாசர்களும் நேசர்களும்
நவமாக மற்றுமுள்ள : நல்லோர வர்பிறகே.
வான்மணிகள் பூத்ததுபோல் : வானுலக மேநிறைந்து
மேன்மையுட னேயிலங்கும் : மேலோரைப் பார்த்தவுடன்.
பக்கமதில் நின்றிருந்த : பட்சமுள்ள சம்மனசை
தக்கமரி யாதையோடு : தானழைத்துச் சொல்லிடுவாள்.
"பார்த்துமகி ழுற்றேனிப் : பாக்கியத்தி லெங்களையும்
சேர்த்திடவே வேண்டுகிறேன் : சீர்பெருகும் வானவனே."
என்றுரைக்க வானவனும் : ஏந்திழையாள் தான்மகிழ
நன்றென்று ரைப்பதுபோல் : நாட்டமுட னேசிரசை.
ஆட்டுவதைக் கண்ணுற்றே : அகமகிழு மம்பரியை
மேட்டிமையாய்க் கையேந்தி : மேலுலகை விட்டகன்று.
பன்னரிய மின்னலொளி : பாய்வதுபோ லவ்விருவர்
அன்னையினன் மாளிகைக்கு : அறைநொடியில் வந்தார்கள்.
தங்கையரே! வந்தவரும் : தாமதியா தக்ஷணமே
மங்களங்கள் சொல்லியபின் : மறைந்திட்டா ரற்புதமாய்.
போனவுடன் கன்னிகையின் : புண்ணியப்ப ரவசமும்
ஞானமுடன் நீங்கிடவே : நாள்கழித்தாள் நாயகியும்.

---

## 8-வது அத்தியாயம்.

### ரோமை ராயர்கள்.

இங்கிதமாய்க் கேட்குமுங்கள் : இதயங்க லகலங்கி [யரோ !
பொங்கிடத்தான் போகுதம்மா : புண்ணியஞ்சேர் தங்கை

சலித்துமனம் பேதலித்து : சஞ்சலத்தா லங்கமெல்லாம்
சிலிர்த்திடவே செய்யுமொரு : சேதிதனைக் கேட்டிடுங்கள்.

சீர்பெருகும் ரோமையெனும் : திருநகரை யாண்டுவந்த
நேர்நெறியே தில்லாத : நிர்மூட ராயரெல்லாம்.

பேர்வகிக்க மட்டுமவர் : பிரபலஞ்சேர் ராயரான
ஆர்ப்பரித்து வாண்டாலும் : ஐயையோ தங்கையரே !

அவனிதனில் மானிடர்மேல் : அன்புசற்று மில்லாத
கவனமற்ற நிர்மூடக் : கல்நெஞ்ச பாதகராய்.

ஈவிரக்க மற்றகொடும் : இதயம்ப டைத்தபடு
பாவிகளாய்த் தானிருந்து : பாருலகி லேயவர்கள்.

உற்றபரன் வேதமதை : ஊனமென்றே தானிகழ்ந்து
பற்றித்தொழு தேற்றிடுவார் : பாழலகைக் கூளிகளை.

முழுதும்கிக ரற்றதிரு : முதுமறையை விட்டகற்றி
தொழுதிடுவா ரந்நாளில் : துன்மார்க்கப் பேய்களையே.

கைகண்ட தெய்வமென : கைகுவித்து தெண்டனிட்டு
செய்திடுவார் பேய்களுக்கு : தீவிரமா யூழியங்கள்.

மாடுகளோ டாடுகளை : மாய்த்தேதம டையரவர்
கோடிகோடி யாயதற்கு : கொடுப்பார்க ளேபலியாய்.

அவ்வளவோ டேயவர்கள் : அடங்கமனங் கொள்ளாமல்
கௌவவரும் நாய்களைப்போல் : கத்திப்பறை சாற்றியவர்.

கொக்கரித்து வார்ப்பரித்து : கொடுத்தாரோர் கட்டளையை
மிக்கசிறப் பாகவேநாம் : மேதினியி லேதொழுவும்.

தெய்வங்கள் மெய்யெனவே : தேர்ந்தறிவி ரல்லாமல்
பொய்தேவ ராத்தொழுக : போகாதே னவிளம்பி.
அங்குசங்க ளில்லாமல் : அலையுமத யானைகள்போல்
சங்கோச மின்றியவர் : தாஞ்செய்தார் நீதரசு.
கொடுங்கோல ராயர்களின் : கோரமுள்ள கட்டளையை
தடுத்துமறுப் போர்களுக்கு : தந்திடுவா ராக்கினைகள்.
அங்கால மானதிலே : ஆண்டவனை நம்பினவர்
மிக்கவிர கசியமாய் : மேதினியில் வாழ்ந்துவந்தார்.
சத்தியமார்க் கத்தினரை : சண்டாளர் கண்டுவிட்டால்
சித்தமகிழ் கொண்டவராய் : செய்திடுவார் தீங்குகள்தான்.
நேயமில்லா வன்மகுண : நிஷ்டிரப் பாதகர்கள்
மாயப்ப சாசுகளின் : மாயவலைக் குள்ளாகி.
உண்டுறங்க நேரமின்றி : ஊரூராய்த் தானலைந்து [ந்து.
சண்டையிடும் வீரர்கள்போல் : சந்துபொந்தெல் லாம்நுழை
கண்டுபிடித் தோட்டிடுவார் : கள்ளமில்லா மாசிலரை
நண்டபிண்ட மாய்ச்சிதைத்து : நசித்திடுவார் நாய்களைப்
ஓடோடி யேயலைந்து : ஓர்நொடியி லுத்தமரை [போல்.
தேடிப்பி டித்துடலம் : சேதமுற வாட்டிடுவார்.
கைகால்கள் கட்டிகொடும் : கடுஞ்சிறையி லுள்ளடைத்து
மெய்யறிவு சோர்ந்திடவே : மென்மேலும் வாட்டிடுவார்.
கட்டியடித் தாட்டிடுவார் : கைப்பிரம்பு சாட்டைகளால்
எட்டியுதைத் தேகிடுவார் : ஏதொலும்பெல் லாமுறிய.
துண்டுதுண்டாய் வெட்டிதெருத் : தோரணங்கள் போலவி
கண்டுமகிழ்ந் தாடிடுவார் : கைத்தாளம் போட்டிடுவார். [ட்டு
தும்பைமலர் போன்றசிறு : துல்லிபால் மேனியரை
பம்பரமா யாட்டிவெகு : பாதகங்கள் செய்திடுவார்.
தங்கையரோ ! யுங்களைப்போல் : தர்மகுண முள்ளவிளம்
மங்கையரை யேசிறுத்தி : மன்டையையு டைத்திடுவார்.

மங்களஞ்சேர் மாசிலனை : மானபங்க மாயிழுத்து
சிங்கங்க ளுக்கிவனை : தீனிவிருந் தாக்கிடுவார்.
உறங்குவா னென்றுசொல்லி : ஊளையிடும் நாய்களவர்
பெருங்குறடா லோர்நொடியில் : பிடுங்குவார் கண்களையே.
இன்றைக்கொரு கால்முறித்து : ஈரைந்து நாட்களது
சென்றபின்னே தான்முறிப்பார் : சிறிமற்ற காலையம்மா.
கடிக்கும்விஷ ஜெந்துகளை : கடுஞ்சிறையுள் ளேகவிட்டு
அடைத்திடுவார் மாசிலனை : அவ்விடத்தில் சாகுமட்டும்.
பின்னுஞ்சில பேரையவர் : பின்கட்டாய்க் கட்டியபின்
இன்னுங்கொ திக்குமண்டா : எண்ணெயிலே போட்டிடு
நீராக வேயுருகி : நிழலாடு மீயமதை [வார்.
நேராக ஆற்றிடுவார் : நாசியிலும் வாய்களிலும்.
கம்பமதி லேசிலனை : கட்டியபின் னெட்டிநின்று
அம்புகளா லெய்தவனை : அப்படியே விட்டிடுவார்.
கருத்தறிந்த கன்னியரை : காணப்பலர் முன்னிலையில்
நிறுத்தித்து கிலுரிந்து : நீண்டவிருப் பாணிகளால்.
அறைந்திடுவ தோடுவந்த : அழகுமிரு மங்கமதை
திறந்திடுவா ரையையோ : சிர்குடல்கள் தான்சரிய.
கண்டுகண்க லங்கியழும் : கண்ணான நேயர்களை
துண்டுதுண்ட மாய்நறுக்கி : தூக்கியெறிந் தோடிடுவார்.
அரும்புமலர் போன்றபல : அருணமுக வன்பர்களை
இரும்பாகும் கட்டிலின்மேல் : இசபிசகாய்த் தானிழுத்து.
துடிக்கவே கால்கரத்தை : தூண்களிலே கட்டியபின்
ஒடித்தபெருங் கட்டைகளை : ஒப்புரவாய்க் கீழ்பரப்பி.
எரித்திடவே புண்ணியர்கள் : ஏகனே யென்றலறி
பொரித்தெடுத்த தேகமுடன் : போவார்கள் வானுலகம்.
ஆடுகள்போ லேசிலனை : அந்தரமாய்த் தொங்கவிட்டு
கோடரியா லேபிளந்து : கோரமுடன் கொன்றிடுவார்.

இன்னுஞ்சிறு மங்கையரை : ஈவிரக்க மின்றியவர்
கொன்றிடுவ தன்றிசில : கோதில்லாப் பாலர்களை.
அந்தரமாய்ப் பந்துகள்போல் : ஆகாசத் தேயெறிந்து
மந்திரவேல் பட்டயத்தை : மானிலத்தில் நட்டிடுவார்.
மாடுகள்போ லேசிலரை : வண்டிகளில் கட்டியவர்
சாடிடுவார் முட்பிரம்பால் : சர்வாங்க முங்கிழிய.
வேறுசில கன்னியரை : வெவ்வேறு யல்லவம்மா
கூறிடவே யீரிரண்டாய் : கூட்டிப்பி ணைத்திறுக்கி.
கட்டழகு செல்வர்களின் : காந்தியொளிர் மேனியது
சிட்டாய்த்து டிதுடிக்க : சீரழிந்த பாதகர்கள்.
இரும்பான சீப்புகளால் : ஈவிரக்க மின்றியவர்
விரும்பியதோர் மேரையதாய் : வீரமுடன் கிறியபின்.
கொல்லையெறி வால்மிளகை : கோரமாய்ப் பூசிபெருங்
கல்லையவ ரங்கமதில் : காவலர்கள் தான்சுமத்தி.
பட்டப்பகல் வேளையிலே : பாவிகளும் விட்டுவிட்டு
எட்டிநின்று கூடிவெகு : ஏளனங்கள் செய்திடுவார்.
தாரகைகள் போன்றவந்த : தர்மகுண செல்வர்களும்
கோரவதை தாளாமல் : கோவென்ற மூகையிலே.
மட்டிகளே யாகுமந்த : மடையர்களு மெண்ணெயைமேல்
கொட்டியெறித் தாடிடுவார் : கூவிடுவார் கூளிகள்போல்.
மங்காச்சு டரொளிரும் : மாசில்லாக் கன்னியரின்
சங்கைமிகுங் கொங்கைகளும் : சாடிடவே தானறுப்பார்.
நங்கையரே! சொல்லமனம் : நாணுதம்மா நம்மினிய
தங்கையர்கள் பட்டபல : தாங்கொண்ணாப் பாடுகளில்.
ஆயிரமாம் பங்கிலொரு : அணுவாசி யாகிலுமே
சேயன்நான் தேறிமனம் : செப்பிடவு மேலுவதோ?

---

# 9-வது அத்தியாயம்.

## கட்டக்கோம் சுரங்கம்.

ஆகையினு லக்காலம் : அம்பரனின் மக்களெல்லாம்
வேகாமல் வெந்தழுது : விசனமதி லேதளர்ந்து.
அரசருக்கா யல்லவம்மா : ஆண்டவருக் காகவேதான்
இரவுபக லாகவவர் : இப்புவியைக் காணுமல்.
பகற்பொழுது நேரமெல்லாம் : பதுங்கியிர வாகுமட்டும்
சிகைகட்டக் கோஞ்சுரங்கம் : தேடியத னுள்ளிருந்து.
சங்கங்கள் கூடியவர் : சகலவித சங்கீத
மங்களங்கள் பாட்டுடனே : மாபூசை கண்டிடுவார்.
பாவிகளு மச்சமயம் : பார்த்திடிலோ துன்பமென்று
ஓவியம தாயதனுள் : ஒளிந்திருக்கு முத்தமர்கள்.
தேவபலி பூசைமற்ற : திருச்சடங்கெல் லாமுடித்து
ஆவலுடன் பெற்றிடுவார் : அருண்மதுர நற்கருணை.
சிறின்பம் பூண்டவிளஞ் : சிறுவர்முத லெல்லோரும்
பேரின்ப வோய்வனத்தை : பெற்றுடனே மார்பணைத்து-
அக்கணமே பாய்நதோடி : அடைபட்ட வன்பருக்கு
தக்கமரி யாதையுடன் : தந்தவர்கள் சொல்லிடுவார்.
“ அழுகாதீர் நேசர்களே : ஆருப்பெ ருந்துயரால்
வழுவாது பெற்றிடுவீர் : வானுலக மோக்ஷமதில்.
கோரவதை கள்புரிந்து : கொடுமைமிகச் செய்தாலும்
வீரகுண சேவகர்கள் : வெகுகொடுமை செய்தாலும்.
சோர்ந்தயர்ந்து வாடாதீர் : சோமகிகர் சுந்திரரோ
நேரான மோக்ஷமுடி : நீரடைவீர் நிச்சயமாய்.
துக்கமதைப் போக்கிடவே : தூயபரன் வந்துவிட்டார்
அக்களிப்பா யெல்லோரும் : அருந்திமகிழ் கொண்டிடுங்கள்.

மண்ணுலகை விட்டகன்று : மறுலோகஞ் சேர்ந்தவுடன்
புண்ணியரே யெங்களுக்காய் : பூரிப்பாய் வேண்டிடுங்கள்.
போனவுடன் வேண்டிடுங்கள் : புத்தியில்லா வெங்களுக்காய்
மோனசரு வேசனிடம் : முந்தமுந்த வேண்டிடுங்கள்."
என்றவரைப் போற்றியபின் : எழில்பதத்தை முத்தமிட்டு
சென்றிடுவா ரெல்லோரும் : சிராய்னி டியுமுன்னே.
திருமறையோ ரென்றுவெகு : சிறந்தபேர் கொண்டிருந்தும்
அறிவில்லாப் பேதையர்போல் : அவனிதனில் வாழ்பவரோ!
அக்கால வுத்தமர்கள் : ஆவலுட னண்டவரை
முக்காலுந் தோத்தரித்த : முறைமைகளைக் கேட்டீரோ?
கரங்கால்ந டுடுங்கக் : காரிருள டர்ந்தபெரும்
சுரங்கவர லாற்றையிங்கே : சொல்லவிது நேரமல்ல.
என்றாலுங் கொஞ்சமதை : இயம்புவே னிப்பொழுதே
நன்றாகக் கேட்டதனை : நாட்டிடுங்கள் புத்திதனில்.
கச்சிதரோம் மாநகரைக் : கடந்தால்மூன் காதவழி
நிச்சயமா யின்னுமுண்டு : நீண்டதொரு பாலைவனம்.
கரியவிரு ளானதைநீர் : கண்டாலும் கண்களெல்லாம்
பெரிதாயி ருளடைய : பிலத்துவா ரங்களங்கே.
ஆறாறு ஜாண்கள்கொண்ட : அளவாக வவ்விடத்தில்
ஏறியிறங் குவதனுள் : இருக்குதம்மா கற்படிகள்.
அவ்வழியைத் தாண்டிசற்று : அயராம லேநடந்தால்
செவ்வையாய்க் காணுமங்கே : சிறந்தபெருந் தாழ்வாரம்.
நேசர்களே! யங்கிருந்து : நெடுந்தூரஞ் சென்றிடிலோ
கோசரமாய்ப் போகுதம்மா : கொம்புகள்போ லேபிரிந்து.
கோணல்பல வானசிறு : கொடிவழிகள் நூறளவில்
காணலா மின்னுமங்கே : கணக்குவழக் கில்லாமல்.
ஓடுமுடக் காய்மடங்கி : ஒன்றோடொன் றாய்க்கலந்து
கூடுமிந்த வாசாரக் : கூறரிய மண்டபந்தான்.

ஓவியமா யந்நாளில் : உத்தமகி றீஸ்துவர்க்கு
கோவில்களே யாகுமந்த : கோலமுற்ற சாலையம்மா.
வேருக வவ்விடத்தில் : விரிந்தோடும் பாதைகள்தான்
சோருத வர்வசித்த : சுந்திரமா மாளிகைகள்.
சாலைகளும் மாளிகையும் : சார்ந்தவச்சு ரங்கமதில்
நீலநிறக் கற்களினுல் : நிச்சயமா யவ்விடத்தில்.
சித்திரங்கள் தீர்ப்பதிலே : தேர்ந்தபல சாஸ்திரிகள்
வித்தகமாய்ச் செய்தமைத்த : வேதமுறை சத்தியங்கள்.
கொண்டதிருக் காக்ஷிகளை : கோடிகோடி யாயதனுள்
கண்டிடலா மின்னுமங்கே : கண்ணுன நேயர்களே.
உன்னதவான் தேவனுக்காய் : உயிர்கொடுத்த வுத்தமரை
அந்நாளி ருமருங்கில் : அடக்கிடுவா ராகையினுல்.
தாழ்ந்ததரை மட்டமுதல் : தாவும்வ ளைவுமட்டும்
சூழ்ந்தபல நற்சலவை : சுத்தமுள்ள கற்களினுல்.
அல்மாரி போன்றபல : அழகுமிகுங் கல்லறைகள்
பல்லாயி ரக்கணக்கில் : பார்த்திடலா மிங்குமங்கும்.
ஒடுக்கமா யுள்ளவந்த : உயர்ந்ததிருக் கல்லறையுள்
அடுத்துறங்கும் புண்ணியர்கள் : யாரென்ற றியவெனில்.
மின்னும்பொன் னக்ஷரத்தால் : மீசுரமாய்த் தானிழைத்த
அன்னவர்பேர் கண்டடனே : அறியலா மன்னையரே.
எண்ணரிய தீபகணம் : ஏற்றியெரிக் திட்டாலும்
மின்மினிபோல் காணுமல்லால் : மீறிச்சுடர் வீசாது.
உள்நுழைந்து பார்த்தவர்க்கே : உண்மைகள்வி ளங்குமன்றி
எள்ளளவும் மற்றவரால் : ஏலாத றிந்திடவே.

## 10-வது அத்தியாயம்.



### கற்பிணணிகலம்.

கன்னிகைசெ சீலியமைக் : காணும லேங்கிநிற்கும்
என்னினிய தங்கையரே ! : ஏகசரு வேசுரனே.
தோத்தரிக்க சீராளும் : சோதிமுக செல்வதியும்
ஆத்திரமாய்த் தாமெழுந்து : அருணனொளி வீசுமுன்னே.
கட்டக்கோம் சென்றிருவர் : கடகடென வுள்ளிறங்கி
திட்டமாய்ப் பூசைகண்டு : திரும்பிடுமவ் வேளையிலே.
ஆண்பெண்வ யோதிகரும் : அந்தகரும் வாலர்களும்
காணரிய சேபர்களும் : கன்னியிட மோடிவந்து.
அழுவார்கள் பற்பலபேர் : அன்னையிடந் தங்குறையை
மொழிவார்க ளன்னவரின் : முறைப்பாடு கேட்டுமனம்.
தாளாத கண்மணியாள் : தன்னணியைத் தான்கழற்றி
மீளாம லேகொடுப்பாள் : மின்னும்பொன் காசுகளை.
அள்ளியிறைத் தேகிடுவாள் : அருஞ்சிவிகை மீதமர்ந்து
துள்ளியுட னோடிடுவாள் : துரிதமாய் மாளிகைக்கு
இவ்விதமாய் நாள்தோறும் : ஏகுமந்த நேரமதில்
கவ்வியங்கே நிற்பவர்க்காய் : கண்மணியா ளெப்பொழுது.
நெஞ்சம்பி ளந்துருகி : நேசகிகண் ணீருதிர்த்து
சஞ்சலப்பற் றேயகல : சாற்றரிய தேருதல்கள்.
சொல்லியவ ளேகினதும் : சூழ்கணங்க ளெல்லோரும்
வில்லாய்வ ளைந்துநின்று : வித்தகியாள் பொற்பதங்கள்.
பட்டவிட மத்தனையும் : பாங்குடனே முத்தமிட்டு
திட்டமுடன் வாழ்த்தியவர் : சென்றிடுவார் தம்மிடங்கள்.
மாளிகையி லெப்பொழுதும் : மங்காச்சி காமணியாள்
நாளைவீண் போக்காமல் : நட்புடனே வேலைசெய்து.

ஈன்றெடுத்த வன்னையரும் : இன்னுமற்ற புண்ணியரும்
சான்றுளெ னப்புகழ : சகலபணி யாளருக்கும்.

பூவாகும் பிள்ளைகட்கும் : புண்பட்ட நெஞ்சகர்க்கும்
நோவாளர் தங்களுக்கும் : நண்ணெறிக ளோதுவதே.

ஓயாத வேலையல்லால் : உங்களைப்போல் லௌகிக
சேயல்ல செல்வதிதன் : சித்திரப்பல் லக்கினிலே.

செல்லுமெந்த வேளையிலும் : சிரங்குனிந்து வேண்டல்
[செய்து
அல்லும்பக லெப்பொழுதும் : அடக்கவொ டுக்கமுடன்.

கலங்காத நெஞ்சமுடன் : கர்த்தனையே தோத்தரித்து
அலங்கார மாநகரை : அற்பமதாய்த் தான்மதித்து.

பேசிடுவாள் பக்தியுள்ள : பெண்சிலரோ டல்லால்கண்
கூசிடவே பார்த்திடுவாள் : குணவழகி ஆண்களுள்ள.

சித்திரப்ப துமையையும் : சிறிதும்நோக் காளெனிலோ
உத்தமியி னற்புகழை : ஓதிடவும் வேண்டுவதோ ?

ஆங்காங்க ரசர்முதல் : அம்புவியி லுள்ளவர்கள்
பூங்கொடியாம் நாயகியின் : பொற்குணநற் செய்கைதனை.

கண்டவரும் கேட்டவரும் : கற்பின ணிகலத்தை
'பெண்டுகளின் நாயகமே : பேர்புகழுஞ் சுந்திரமே.

தங்களைய லங்கரித்து : தற்புகழ டையுமெல்லா
நங்கையருன் பாதமலர் : நமஸ்காரஞ் செய்திடினும்.

பூஷணமா யெண்ணரிய : புண்ணியத்தை யேயணிந்த
தோஷமில்லா வுந்தனுக்கு : தொண்டுசெய்ய வேணுவரோ ?'
என்றவர்கள் போற்றிவெகு : எற்கையாய் வாழ்த்திடினும்
ஒன்றான தேவனைத்தன் : உள்ளமதி லேநினைந்து.
சித்தமதிலே நாட்டிமலர் : சீர்கரத்தை நீட்டியேநம்
உத்தமியா ளோரிரவில் : உயர்ந்தாள்ப ரவசத்தில்.

அந்நேர வேளையிலே : ஆசைமலர் தேன்சொறியும்
பன்னரிய நந்தவனப் : பசுங்கிளியே பாடுதல்போல்.
தேவதிருக் கன்னிசுதன் : தீங்குரலாய்த் தன்னுடனே
கூவியங்கு பேசுகின்ற : குரலொலியைக் கேட்டவுடன்.
மிக்ககனி வோடுடனே : மெல்லிகல்லாள் தானழுக
அக்கணமே பேசலுற்றார் : ஆண்டவனா ரன்புடனே.
"கன்னிகையே! யென்னினிய : காதலியே! சந்ததமும்
என்னோடே தானிருந்து : இலங்குகின்ற பாலகியே!
பொன்மணியைக் காய்ச்சிகன : புடமிட்டெ டுப்பதுபோல்
உன்சிறிய துற்குணத்தை : ஒப்புரவாய் நீயகற்றி.
முந்தமுந்த வெந்தனையே : மோனமுட னுசரிக்க
சந்ததமாய் வாக்களித்து : சத்திசுத்தி தேகமுடன்.
அற்பமுங்க ளங்கமின்றி : ஆபாசப் பற்றறுத்து
கற்பெனுமா நல்லறத்தை : கைப்பற்றி நீயிருந்தால்.
சம்மனசோர் தங்கையென : சாஸ்வதமாய் வானுலகில்
செம்மையுட னென்னருகில் : சிரஞ்சீவி யாயிருப்பாய்."
என்றுரைக்கக் கேட்டவளும் : ஏகனையே போற்றிசெய்து
தன்னுடனே மீண்டுமவள் : தானாகப் பேசுகிறாள்.
'கனலும்க னலொளியும் : காந்தியுற வாடுதல்போல்
வினையிலா வென்னினிய : வேண்டுகோ ளுக்கிசைவாய்.
இருக்கிறதே யேகனவர் : இயம்பியமா வாக்கதுவும்
மறுக்கொண்ணா சத்தியமாய் : மாமறையோர் சொன்னபடி.
எட்டிக்க னியழகாய் : இலங்கிடினுந் தின்றவுடன்
சட்டெனவே கொல்லுவது : சத்தியமே வான்மணியை.
எண்ணிடினு மெண்ணிடலாம் : ஏனுமோ லௌகீக
மண்ணினர்தம் துன்பமதை : மானிடரால் கூறுதற்கு.
இல்லறத்தி லோர்பழுதும் : இல்லாதி ருந்துமதின்
தொல்லைகளைச் சொல்லவெனில் : துகையுமட ங்காதே.

ஆகையினு லின்றுமுதல் : ஆதனையி லுள்ளளவும்
மோகவலேக் குள்ளாகி : மோசமனு காதிருக்க.
கராளிபு ரவிகட்கு : கடிவாளம் போடுதல்போல்
நிராகரித்து யிவ்வுடலே : நித்தநித்தம் வாட்டியெந்தன்.
ஆண்டவருக் கென்னுடைய : அழகுகற்பைக் கையளித்து
மாண்டிடுவே' னென்றுமிக : மனமகிழ்ந்து சொல்லியவள்.
ஆத்துமநற் றேசிகரின் : அன்பறிவைக் கேட்கமலர்
பூத்தமுகத் தோடுடனே : புறப்பட்டா ளப்பொழுது.
வல்லமைமி குந்தசுத்த : மாருத்தி ருச்சபையை
எல்லோத்தே தொன்னுமொரு : இணையில்லாப் புண்ணியனுர்.
பாப்பரசா யாண்டுகொண்டு : பக்ஷமுள்ள பிள்ளேகளே
காப்பாற்றி வந்தாலும் : கைத்துணையா யன்னவர்க்கு.
புத்திசுத்தி யுத்திபத்தி : புண்ணியம்ப ரந்துலவும்
உத்தமகு ணம்வகித்த : ஊர்பான்மேற் றிராணியரோ.
சிற்றரச ராகவப்போ : சிறந்திருந்தா ராகையினுல்
கற்புடையாள் சென்றவரின் : கால்கரங்கள் முத்தமிட்டு.
தன்னினிய நேர்ச்சியையும் தற்பரனுர் தன்மனேயில்
வின்னமின்றி யேயளித்த : வினையில்லாக் காக்ஷியையும்.
சொன்னவுட னுண்டவனுர் : சூழ்கிருபா நோக்கமுடன்
"என் மகளே கண்மணியே : எழுந்திடம்மா வென்றணைத்து.
முத்தாய்க்கண் ணிருதிர்க்கும் : முத்திப்பேர் பெற்றவளே!
தத்தளிக்க லாகாது : தற்பரனுர் சித்தமிது.
உள்ளுரும்பு றமனைத்தும் : ஊடுருவிப் பார்த்துவரும்
எள்ளளவும் மாசணுகா : ஏகபரன் சித்தமம்மா.
அலங்கார விண்மணியே! : ஆண்டவனுர் கண்மணியே!
கலங்காதே யென்னினிய : கற்பிஞெளி யுற்பவமே.!"
என்று சொல்லி மீண்டுமவர் : "என்மகளே தாயேநீ
இன்றமுத லெட்டாம்நாள் : இரவினிலே யிங்குவந்து.

நற்பூசை கண்டுதிவ்ய : நற்கருணை யுட்கொண்டு
கற்பையுமுன் கர்த்தருக்கு : காணிக்கை தந்தி”டனும்.
ஆண்டவர்சொல் வார்த்தையது : அவள்செவியில் வீழ்ந்
[திடவே
நீண்டபனி சூரியன்முன் : நீங்கிமறைந் தேகுதல்போல்.
பொற்பாவை சந்தோஷப் : பொங்குகட லிலமிழ்ந்தி
அற்பமுஞ்சந் தேகமின்றி : அவ்விடம்விட் டேகியபின்.
எட்டாம்நா ளன்றுதினம் : ஏந்திழையாள் மாமகிழ்வாய்
கட்டக்கோம் சென்றுமகா : கனமுனிவர் சொற்படியே.
மட்டுதிட்ட மில்லாத : வல்லபரன் சன்னதியில்
சட்டமுடன் வாக்களித்து : சந்தோஷங் கொண்டிருந்தாள்.
ஊழியுள்ள காலமிந்த : உலகினிலி ருப்பவர்போல்
வாழுமட மாந்தர்களே! : வானுலக வாழ்வினுக்காய்.
பால்மணமா றுதசிறு : பாலகியாள் பூதலத்தில்
சீலமுறை யோடுசெய்த : சேதிதனைக் கேட்டீரோ.?
ஆட்டிவிட்ட பம்பரம்போல் : அவரவர்ம னைகளிலே
நாட்டியங்க ளாடுவதால் : நன்மையொன்று மில்லையம்மா.
என்றுணர்ந்து யின்றுமுதல் : ஏகனையே போற்றிசெய்து
நன்றியுள்ள மாதர்களாய் : நானிலத்தில் வாழ்ந்திடுங்கள்.

---

## 11-வது அத்தியாயம்.

### மடந்தைப் பருவம்.

வானகமும் பூதலமும் : வல்லபரன் ஞானமதால்
கோணமை லேயிலைத்துக் : கொண்டிருத்தல் போலரிய.
கற்புநிறை யுத்தமியிக் : கன்னிகையின் நற்புகழால்
அற்புதமா யோங்குதம்மா : அந்தமிகும் ரோமைநகர்.

நிறைந்தபரி பூரணமாய் : நீள்புவியி லேயுதித்த
சிறுவிளந்தை நாளடைவில் : சிங்கார மாய்மடந்தை.
பருவமடைந் தாளவுடன் : பால்பிறைபோ லேயவளும்
உருவமிக வேசிறுத்து : உடல்தானுண் டோமெனவே.
கண்டோர திசயிக்க : கைகால்மு ளைத்தசிறு
வெண்டாம ரைமலரோ : வெண்மதியோ சூரியனோ.
வானுலகி ருந்துவந்த : வானவனோ மாமுகிலோ
தானாக வேயுதித்த : தாரகையோ தாமரையோ.
பொங்குந்தி ருவுருவோ : புனலுதிராப் பூவினமோ
மங்காத்தி ருமருவோ : மாடப்பு றாவினமோ.
இன்னதெனச் சொல்லிடவே : இணையின்றி யிப்புவியில்
உன்னதநற் கன்னிகையாய் : உருவமைந்த வுத்தமியின்.
உயர்ந்தமுக மண்டலத்தை : உன்னிதமாய்ப் பார்ப்பவர்கள்
நயந்துபல வாறுக : நாயகியை வாழ்த்திடுவார்.
நன்மைநிறை யன்னையரோ ! : நங்கையரோ தங்கையரோ !
பன்னரிய செல்வியரின் : பால்முகத்தைப் பார்ப்பவர்கள்.
வெட்கமின்றி லக்ஷிமிக்காய் : விகாரகுண தேவரெல்லாம்
கட்சியிட்டு தர்க்கமிட்ட : கட்டுக்கதை போலவேதான்.
மேதினியி லுள்ளபல : மேன்மைதுரை மக்களெல்லாம்
காதலுட னோடிவந்து : கண்குளிரப் பார்த்தபின்னே.
தர்மகுண மாதரசை : தக்கமணஞ் செய்வதற்கு
சர்வபிர யாசைகளும் : சலியாதெ டுத்திடுவார்.
ஓயாம லன்னவர்கள் : ஓடியபின் னுண்மையிலே
தாயாரைக் கண்டுடனே : தங்கருத்தை யோதிடுவார்.
படுத்துறங்க நேரமின்றி : பற்பலரும் பாய்ந்தோடி
அடுத்தடுத்து வந்திடுவார் : அன்னையிடம் பேசிடவே.
நேசமிகு மாதரசி : நேர்ந்துகொண்ட நேர்ச்சிதனை
மாசில்லா நாயகியின் : மாதாவ றியாதால்.

எல்லோரை யுந்தவிர்த்து : ஏகமா யக்களித்து
கல்லாகத் தன்மனதை : கட்டாய்நி லைநிறுத்தி.
புத்திதெளி வுள்ளநல்ல : புண்ணியனோர் வாலிபனை
சித்தமகிழ் கொண்டவளாய் : தேர்ந்தெடுத்து தீவிரமாய்.
உற்றவிந்த சங்கதியை : ஓட்டமா யோடியவள்
பெற்றதன்ம களிடத்தில் : பேதமின்றி சொல்லிடவே.
ஒடுக்கம்பொ றுமைதயை : உண்மையுறுந் தன்மையெல்
அடுக்காய மைந்தகுண : அதிரூப நாயகியாள். [லாம்
மாதாவை நோக்கி "யம்மா ! மாசில்லா தேவனுக்கென்
ஓதரிய கற்புதனை : உவந்தளித்தே னுண்மையிலே.
நற்புதல்வி யன்னையரே ! : நானுமென்சர் வேசனுக்கு
கற்புதனை யீந்தளித்தேன் : காவலனி னியவரே.
பன்னரிய வன்னையரே ! : பாலகியிப் போதுமக்கு
சொன்னவிந்த வாக்கனைத்தும் : சுத்தநிச மாகையினால்.
கல்யாணம் பண்ணியிந்தக் : காசினியில் வாழ்வதற்கு
எள்ளளவும் சம்மதிக்க : ஏலாது சத்தியமே."
என்றுரைக்க தாயின்மனம் : ஏங்கிமிகக் கண்கலங்கி
"என்னினிய மாமயிலே ! : என்சொல்லைக் கேட்டிடனே.
வலரியா னென்னுமொரு : வாலதுரை மன்னவனை
நிலவரமாய்க் கல்யாணம் : நீசெய்ய வேண்டியது.
பெற்ற மனம் நொந்திடவே : பேசாதே பெண்மயிலே
மற்றவர்சொல் வார்த்தைகளை : மாமயிலே தள்ளிவிடு.
மாதாசொல் புத்திகளை : மனதிலே நாட்டிடம்மா [மா.
ஓதும்தாய் பொன்மொழியை : உன்தலைமேற் கொண்டிடம்
பூதலத்தி லுள்ளவர்கள் : புகழுடனே வாழ்வதினால்
தீதெதுவு மில்லைகண்ணே : திருமணம்நீ செய்வதினால்.
கல்யாண வாழ்வினிலே : கஷ்டமென்ன கண்டாயோ
இல்லைபடீ யென்மகளே : இல்லறத்தி லோர்குறையும்.

தொல்லையொன்று மில்லையெந்தன் : தோகையிள மாமயிலே
நல்லகுண வாளனவன் : நான்தெரிந்த வுத்தமனும்.
அழகுமன்ன னென்றாலும் : அவனுக்கே செல்லுமடீ
பழகினால் நீயறிவாய் : பற்றறநான் சொல்லுவதை."
என்றுரைத்துத் தாயவளும் : இளைஞனையே தானனுப்ப
கன்றினைப்போல் துள்ளியவன் : கற்பினலங் காரியிடம்.
ஓட்டமா யோடிவந்து : உன்மத்தங் கொண்டுநிற்க
வாட்டமுகக் கன்னிகையாள் : வல்லபா னைநினைத்து.
ஐயையோ வென்று மிக : அலறிப்ப தைபதைத்து
கையைமுறித் துக்கதறி : கலகலென வேயழுது.
அகம்புழுங்கி புத்திமங்கி : அனல்மெழுகு போலுருகி
துகையிலாக் கஸ்திமிகும் : துயரோடெ ழுந்தவளும்.
'ஒப்பில்லா வாண்டவனே! : உன்னரிய வல்லபத்தால்
தப்பிப்பி ழைப்பதன்றி : தஞ்சம்வே றில்லை'யென்று.
கோவென்று ருண்டழுது : கொற்றவிமுன் னுளளவாய்
தேவனின்ச காயமதை : தேடியே வோலமிட்டு.
'சீக்கிரமாய் வாருமெந்தன் : சேசுவே! யென்றுயரை
நீக்கிடவே பாருமையா : நித்தியப ரஞ்சுடரே!
திக்கற்ற பாவிகளின் : தெய்வம்நீ ராகையினால்
பக்கத்து ணையிருந்து : பாதுகாத் தாளு' மென்று.
தூண்டில்மீன் போலவளும் : துடித்தழுகும் வேளையிலே
ஆண்டவனர் சந்நதியில் : அவ்வபயங் கேட்டிடவே.
அன்னையரே! அக்கிமிஷம் : அற்புதமா யவ்விடத்தில்
மின்னலையே தோற்கடிக்கும் : மிகஜோதி யோடுவொரு.
சம்மனசு தோன்றிமிகச் : சங்கையுடன் சொல்லுகிறார்
"அம்மணியே கன்னிகையே! : அழகுகற்பி னரணமே!
தங்கையரே சோர்ந்துமனம் : தத்தளிப்பு கொள்ளாமல்
மங்களஞ்சேர் சேதிதனை : மனமகிழக் கேட்டிடுவாய்.

என்னினிய தங்கையரே ! : ஏற்குமோ வுந்தனுக்கு
பன்னரிய தாரகையே ! : பாலகிபோ லிவ்விதமாய்.
சோர்வடைந்து சோபமுற்று : சோருவது நீதியல்ல
பூர்வீக தேவனருள் : போய்விடுமோ வுன்னைவிட்டு.
அறியாயோ முந்நாளில் : அக்கினியில் நின்றுமவர்
பரிவாக மூன்றுசிறு : பாலர்களைக் காத்ததுவும்.
இங்கிதமா யாக்கோபின் : இணைபிரியா மக்களெல்லாம்
செங்கடலின் மத்தியிலே : சிறுகுறைவு மில்லாமல்.
கரங்கால்ந னையாமல் : கட்டாய்ந டந்ததுவும்
சிறிதளவும் சேதமின்றி : சென்றவர்க ளோர்திரளாய்.
தேனும்பா லும்பொழியும் : செல்வநக ரானதிலே
சேனைத ளங்களுடன் : செல்வர்களாய் வாழ்ந்ததுவும்.
தங்குங்கு ணவழகன் : தானியேல் வாலனவன்
சிங்கக்கு கைதனிலே : சேதமின்றி மீண்டதுவும்.
மாயப்ர வாகமதில் : மாசிலராய் வாழ்ந்திருந்த
நோவனையும் மக்களையும் : நோவாமல் காத்ததுவும்.
தீதாக வேமறந்து : திகைப்பதுவு மொவ்வாது
ஓதுவேன் கற்புடைய : உத்தமியூ தித்தாளே.
தேகமுமன் னுள்மனதும் : தீட்டணுகா தாதரித்த
ஏகசரு வேசுரனே : என்றுமுனைக் காத்திடுவார்.
இப்போத வருடைய : இஷ்டத்தை யானுனக்கு
செப்பிடுவே னுகையினல் : செய்வாய்தி ருமணந்தான்.
உன்னரிய கற்பினுக்கு : ஊர்பழுதும் நேராமல்
என்னிரண்டு றெக்கையினல் : ஏகபரன் வாக்கதுபோல்.
உன்னுடனே நானிருந்து : உள்ளளவுங் காத்திடவே
என்னைய னுப்பியதால் : இறங்கிவந்தே னுந்தனிடம்.
ஆகையினு லின்றுமுகல் : ஆதரையி லுள்ளளவும்
சோகமதை விட்டகற்றி : சோஷமற வாழு"மென்று.

வானவனு மேயுரைத்து : வானுலகஞ் சேர்ந்திடவே
தேனருந்தும் வண்டினங்கள் : திக்காய்க்க லைவதுபோல்.
சிந்தைமகிழ் கொண்டவளாய் : சிறந்தவன்னை சொற்படியே
சுந்திரன்வ லேரியனை : சூழ்மணந்தான் செய்வதெனு.
நெஞ்சின்தி கில்சலிப்பும் : நேர்ந்தபெரும் சஞ்சலமும்
பஞ்சாய்ப்ப றந்தகல : பரபரென வேயெழுந்து.
தாமதியா தக்கணமே : தர்மகுண மாதரசி
சாமமெனு மப்பொழுதின் : சங்கடத்தைப் பாராமல்.
பூக்கமுகச் செல்வியந்த : பொற்பாவை தன்னுடைய
ஆத்துமகு ருவினிடம் : யாவையுமே சொல்லிவர.
புறப்பட்டுப் போயவரின் : பொற்பாதம் முத்தமிட்டு
சிறப்பாக வேநடந்த : சேதிதனைச் சொல்லிடவே.
சத்தியசு சீலமுனி : சாந்தமுடன் கேட்டுபல
அத்தாக்ஷி யுங்கொடுத்து : அங்கவளைத் தேற்றியபின்
ஆசீர்மி கவளித்து : அனுப்பினு ரன்றுமுதல்
நேசசகோ தரன்போல் : நேசித்தா ளன்னவனை.
பத்தரைமாற் றுள்ளகன : பசும்பொன்னைப் போலிலகும்
சுத்தகுண நாயகியை : தோன்றல்வ லேரியனும்.
ஓதரிய மாவிதமாய் : ஓங்குமொழுங் கோடவனும்
கோதில்லா தன்னினிய : குணவதியைக் கண்டுவர.
வன்னவன்னப் பட்டுகளும் : வஜ்ரமணி யாலிழைத்த
நன்னயமா யுள்ளபல : நகைகளுட னேகனத்த.
செம்பொன்ம ணிகளினல் : செதுக்கியபொன் மாலைகளும்
தும்பைமலர் போன்றமுழு : சுந்திரப்பட் டாடைகளும்.
சவ்வாது சந்தணமும் : சம்பங்கி யெண்ணெயொடு
செவ்வந்தி சண்பகமும் : சித்திரவி சித்திரமாய்.
தேட்டமுட னேயடுக்கி : தேசுலவுங் கன்னியிடம்
தாட்டிகமாய்க் கொண்டுவந்து : தரிசிப்பா னப்பொழுது.

கருதரித்த வேளைமுதல் : காட்சியுரு கொண்டவனுய்
ஒருபேற்றி லேபிறந்து : ஊடாடி வந்தவவன்.

தம்பியாம் தீபூர்ஸலீம் : தன்னினிய வண்ணனுடன்
வம்பின்றி யேதுடர்ந்து : வந்திடுவான் தங்கையரே.

இவ்விருவர் தம்மிடத்தில் ; இருந்தவொரு காரணத்தை
செவ்வையுட னுங்களுக்கு : செப்பவரி தென்றாலும்.

உன்னதத்தா யார்முதலாய் : உருவறியா தேங்கினின்ருல்
பின்னுமென்ன சொல்வதம்மா : பேதமில்லா தவ்விருவர்.

கைகால வயவமும் : கண்ணும்நி றங்குறியும்
மெய்யாய வர்தொனியும் : மேலுமவர் நற்குணமும்.

கல்வியொடு சொல்லரிய ; கனத்தநடை கைவீச்சும்
சொல்வதெனி லவ்விருவர் : சூழங்க ரேகைகளும்.

ஒன்ருயி ருந்ததம்மா : ஓரணுவும் பேதமின்றி
நன்ருக வோர்மனதாய் : நாட்டமிகும் செல்வர்களாய்.

வாழ்ந்துவந்து மவ்விருவர் : வகைமோச மாகமுழு
தாழ்ந்திடுமஞ் ஞானிகளாய்த் : தானிருந்தார் தங்கையரே.

---

## 12-வது அத்தியாயம்.

### திருமண மஹோற்சவம்.

இந்தவித நாட்களெல்லாம் : இமையிற்ப றக்ககுண
சுந்தரிமு கூர்த்ததினம் : சூட்சமாய் வந்திடவே.

மங்களஞ்சேர் தங்கையரே ! : மாசில்லாக் கன்னிமனம்
பொங்கியே வாட்டமுற்று : போம்வழியே தென்னவென.

அங்கம்ப தைபதைத்து : ஆருத்து யரமுற்று
'எங்கும்நி றைந்திலகும் : எம்பரனே !' யென்றழுது.

துக்கமதி லாழ்ந்தவளாய் : துவண்டிடுமவ் வேளையிலே
அக்கணமே மீண்டுமவள் : அருட்காவல் சம்மனசு.
கண்ணுக்கெதிர் நின்றவராய் : காக்ஷிதந்து சொல்லுகிறார்
“ எண்ணரிய மாதுயரால் : ஏங்கிடுஞ்ச கோதரியே !
அஞ்சாதே வந்துவிட்டேன் : அற்பதுன்பம் நேராது
சஞ்சலங்கள் நீங்கிடவே : சற்றேகண் நோக்கி ” டென்றார்.
பட்டயத்தைக் கைப்பிடித்து : பளபளென வேசுழற்றி
திட்டமுடன் மாதயவாய் : திரும்பியவர் சொல்லுகிறார்.
“ என்னினிய தங்கையரே ! : ஏகசரு வேசுரனின்
உன்னதமா நாமமதால் : உந்தனைநான் காத்திடுவேன்.
உத்தமசற் புத்திரியே ! : ஓர்குறையும் நேராது
சத்தியமே யாகுமிது : சஞ்சலங்க ளேனுனக்கு ?
என்னைவெல்ல வல்லவர்கள் : எவருமில்லை யிவ்வுலகில்
என்றறிவா ” யென்றுரைத்து : இதமாய்ம றைந்திடவே.
நித்தியமுங் கன்னிமையை : நேர்ந்தளித்த நாயகியாள்
புத்திதெளி வுற்றுமனம் : பூரித்து நிற்கையிலே.
மங்களநாள் வந்ததென்று : மாதரசின் தாயவளும்
தங்களின ரண்மனையை : தக்ஷணம லங்கரிக்க.
கட்டளைகள் தந்திடவே : காவலரு மூழியரும்
திட்டமுடன் செய்தார்கள் : தீவிரமா யன்றுமுதல்.
முடக்கமொன்று மில்லாமல் : மும்முறமா யிங்குமங்கும்
நடக்குதம்மா மாளிகையில் : நாவடங்கா ஜோடனைகள்.
அன்னையரே ! கன்னிகையின் : அன்னையவள் செய்தபல
உன்னதசிங் காரமதை : உண்மையாய்ச் சொல்லிடுவேன்.
மன்னுதி மன்னவர்கள் : மாக்ஷியுடன் வீற்றிருக்க
மின்னுமணப் பந்தலதை : மீன்விழிகொள் பாங்கியர்கள்.
மண்டலத்தி லுள்ளகுடை : மல்லிகையும் முல்லைமலர்
செண்டுகளோ டேமலர்ந்த : தேர்ந்தபல சித்திரப்பூ.



தோரணங்க ளாடிடவும் : தோதாய தனி[illegible]யே
நூறுநூ றானபல : நூதனதீ பங்களுடன்
பொன்மணிக ளாலிழைத்து : பூட்டியபொற் கால்களையே
வின்னமொன்று மில்லாமல் : வெகுதூரம் நாட்டியதில்.
உயர்ந்தகல சங்கள்வைத்து : ஓங்குமயில் போலமைத்து
அயர்ந்தெரு வீதியெங்கும் : அருங்கமுகு வாழைகளும்.
தெங்குபலா மாங்கனியும் : தேரியகூந் தற்பனையும்
தொங்கவெங்கு மேயழகாய் : தோன்றிடவ லங்கரித்து.
பவளமணிக் குச்சுகளும் : பச்சைமுத்து சிப்பிகளும்
நவநவமாய்க் கோர்த்ததனை : நாற்புறமுந் தொங்கவிட்டு.
சீனுக்கு ளோப்புகளும் : தேர்ந்தலஸ்டர் வால்ஷேடும்
வானெங்கும் பந்தலிலே : வரிவரியாய்த் தொங்கவிட்டு.
ரத்தினக்கல் கம்பளங்கள் : ரம்மியமாய்க் கீழ்பரப்பி
முத்துகளா லேயிழைத்த : முக்கால்நாற் காலிகளை.
பத்திபத்தி யாய்நிறைத்து : பாங்கான மண்டபத்தின்
மத்திபத்தில் சுத்தகுண : மணவாளர்க் காயமைத்த.
மாணிக்கச் சிங்கார : மண்டபத்தி னீர்புறமும்
ஆணிப்பொன் னுடையுடன் : ஆவலா யிங்குமங்கும்.
தாதியரும் பாங்கியரும் : தங்கமய மாயொளிரும்
பீதாம்ப ரத்துயிலை : பேணிய ணிந்துநிற்க.
இருவமிஷ வுற்றாரும் : இன்னுமுள்ள மற்றோரும்
கருதரிய வொப்புரவாய் : காந்தியொளி வீசிடவே.
வானமதி லுள்ளபல : வளர்மேஷ ராசியெனும்
மீன்கணங்க ளேநழுவி : மேதினியில் வீழ்ந்ததுபோல்.
பீதாம்ப ரங்களுடன் : பெருத்தமுத்து ரத்தினத்தால்
பாதாதி கேசமெங்கும் : பரிந்தொளிர வேயணிந்து.
சிறந்தோங்கு மாசார : சீர்சிறந்த பந்தலிலே
செறிந்துநிறைந் தேயிருக்கும் : சீரான வேளையிலே.

வருகிறன் தங்கையரே ! : வாலன்வ லேரியனும்
கருதவே யேலாத : காதலன்ர தந்தனிலே.
ஆணிப்பொன் ஞலிழைத்த : அலங்கார வாடையின்மேல்
மாணிக்கக் கல்நகைகள் : மத்தாப்பு போலிலங்க.
முன்னலே மார்பதனில் : முத்திழைத்த தாழ்வடமும்
பின்னலே கல்லிழைத்த : பீதாம்ப ரத்துயிலும்.
மின்னுங்கோ மேதகத்தால் : மோகனமா மாலைகளும்
பன்னுஞ்சி றுவிரலில் : பச்சைவைர மோதிரமும்.
நக்ஷத்ர மின்னொளிபோல் : நகநகென வேதுலங்க
பக்ஷமுக மானதிலே : பாங்கருளு மேவிளங்கி.
இங்கிதமாய்க் கண்களிலே : இசைந்துபிர காசிக்க
சிங்கார மண்டபத்துள் : சீர்பால சூரியன்போல்.
பலவீணை வாத்தியங்கள் : பாங்காய்மு ழங்கிடவே
வலதுசிங் காதனத்தில் : வந்தமர்ந்தான் தங்கையரே.
பூதலத்தி லேசிறந்த : புண்ணியராய் வாழ்ந்தாலும்
காதலெழு வங்களரும் : காதலனை யேவதைத்து.
வகைவகையாம் பட்டான : வஸ்திரங்க ளோடுவெழில்
நகையால லங்கரிக்க : நாட்டமுறும் நங்கையரே !
மங்கையரின் மங்கையிந்த : மகிமைநிறை மாதரசி
சங்கமதி லேநுழைந்த : சங்கைதனைக் கேட்டிடுங்கள்.
புண்ணியமே பெண்ணுருவாய் : பூத்ததுபோல் மாதூய
வெண்ணுடைக ளன்றிவர்ண : வேறுடைக ளில்லாமல்.
உலகமைத்த தேவனைந்தன் : உள்ளமதி லேயிருத்தி
கலகலெனெ நீர்சொரியும் : கண்களுட னச்சமிகும்.
நாணம்ம டமையொடு : நடுங்கியநற் றேகமுடன்
பூணும்ந கைகளின்றி : பூச்சியமாய்த் தானடக்கும்.
சந்திரசெ சிலியனை : சூழ்ந்துகொண்டு தாதியர்கள்
வந்தமர்ந்த மேனைதனை : வானவரும் மானிடரும்.

சிரமசையா தெல்லோரும் : சேர்நிமைகள் கொட்டாமல்
பரவசங்கள் கொண்டவராய் : பார்த்துநின்ருர் பந்தலிலே.
ஓவியமா யக்கால : உன்னதமு றைப்படியே
பாவமில்லா சாங்கியத்தை : பாங்காய்ந டத்தியபின்.
தாமதமொன் றில்லாமல் : தர்மதுரை யானவனின் [தில்.
மாமியம்மா ளப்பொழுது : மனமகிழ்ந்தோர் பாத்திரத்
நிறையரசம் வார்த்துவந்து : நின்றிருக்கும் வேளையிலே
பிரபலவ லேரியனின் : பேர்புகழுந் தந்தையவர்.
சீலமுட னேயெழுந்து : சிறந்த தங்கப் பாத்திரத்தில்
பாலும்பழ மும்நிறைத்து : பாங்காயி ருவருமாய்.
மங்களம ணாளருக்கு : மாற்றியவர் கையளிக்க
அங்கிருந்த வெல்லோரும் : அகமகிழ்ந்து வாழிசொல்ல.
அப்போத மருதுரை : அன்னைஜெய சீலியின்முன்
குப்பெனவெ ழுந்துநின்று : கூப்பிட்டுச் சொல்லுகிருன்.
"அன்னம்போ லிங்குவந்து : அமர்ந்திலங்குங் கன்னிகை
உன்னைத்தி ருமணத்தால் : உயர்மனைவி யாயடைய. [யே!
விருப்பமுற்றே னைதினுல் : விதிப்படியே யுன்னுடைய
விருப்பமது வின்னதென : விளம்பிடுவா" யென்றுரைக்க.
கன்னிமணி தானெழுந்து : காதலனைக் கண்ணேக்கி
"உன்மனம்போ லென்மனமும் : உத்தமனே" யென்றவ
சொல்லிடவே வாலர்களும் : சூழ்மங்கை மாதர்களும் [ளும்.
பல்லாண்டு கூறியவர் : பசுமலர்கள் தான்சொரிய.
தம்பதிக ளப்பொழுதே : தங்கள்வ லக்கரத்தை
சம்மதித்தோ மென்றவர்கள் : சாற்றிப்பி டித்திடவே.
பதினெட்டு வாத்தியமும் : பாங்காய்மு ழங்கிடவும்
அதிர் வெடிகள் தான்கிளம்ப : அனைவருள மேமகிழ.
பந்துஜன மானவரும் : பாங்கியரும் மற்ருேரும்
அந்தமுள்ள வாகனத்தில் : ஆரோக ணித்துடனே.

மணவாளன் மாளிகைக்கு : மங்களஞ்சேர் மாமயிலே
குணமுடனே யார்ப்பரித்து : கூட்டியவர் சென்றார்கள்.
அப்போவ ழகுதுரை : அக்களிப்பாய் வாசல்நின்று
“ ஒப்பில்லாத் தெள்ளமுதே! : உன்மனையை விட்டகன்று.
எங்குவந்தாய் சொல்லு” மென : இயம்பவே பொற்கொடி
“ சங்கைமிகும் நாயகனே! : தங்களுடன் நன்மனையில். [யாள்
நானிருந்து வாழவேதான் : நாடிவந்தே” னென்றுரைக்க
தானேதன் தேவியரை : சங்கையுட னுள்ளழைத்து.
வீட்டினது சாவிதனை : மேட்டிமையாய்க் கையளித்து
ஆட்டுத்தோ லாசனத்தில் : அம்பரியைத் தானிருத்தி.
சுந்திரஞ்சேர் நாயகியை : சூழ்ந்தவரா யெல்லோரும்
பந்தியமர்ந் துத்தமர்கள் : பசியாற்றும் வேளையிலே.
நாவானு ரைக்கரிய : நன்னகைய ணிந்தபெண்கள்
பூவாரம் போல்பறந்து : புகழ்நடன மாடுவதை.
பார்க்கமன மொவ்வாத : பைங்கிளியா ளெப்பொழுது
யார்க்குமட ளவுபடா : வைம்புலனைத் தானடக்கி.
வழுவாநெ றியுடனே : வல்லவனைத் தோத்தரித்து
முழுதும்ப ரவசத்தில் : மூழ்கிநின்று ளத்தருணம்.
சரஞ்சரமாய் வானினின்று : சாற்றும்வான் தூதரொழில்
கரங்களிலே வீணைபல : கணக்கில்லா வாத்தியங்கள்.
ஏந்தினராய் வந்திறங்கி : இன்பமெனு மாகடலில்
நீந்தினராய் யாழ்நரம்பை : நேர்த்தியாய் மீட்டிடவே.
இனியதொனிக் கேற்றதுபோல் : இன்னுஞ்சில வானவர்கள்
கனிவாக நின்றுமகா : நாதமெழுப் பாடுகையில்.
அவருள்ள திபதியாய் : ஆர்ந்தவதி தூதனவர்
நவமாயோர் கட்டளையை : நாற்புறமு மோதிடவே.
வானோர்க ணங்களப்போ : வகைவகையாய்த் தான்பிரிந்து
பானெளிபோல் விசவங்கு : பலபமெலன வேபறந்து.

நாட்டியங்க ளாடுவதை : நாயகியாள் கண்டுமன
வாட்டமுகம் நீங்கினளாய் : வல்லவனைத் தோத்தரித்து.
'ஏகசரு வேசுரனே : என்றென்று மென்னுடைய
தேகமுட னெமனதும் : தீட்டணுகா தாதரிக்க.
செய்தருள்வீ' ரென்றிறைஞ்சி : சிரங்குனிந்து வேண்டுகை
மெய்யான தூதர்களும் : வேண்டினு ராண்டவனை. [யில்
அப்போவங் கேயிருந்த : அழகுசுப மங்கிலிகள்
கப்பியமா நாணமதால் : கலகலத்து மேல்சிலிர்த்து.
நெஞ்சம்ப டபடத்து : நெக்குவிடும் சௌபாக்ய
பஞ்சான மேனியளை : பாங்குடனவர்களெல்லாம்.
சுறும்பினங்கள் போல்நெருங்கி : சூழ்ந்திடவே சுற்றுமங்கு
நிறைந்திருந்த சமுசார : நேர்மைதுணை மார்களெல்லாம்.
ஆனந்த வாரிதனில் : ஆழ்ந்தவனுப் வீற்றிருக்கும்
தீனதயா ளக்குணவான் : தினகரன்வ லேரியனை.
சூழ்ந்தவரா யெல்லோரும் : சூழ்முகில்போ லேபரவி
ஆழ்ந்தமன வாசையுடன் : ஆர்ப்பரித்து வந்தமுள்ள.
பள்ளியறை மட்டுமவர் : பரிவார மாய்த்திரண்டு
கள்ளங்க படமில்லா : காதலனைச் செல்லவிட்டு.
மங்களங்கள் கூறிவெகு : மனமகிழ்வா யெல்லோரும்
இங்கிதநல் வாழியுடன் : ஏகலுற்றார் தம்மனைக்கு.
இவ்விதம ஹோற்சவந்தான் : இங்கிதமா யவ்விரவில்
செவ்வையாய்த் தான்முடிய : சென்றதம்மா பத்துமணி.
கல்யாணச் சொற்களுங்கள் : காதில்விழா முன்னமேதான்
கொல்லைநரி போல்மகிழும் : கோதையரோ கேட்டீரோ?
புல்லறிவா ளுள்ளளவும் : புத்திதடு மாறினராய்
சொல்லரிய தொல்லைகளால் : சோர்ந்தயருஞ் சுந்திரரோ!
பெண்ணென்றால் பெண்ணிவளே : பேருயருந் தங்கமம்மா
விண்ணுலக வானவரின் : வினையில்லாத் தங்கையவள்.

புத்திநிறை ஞானமணி : பூஜிதமா மங்கையம்மா
நித்தியமுங் கன்னிமையை : நேர்ந்தளித்த நங்கையவள்.
கற்பழகி னற்புதத்தை : காசினியி லோதுதற்கு
அற்பமனு மக்களினுல் : ஆகுங்க ருமமல்ல.
ஆதலால் நீங்களுங்கள் : அழகுநிறை கற்புதனே
சோதிமுக வுத்தமியாள் : சூழ்பதத்தி லொப்படைத்து.
காண்பொழுதி லேயழியும் : காசினியி லுள்ளளவும்
வீண்பெருமை யாணவத்தால் : வீழ்ந்தழிந்து போகாமல்.
மருவிலாத் தூயகுண : மாமணிசெ சீவியரின்
திருவடியைப் பின்துடர்ந்து : தீதிலராய் வாழ்ந்திடுங்கள்.
இணையில்லா வாசையினுல் : இன்பமற்ற வாழ்வடைய
மணையேறி யோர்கொடியில் : மாங்கல்யஞ் சூடிடுமென்.
தங்கையரோ நங்கையரோ! : தர்மகுண மங்கையரோ!
பொங்குமருள் நல்வரத்தை : பூரணமாய்க் கொண்டவரோ!
சாமிசரு வேசுரனின் : சாற்றரிய ஞானமதால்
மாமியெனப் பேர்வகித்து : வாழுமட மாதர்களே!
மெய்வருந்தி யுங்களைப்போல் : மேதினியிற் பெற்றெடுத்த
கைதவஞ்சே ரன்னையையும் : காணரிய தந்தையையும்.
மற்றும்பி றவியையும் : வளர்மனையும் விட்டகன்று
உற்றதந்தை தாயெனெ : உண்மையிலே நம்பியுங்கள்.
மக்களைப்போல் வந்தமரு : மக்களையும் சேர்த்தணைத்து
மிக்கபுக ழெய்திடவே : மேதினியில் வாழ்ந்திடுங்கள்.
கற்றுணர்ந்த மாதர்களே! : கர்த்தனருள் பெற்றிருந்தும்
சற்றிரக்க மில்லாத : சண்டாளப் பேயினம்போல்.
இவ்வாழ்க்கை செய்வதினுல் : என்னபல னுண்டுகண்டீர்
இல்லையம்மா வோர்பலனும் : இத்தகைய வாழ்வினிலே.
உற்றகுண ஞானியவர் : உரைத்தமொழி கேட்டிலையோ.
குற்றமில்லா மானிடர்கள் : குவலயத்தி லில்லையம்மா.

சற்றிரக்க மின்றியிந்த : சாகரத்தில் வாழ்பவரோ!
ஒற்றுமையில் லாக்குடிகள் : ஓர்நொடியில் கெட்டழியும்.
எப்படிநீர் மற்றவர்க்கு : இகத்திலளந் திட்டீரோ
அப்படித்தா னுங்களுக்கும் : அளந்திடுவா ராண்டவனர்.
ஆகையினு லென்பிரிய : அன்பர்களே! பேதையனென்
தாகமுடன் சொல்மொழியை : தயவாகக் கேட்டிடுங்கள்.
ஆவியொடு காயமது : அழிந்தாலும் மேதினியில்
பாவியெனப் பேர்படைத்து : பாழ்நரகில் வீழாமல்.
பெருமைசலாக்கியத்தை : பேர்த்தகற்றி விட்டொழித்து
கருணைநிறை மாதர்களாய் : காசினியில் வாழ்ந்திடுங்கள்.

---

## 13-வது அத்தியாயம்.

### கூட்டிலடைபட்ட வெண்புறு.

தொல்லையுறும் வாழ்க்கைதனை : துரிதமாய்ப் பற்றியபின்
சொல்லரிய வாதையினுல் : சோர்ந்துழலும் சுந்தரரே!
காட்டினிலே வேடன்வெகு : கபடமாய் வைத்தசிறு
கூட்டினில கப்பட்டுக் : கொண்டவெண்பு ருவதுபோல்.
ஆவிது டிதுடித்து : அலறிமனஞ் சோம்பினளாய்
தேவதி ருவுளத்தை : சிந்தித்து லகினிலே.
ஞானமதி லாழ்ந்ததிரு : நங்கைஜெய சீலியம்மாள்
மானமெனும் நாணமெழ : மனஞ்சலித்து மெய்பதைத்து.
நடுக்கமிக மேலிடவே : நாவரண்டு சோர்வடைந்து
ஒடுக்கமுட னக்கணமே : உன்னதவான் நோக்கியிந்த.
'கருணையற்ற மானிடரை : காசினியில் மீட்கவெண்ணி
மரணமட்டுங் கீழ்ப்படிந்து : மாவுதிரஞ் சிந்தியவென்.

ஆண்டவனே! யித்தருணம் : அண்டிவந்தா லல்லாது
மாண்டிடுவ தன்றியேநான் : மற்றவகை யாதுமில்லை.
பாவியழுங் கூக்குரலுன் : பாதார மெட்டலையோ?
கூவியழும் பேரொலியுன் : கூர்மைசெவிக் கெட்டலையோ?"
என்றழுக வக்கணமே : ஏந்திழையாள் தூதனவர்
மின்னலொத்த கூர்வாளை : மேவியிரு கைபிடித்து.
அந்தரமா யந்தமிகும் : அவ்வறையில் தோன்றிமிக
சுந்திரவ டிவிலங்க : சொல்லுகிறு "ரென்பிரிய.
தங்கையரே! யுன்மனதில் : தாங்கொண்டு சிந்தைகொண் [டு
மங்கிமடி வானேனந் : மாதுயரங் கொள்வானேன்?
உன்னழுகைக் கூக்குரல்கள் : உன்னதவா னெட்டியதால்
தன்னிகரே! தில்லாத . தற்பரனின் கற்பனையால்.
இங்குவந்தே னைகையினல் : இகமதனி லுள்ளளவும்
சங்கைமிகுந் தங்கையரே! : சஞ்சலங்கள் கொள்ளாதே.
ஒன்றினுக்கு மஞ்சாதே : ஓர் விசனங் கொள்ளாதே [ன்."
என்றென்று முன்னுடனே : இருந்துன்னைக் காத்திடுவே
என்றவளைத் தேற்றியவர் : இதமாய்ம றைந்திடவே
ஒன்றுமறி யாதிருந்த : உத்தமவ லேரியன்தன்.
பத்தினியாம் பொற்கொடியாள் : பாவைஜெய சீலியிடம்
சத்தியமாய்ச் சொல்லியதை : சங்கையுடன் கேட்டிடுங்கள்.
"பெற்றெடுத்த வன்னையையும் : பேர்பெரிய மாளிகையும்
மற்றனைத்தும் விட்டகற்றி : மாதயவாய் வந்தடைந்த.
கற்பின ணிகலமே! : காதலியே கண்மணியே!
அற்பன்நா ளுகினுமென் : ஆவியுட லைஸ்வரியம்.
அத்தனைக்கு மின்றுமுதல் : அரசியாய் நீயிருக்க
தத்தம்நான் செய்துவிட்டேன் : சாஸ்வதமா யுந்தனுக்கு."
என்றுறுதி வாக்களித்து : இதமாகப் பின்னுமவன் [ன்.
கன்றினைப்போல் துள்ளிவெகு : களிவுடனே சொல்லுகிறு

" நாவாலு ரைக்கரிய : நாயகமே! நாணமிகும்
மூவாசை வாரிதனில் : மூழ்கியெழு மென்னுடைய.
துன்பமதை நீக்கியென்னை : தோதாய்க்க ரைசேர்க்க
உன்னையல்லா லுற்றதுணை : உண்டோசொல் லாகையினால்.
இக்கணமே யுன்மனதை : இனிதாய்நி லைநிறுத்தி
மிக்கமகிழ் மேட்டிமையாய் : மேதினியில் நான்பிழைக்க.
ஓவியமா தெப்பமென : உற்றுன்னை யானடைந்து
சீவியமா சாகரத்தை : சீக்கிரமாய்த் தான்கடந்து.
கரைசேர்வே னாகையினால் : காதலுட னிப்பொழுதே
நிறைந்தமன நேசமுடன் : நீட்டிடுவா யுன்கரத்தை.
முத்திழைத்த வாயாலே : முகமலர வெந்தனுக்கோர்
முத்தங்கொ டுத்திடவே : முன்னெழுந்து வாமயிலே."
என்றுசொல்லி வாலனவன் : எழில்கரத்தைத் தான்பிடிக்க
சென்றவுட னபகியாள் : சீர்த்துமனம் வாடினளாய்.
மறைந்தெழுந்த வெண்மதிபோல் : மாசில்லாக் கன்னிநின்று
" விறைந்தெழுந்த நாயகனே! : விண்ணப்ப மொன்றுளது.
கள்ளங்க படமின்றி : காதலொடு சொல்லுவதை
உள்ளளவும் நீயொவர்க்கும் : உரைத்திடுவ தில்லையென்று.
சத்தியமாய் வாக்களித்தால் : சாற்றிடுவே னானதையென்
உத்தமனே நீர்மகிழ : உள்ளபடி" யென்றவுடன்.
சிட்டாய்ப்ப தைபதைத்து : திகைத்தவனுஞ் சொல்லுகிறான்
" கட்டிக்க ரும்பே! யென் : காதலியே கண்ணொளியே!
மூவருடன் நான்தொழுவும் : முப்பத்து முக்கோடி
தேவர்களு மொன்றாக : திரண்டுருண்டு வந்தவர்கள்.
சிரச்சேதம் செய்யவெண்ணி : சீறியவர் கேட்டாலும்
பரிச்சேதம் கண்மணிநான் : பகர்வதில்லை சத்தியமாய்."
என்றுரைக்கக் கன்னல்மொழி : ஏந்திழையாள் தானெழுந்
நின்றபடி யேவணங்கி : நீள்கரங்கள் தான்குவித்து. [தா

"உன்னிதமாய்க் கேளுமெந்தன் : உத்தமனே ! சாவளவும்
கன்னிமைய ழியாமல் : காத்திடுவே னென் றுசொல்லி.
கடவுளுக்கு வாக்களித்த : காலமுத லென்றென் றும்
தடவையி லெந்தனுக்கோர் : சஞ்சலமும் நேராமல்.
உடம்பையுயிர் காப்பதுபோல் : உன்னதவான் தூதனவர்
திடமுடனே யென்னருகில் : தீவிரித்தி ருப்பதினுல்.
காதல்வி காரமொடு : கன்னியென்னைத் தீண்டிடிலிம்
மேதினியி லுன்சிரசு : மீளாது நிக்ஷயமாய்.
மாண்டிடுவீ ரன்றியுநீர் : மலைகடல்தீ வாந்திரமும்
தாண்டியெர்ளிந் தாலுமந்த : தக்ஷணமே யங்குநின் று.
உன்சிரசைக் கொய்தழித்து : உயிரைப்ப றித்துடலை
சின்னபின்ன மாகவவர் : சிதைத்திடுவா ராகையினுல்.
அவ்வா று நேராமல் : அவனிதனி லுள்ளளவும்
செவ்வையாய் நீருமெந்தன் : சீர்கற்பைக் காத்திடிலோ.
இம்மைம றுமையிலும் : இணையில்லாப் புண்ணியராய்
சம்மனசோர் நேசரென : சாஸ்வதமாய் வாழ்ந்திடுவீர்."
என்றமொழி கேட்டதுதான் : ஏரழகு சித்திரம்போல்
நின் றுவிட்டா னம்மம்மா : நீண்டநிமை கொட்டாமல்.
அசையாது நிற்குமவன் : ஆச்சரியங் கொண்டவனுய்
நிசமாக வேயிவட்கோர் : நேசபர்த்தா வுண்டெனவே.
எண்ணுத வெண்ணமெல்லாம் : எண்ணிமனஞ் சோர்ந்தவ [னுய்
"பெண்மணியே யுன்வார்த்தை : பெரும்பிசகாய்க் காணுவ [தால்.
நீ சொன்ன தூதனையென் : நேத்திரங்கா ணுவிடிலிக்
காசினியி லுன்வாக்கை : கனவிலும்நான் நம்பிடவே.
மாட்டேனி துநிசமே : மற்றெவனு முண்டானுல்
வேட்டைநா ணுடியேதான் : விடுவேனி ருவரையும்.

ஆஹாக ருங்கடலின் : ஆழமதைக் கண்டிடினும்
ஆகாதிப் பெண்கள்மன : ஆழமதைக் கண்டறிய.

நூலறியா மானிடனை : நோக்கினுமீ ரேழுமுழச்
சேலையணி மாதர்களை : திண்புவியில் நம்புவதோ?

ஆல்விழுது போன்றவழ : கானகருங் கூந்தலராம்
சேல்விழிகொள் மாதர்களை : சிறிதளவும் நம்புவதோ?

பெண்களின்ஜா லப்புரட்டால் : பேர்பெரிய தேவரெல்லாம்
மண்ணில்மதி கெட்டழிந்த : வாரதுபோல் நானழிந்தேன்."

என்றவனுங் கர்ச்சிக்க : எந்திழையா ளேக்கமுடன்
நின்றவனுக் கப்பொழுதே : நீதியுடன் சொல்லிடுவாள்.

"கண்ணுக்குக் கண்ணான : காதலனே! யென்மனது
புண்ணுற நீயெனக்குப் : போதித்த தஞ்சரியே.

சதுர்வரங்கள் கொண்டவெந்தன் : சம்மனசைக் காண
[வெனில்

சிதறவே யும்முடைய : சிற்றின்ப தோஷமெல்லாம்.

பற்றறவே போக்கியபின் : பரமசுதன் கட்டளைபோல்
உற்றமன தோடுநிறை : உயர்ஞானஸ் நானமதால்.

கழுவித்து டைத்துவிட்டு : களங்கமின்றி நீரிருந்தால்
பழுதின்றி யக்கணமே : பார்த்திடுவீர் தூதுவனை.

உண்மையிது" வென்றுரைக்க : உத்தமனு மேமயங்கி
"மண்ணினிலே நான்புரிந்த : மாகோடி தோஷமற.

தந்தரங்க ளுண்டோவித் : தார்தலத்தில் மாதேயென்
சிந்தைதெளி வுற்றிடவே : செப்பிடுவா" யென்றவுடன்.

மாதுரிய வாசகியாள் : மாகனிவா யப்பொழுதே
சாதுரிய வாக்குகளால் : சாற்றுகிறு "ளென்பிரிய.

அன்பரே! பூதலத்தில் : அரியசத்ய வேதமதை
இன்பமுட னேதிடவே : இருக்கிறுர் வேதியர்கள்.

அவர்களே யும்பவங்கள் : அத்தனையும் போக்கிடவும்
நவமாக வும்மையொரு : நல்மனித னுக்கிடவும்.
செய்யசக்தி யுள்ளமகா : சீர்மறைகு ருக்க" ளென
மெய்பதறி வாலனவன் : மேட்டிமையாய்ச் சொல்லிடுவான்.
"வையகத்து மானிடர்க்கிவ் : வல்லமைக ளுண்டெனில்நான்
கைநொடியில் போய்வருவேன் : காதலியே யெங்கவர்கள்."
என்றவனை மூந்திடவே : ஏககற்பி னுத்தமியாள்
அன்றுமலர்ந் தாடுஞ்சிறு : அரும்புபோல் பல்துலங்க.
மிக்கமரி யாதையொடு : மெய்சோர்ந்த வாலனிடம்
அக்கணமே சொல்லுகிறுள் : "ஆசைமிகு மென்னினிய.
ஒப்பில்லா நாயகனே! : ஓங்குமனை யுள்ளநெடும்
அப்பியா வீதிவிட்டு : அப்பாலோர் மூன்றுமையில்.
தோதாக வேகடந்தால் : தொகையிலே தானடங்கா
ஆதுலர்கள் கூட்டமதாய் : அவ்விடத்தில் சூழ்ந்திருக்க.
காண்பீர வர்களிடம் : கண்ணியமாய் வாய்திறந்து
நாணமின்றி சொல்லிடுவீர் : 'நான்தான்செ சீஷியரின்.
தூதுவனு மாவேன்நீர் : துணையாக வந்தெனக்கு
ஓதரிய சாந்தகுண : ஊர்பான்மேற் பிராணியனா.
காண்பியுங்க' ளென்றுசொன்னுல் : கணப்பொழுதி லேயழைத்து
தாண்டிடுவா ரக்கணமே : தர்மனையுங் கண்டிடுவீர்.
அங்கவர்ப தம்பணிந்தால் : ஆசீர ளித்தவரோ
சங்கையுறுந் தீக்ஷைதனைத் : தந்திடுவா ருந்தனுக்கு.
பெற்றவுட னிப்புவியில் : பேதமையால் நீர்புரிந்த
சிற்றின்ப தோஷமெல்லாம் : சிட்டாய்ப்ப றந்தொழிய.
நானுரைத்த வென்னுடைய : நவமான சம்மனசை
பாஞெளிகள் வீசிடவே : பார்த்திடுவீ" ரென்றவுடன்.
புறப்பட்டான் நேசர்களே! : புண்ணியனு மக்கணமே
சிறப்பாக வேதனியாய் : செல்லுகிறு னவ்விருளில்.

---

## 14-வது அத்தியாயம்.

### ஊர்பான் மேற்றிராணியார்.

எங்களைப்போ லுத்தமிகள் : இவ்வுலகி லில்லையென்று
சங்கையின்றி யேபிதற்றும் : சகலதங்கை மங்கையரே!
கட்டழகு மாதர்மக்கள் : கன்னியர்மற் றெல்லோரும்
நெட்டுயிர்பி ரிந்தவர்போல் : நித்திரையி லாழுமந்த.
நடுச்சாம வேளையிலே : நடக்குமடி கேளாமல்
துடுக்காக வேயவனும் : துரிதமா யோடுகையில்.
கருத்தவிரு ளானதினல் : காலால்வ ழிதடவி [படி.
தெருக்களையெல் லாங்கடந்து : தேன்மொழியாள் சொன்ன
குறித்தவிட மேகையிலே : கூடியஜ னங்களிடும்
பெருத்தமனுக் கூச்சலினல் : பேதலித்து நின்றவனாய்.
மேகமொடு வாரியது : மோதிக்கு முர்வதுபோல்
வேகமா யவ்விடத்தில் : விறைந்தொலிக்கும் விந்தைதனை.
இன்னதென்று தானறிய : ஏகினது மேந்திழையாள்
சொன்னமொழி போலவங்கே : சூழ்ந்திருந்த யாசகர்கள்.
"ஐயா! நீ ரிங்குவந்த : ஆத்திரந்தா னின்னதென
மெய்யாக வெங்களுக்கு : மொழிகுவீ" ரென்றிறைஞ்ச.
மேன்குலத்தி லேயுதித்த : மேன்மையையும் பாராமல்
தேன்மொழியாள் சொன்னதுபோல் : தேட்டாளன் சொல் [லுகிறன்.
"உங்களைநன் றுயறிந்த : உத்தமிசெ சிலியரின்
சங்கைநிறை தூதுவன்நான் : சாகரம்போ லிங்கிருக்கும்.
உற்றகுண சீலமுனி : ஊர்பான்மேற் றிராணியரை
சற்றுநான் கண்டிடவே : சாடிவந்தே" னென்றுரைக்க.
அக்கணமே பாய்ந்தொருவன் : ஆத்திரமா யோடினதும்
திக்கெனவெ ரியுமொரு : தீபமதை யேந்தினனாய்.

ஒப்புறவாய்ப் பூசைகண்டு : ஓங்குபத மேபடையும்
அப்பெருஞ்சு ரங்கமதில் : அவர்குறித்தி ருந்தவொரு.
தடந்தனிலே வாலிபனை : தானழைத்துச் செல்லவங்கு
நடந்தபெரு மற்புதத்தை : நங்கையரோ கேட்டிடுங்கள்.
பொறுமையே மன்னுருவாய் : பூதலத்து தித்ததுபோல்
அருமையாய் வீற்றிருந்த : ஆண்டவரும் வாலிபனை.
பார்த்துமனம் பூரித்துப் : "பாசமுள்ள வென்மகனே ! [னே ?
வேர்த்தமுகத் தோடுவிங்கே : விரைந்துவந்த விந்தையென்
உள்ளதைநீ யுள்ளபடி : ஓதிடப்பா வுன்மனதில்
எள்ளளவு மையமுற்று : ஏங்காதே" யென்றுரைக்க.
கள்ளங்க படமில்லா : காதலனு மப்பொழுதே
உள்ளம்நடு நடுங்க : உத்தமரைக் கண்ணோக்கி.
"வித்தகரோ ! மெய்த்தவத்தின் : வேதியரோ மேன்மைநிறை
சத்தியத்தை யோதிவைக்கும் : சற்குருவே" யென்றழைத்து.
"சாற்றரிய போதகரோ ! : சற்குணசெ சீலியரை
நேற்றேம ணம்புரிந்த : நேசன்வ லேரியன்நான்.
பள்ளியறை யுள்ளேநான் : பாங்காய்நு ழைந்தவுடன்
துள்ளியென்ம னந்துடித்து : சோர்வடைய வென்தேவி.
தங்கள்திரு வாசீரால் : தாரணியில் நான்புரிந்த
கங்குகரை யில்லாத : கனகோடி பாவமெல்லாம்.
பஞ்சாய்ப்ப றந்தகல : பார்த்திடுவீ ரென்னுடனே
சஞ்சாரம் செய்துவரும் : சம்மனசை யென்றவளும்.
சொல்லியதை நம்பிவந்தேன் : சுத்தகுண வாண்டவனே !
வில்லம்பு போல்விரைந்து : வேகமாய்த் தங்களிடம்.
ஆகவே தந்திடுவீர் : ஆசிரை யட்டியின்றி
தாகமுட னிவ்வெளிய : தாசனுக்கே" யென்றிறைஞ்ச.
அந்தணரா மாண்டவரும் : அகமகிழ வப்பொழுதே
சந்தோஷ வாரிதனில் : சாடினராய் வாணோக்கி.

'மூவுலக முண்டமைத்து : மூவிரலால் தாங்கிவரும்
தேவேதி ருப்பரனே ! : தெய்வத்தி ருவுருவே !
பூவுலகில் சுத்தமனப் : புண்ணியனை யற்புதமாய்
கூவியழைத் தாதரிக்கும் : குருபரனே !' யென்றிறைஞ்சி.
'காசினியில் நீர்விடுத்த : கன்னிகைசெ சிலியரின்.
மாசில்லா நெஞ்சமெனும் : மங்காநி லந்தனிலே.
விதைத்தவித்து தான்முளைத்து : வீணாகா தோங்கியது
கதித்துப்ப மூத்திடநீர் : கனபுதுமை செய்ததினால்.
தயாளகுண சம்பன்ன : சர்வேசா ! வுந்தனுக்கே
தியானத்து திப்புகழ்கள் : சாற்றுகிறே' னென்றழுது.
'காட்டானை போன்றபெருங் : கடினகுண காதலனை
கூட்டமதி யுள்ளசிறு : குணமுள்ள செம்மறிபோல்.
சாதுகுண னாக்கியதுன் : சர்வசக்தி யானதினால்
தீதறவே யிங்குவந்து : திகைத்துநிற்கும் வாலனும்மை.
அறிந்துமிக வாவலுடன் : அனுதினமும் போற்றுதற்கு
தெரிந்துவரம் தந்தருளும் : தேவனே !' யென்றவரும்.
வாயார வாழ்த்தியபின் : வளர்சிரசைத் தாழ்த்திசிறு
சேய்போல வேயழுதார் : சேல்விழிகொள் செல்வர்களே !
ஆண்டவரு மவ்விதமாய் : ஆண்டவனை வேண்டுகையில்
பாண்டியகு லத்துதித்த : பாவையரே ! வோரரிய.
சம்பவந்தான் நேர்ந்ததம்மா : சாந்தகுண சிலர்களே !
செம்மையாய்க் கேட்டிடுங்கள் : சேதியது வென்னவெனில்.
ஒதிடவு மென்னுடைய : உடலம்நடுங்குதம்மா
நீதிமகா மன்னவன்போல் : நிர்த்தனம தாயிலகும்.
மின்னலைப்போ லேஜொலிக்கும் : மிக்கபரி சுத்தமுள்ள
உன்னதமாய் நீண்டபெரும் : உடையைய ணிந்தவராய்.
ஆகாய வானமதில் : அழகியசிம் மாசனத்தை
மேகமது சூழவதின் : மேலேய மர்ந்தொருவர்.

பொன்போன்ற வக்ஷரங்கள் : பூட்டியவோர் புத்தகத்தை
நன்னயமா யேந்தியங்கே : நகர்பதிபோ லவ்விடத்தில்.
காக்ஷியொடு நிற்கவங்கே : காணும்த ரிசனத்தை
சூக்ஷியாய்க் கண்டபரி : சுத்தகுண வாலனிவன்.
பொறிசிதறி வாய்பதறி : புத்திதடு மாறினனாய்
அறிவில்லாப் பாலகன்போல் : ஆஹா! வெ னக்கதறி.
தப்பாதி டிவிழுந்து : தாழ்ந்தபனை போலிவனும்
குப்புறவே தான்விழுந்து : கோதில்லான் பூமிதனை.
காதலொடு பற்றியந்த : காக்ஷியிலே கண்டதிரு
பாதகம லங்களையே : பணிந்திட்டான் முத்தமிட்டு.
ஊசிதனைக் காந்தமது : உவந்தேயி ழுப்பதுபோல்
பாசவுல காசையினால் : பற்றியுழல் பாவையரோ!
சிறந்திலங்குங் காக்ஷிதந்து : சீலகுண வாலவனை
புறங்கவிழச் செய்தவந்த : புண்ணியனை நீங்களிப்போ.
இன்னவரெ னவறியா : தேக்கமுற வேண்டாம்நம்
சின்னப்பர் தானம்மா : சீராயெ ழுந்தவரும்.
வலேரியனை மிக்கபெரும் : வாஞ்சையுடன் கைகளினால்
நிலையாக வேநிறுத்தி : நேசமுடன் சொல்லிடுவார்.
“அப்பனே! யிப்புவியில் : அற்புதமா யுற்பவித்த
ஒப்புயர்வே தில்லாத : உத்தமியின் மித்திரனே!
உந்தனைரட் சித்திடவே : உளமகிழ்ந்து வந்தேனுன்
சிந்தைதனை நீக்கியிதை : சீக்கிரமாய்ப் பா” ரெனவோர்.
புத்தகத்தைத் தான்திறக்க : பூரித்து ளமகிழ்வாய்
உத்தமனும் சத்தமிட்டு : ஓதுகிறா னிவ்விதமாய்.
‘ஈராறு மண்டலமும் : இன்னுமுள்ள மற்றதையும்
சீராயொ ருகொடியில் : சிருஷ்டித்த ளிக்கவல்ல.
நீதிபரன் தாமொருவர் : நித்திய வர்விடுத்த
ஓதரிய மாமறையும் : ஒன்றாயு லகினிலே.

ஈனகுண மானிடர்க்கு : இவர்விடுத்த பேரரிய
ஞானஸ்நா னப்புகழும் : நானிலத்தி லொன்ருகும்.'
என்னுமிந்த வார்த்தைகளை : எழுத்தெழுத்தா யோதியந்த
சின்னஞ்சிறு வாலனவன் : திகைத்தவனாய் நிற்கையிலே.
தெரிசனந் தந்தவரோ : தேட்டாள னையணுகி
கரிசனையோ டேயணைத்து : "காணரிய வென்மகனே!
நிசமெனவே யிந்தமகா : நிறைந்தபெருஞ் சத்தியத்தை
விசுவசித்துப் போற்றினையோ : விளம்புவா" யென்றவரும்.
கேட்டுவாய் மூடுமுன்னே : கேட்டவரை நோக்கியவன்
"தாட்டிகமாய் நம்புகிறேன் : சாமியே" யென்றுரைத்த.
மாத்திரத்தி லர்ச்சிஷ்ட : மாதவனு மாண்டவரை
தோத்திரஞ்செய் தக்கணமே : தோதாய்ம றைந்தகல.
மதுவுண்ட வண்டினங்கள் : மயங்குவது போல்நின்று
புதுமையாய்க் கண்டவிந்த : புகலரிய காக்ஷியினால்.
திடங்கொண்டு நிற்கையிலே : தீதில்லா தேவமுனி
தடங்கலொன்று மில்லாமல் : தாட்டிகமாய்ச் சொன்னவுப.
தேசமதைக் கேட்டுசிந்தை : தெளிவடைந்த தேட்டாளன்
ஆசையுடன் பேரின்ப : அருள்தீக்ஷை தானடைந்து.
பழையவுடை நீக்கிசற்றும் : பழுதில்லா வெண்ணுடையை
தழுவியே முத்தமிட்டு : தானணிந்த தக்ஷணமே.
மூன்றுமணி யாகுமந்த : முதிர்ந்தவிரு ளானதிலே
சான்ரோனு மேதனியாய் : சாடினன் மாளிகைக்கு.

---

## 15-வது அத்தியாயம்.

### பள்ளியறை.

உண்டுறங்கு மாவலினால் : உள்ளசொற்ப காலமதை
விண்டொழிக்க வேவிரும்பும் : வீண்மங்கை மாதர்களே!
நிறங்குலைந்து புத்திமங்கி : நீள்கரங்க ளோடும்மை
சிரங்கவிழச் செய்யுமொரு : சேதிதனைக் கேட்டிடுங்கள்.
நங்கைஜெய சீலியரின் : நற்புத்தி போதனையால்
மங்களமாய் தீக்ஷைதனை : மனமகிழ்வாய்ப் பெற்றவுடன்.
ஓயாம லோடிவந்த : உத்தமனு மாத்திரமாய்
பாயாம லேமெதுவாய் : பள்ளியறை பார்த்தனுகி.
உத்தமியாள் சோர்ந்தயர்ந்து : உறங்கிடுவா ளென்றவனும்
சத்தமின்றி யேகதவை : சார்பாய்த்தி றந்திடவே.
பட்டப்பகல் போல்ஜொலிக்கும் : பாரில்லாக் காக்ஷிதனை
எட்டியவன் நின்றுகொண்டு : ஏக்கமுடன் பார்க்கையிலே.
கற்பினலங் காரிமுழங் : காலினிலி ருந்தபடி
அற்பமுங்க ளங்கமில்லா : ஆழ்ந்ததி யானமதில்.
மூழ்கினவ ளாயிருக்க : முக்கோடி சூரியர்கள்
தாழ்ந்தேதப டிபணியும் : தன்மையதா யவ்வறையில்.
காந்தியுடன் மிக்கழகாய் : கனவடிவு கொண்டமகா
சாந்தகுண முள்ளவொரு : சம்மனசு நிற்பதையும்.
அவரிருக ரங்களிலே : ஆர்வெண்ம லர்களினால்
நவமாகப் பின்னியவிர் : நன்முடிக ளேந்தினராய்.
நிற்குமிந்த வற்புதத்தை : நேர்முகமாய்ப் பார்த்தவுடன்
அற்பமுங்க ளங்கமில்லா : அன்பனுமிக் காவலுடன்.
அக்கணமே யோடோடி : அவரடியைத் தான்பணிந்து
மிக்கமகா மேனையுடன் : மேல்நோக்க வக்கணமே.

மங்கையரின் தூதுவனார் : மணங்கமழு மோர்முடியை
தங்கையரின் பொற்சிரசில் : தரித்துடனே மற்றொன்றை.
கலகலத்த நெஞ்சமுடன் : காலடியில் வீழ்ந்திருக்கும்
வலேரியா னின்சிரசில் : வண்மையாய்ச் சூட்டினதாம்.
சொல்லுகிறா "னென்பிரிய : சுத்தமண வாளர்களே !
தொல்லுலகி லேமலர்ந்து : சோர்ந்தழியும் புஷ்பமல்ல.
அற்பக்க ளங்கமின்றி : ஆதனையி னுள்ளளவும்
கற்பின்வ ரம்புகளைக் : கடவாம லேநடந்தால்.
இன்றணிந்த புஷ்பமுடி : இன்றுமென்றும் வாடாமல்
நன்றாக வேமலர்ந்து : நறுமணங்கள் தான்கமழும்.
என்றறிவீ" ரென்றுரைத்து : இன்பனைக்கை யாலணைத்து
"நன்றியுள்ள வென்னுடைய : நண்பனே! யென்னினிய.
கற்பினலங் காரியிவள் : கருத்திற்கி சைந்ததினால்
நற்பலனைப் பெற்றதன்றி : நாதனின்க டாக்ஷமுற்றாய்.
உத்தமனே ! சத்தியனே ! : உந்தனைப்போ லிவ்வுலகில்
புத்திதெளி வுற்றவொரு : புண்ணியவா னில்லையப்பா.
நிரந்தரமா யென்றுமுள்ள : நிமலசரு வேசுரனின்
அருந்தவமா புத்திரன் நீ : ஆனதினா லிப்பொழுதே.
என்னவரம் நீயடைய : இன்னமும்வி ரும்புவையோ
சொன்னதுபோல் கொண்டிடுவாய் : சுவாமிகி ருபையினால்."
என்றுரைத்த வானவனின் : இங்கிதமொ ழிக்கிசைய
என்னவரங் கேட்டானென் : றெண்ணுகிறீர் தங்கையரே !
மட்டுதிட்ட மில்லாத : மாகோடி யாஸ்தியுடன்
செட்டாக நான்குவகை : சேனைகளு மல்லாது.
சம்பத்தும் மற்றனைத்தும் : சாஸ்வதமாய் வேணுமென்று
கம்பளத்தான் போலிவனும் : கலகலெனச் சொல்லாமல்.
"அபரூப வானவனே ! : அறிவில்லா வென்தனுக்கு
திபூர்ஸ னென்னுமொரு : தேட்டாளத் தம்பியுண்டு.

பூமணமும் நாரதுவும் : பொருந்தியி ருப்பதுபோல்
சாமணம்போ லிப்புவன : சாகரத்தி லேயுதித்தோம்.
பாலகுண வாளனவன் : பகுத்தறிவே யில்லாமல்
பூலோக வின்பசுகம் : பொருந்தினனு யஞ்ஞான.
மார்க்கபதி லேயுழன்று : மாளாம லென்தனைப்போல்
தீர்க்கமறை சத்தியத்தை : தீவிரமாய்த் தான்தழுவ.
மன்றாடி நிற்பதல்லால் : மாபாவி வேறெதையும்
இன்றுநான் கேட்பதில்லை : எம்மினிய தூதுவரோ!"
என்றிறைஞ்சி வேண்டிடவே : எதிர்நின்ற வானவனும்
"நன்றாயு ரைத்தாயுன் : நன்மனம்போ லாக" வென்று.
உறுதிமொழி கூறியபின் : "உன்னினிய பத்தினியால்
திருமறையை நீதழுவ : தேவனின்தி ருவுளம்போல்.
ஈருடலாய் நீர்பிறந்தும் : இணைபிரியாத் தம்பியையும்
ஓர்கொடியில் ரெக்ஷிப்பார் : உந்தனைக்கொண் டஞ்சாதே.
அன்றியுந்தி ரித்துவத்தின் : ஆசீரா லிப்புவியில்
ஒன்றாக நீரிருவர் : ஓதரிய மெய்வேத.
சாக்ஷிகளாய்த் தான்மரித்து : சாகரத்தை விட்டுநிறை
காக்ஷியொளிர் மோக்ஷமதில் : காதலுட னக்ஷயராய்.
சிறந்திடுவீ" ரென்றுரைத்து : சீர்சிறந்த வானவனும்
பறந்திட்டான் நேசர்களே! : பள்ளியறை விட்டகன்று.
மங்கைதிரு மங்கையிந்த : மாதரசைத் தான்மணந்த
பொங்குகுண வாளனவன் : புகழடைந்த விந்தைதனை.
செப்பிடவே கேட்டுவந்த : செல்வர்களே! தாரணியில்
அப்படியே நீங்களுங்கள் : அருமைமண வாளருடன்.
ஒப்புறவாய் பக்தியுடன் : உத்தமராய் நீர்நடந்தால்
தப்பாது வானுலகில் : சாஸ்வதமாய் வாழ்ந்திடுவீர்.

---

# 16-வது அத்தியாயம்.

## புஷ்ப முடியின் மகிமை.

யோக்கியதை யற்றவர்போல் : யூகமதை விட்டகற்றி
பாக்கியச லாக்கியராய் : பாமுலகில் வாழ்பவரோ !
வானவனு மேகியபின் : வாலவனும் தேவியுமாய்
ஞானமதி லாழ்ந்தவராய் : நல்லிரவைத் தாம்கழித்து.
காலையிளங் காலையிலே : கதித்தெழுமா சூரியன்போல்
பால்வதனச் சுந்திரர்கள் : பள்ளியறை யுள்ளிருக்க.
எக்கால முந்தனியாய் : இருந்தறியா தீபூர்ஸன்
சிக்கெனவே தானெழுந்து : தீவிரமா யோடிவந்து.
பள்ளியறை தானணுகி : பார்த்தவனு முண்ணுழைய
கள்ளங்க படமில்லாக் : காதலர்க ளுள்ளிருக்க.
கண்டசிறு வாலனிவன் : கண்ணிபமாய்க் கைகுலுக்கி
செண்டுமலர் மாவதன : செல்வர்களின் க்ஷேமமதை.
உள்ளன்பு நேசமுடன் : உள்ளிருக்கும் வாலனிவன்
துள்ளிமகிழ் கொண்டவனாய் : துரிதமாய்ப் பேசுகையில்.
வாலன்தி கைதிகைத்து : வண்மைமிகுந் தன்னினிய
கோலமண வண்ணியனை : கூப்பிட்டுச் சொல்லுகிறான்.
"இப்புதிய சிற்றறையில் : இன்பப்ப ரிமளங்கள்
கப்பிக்க மழுவதின் : காரணத்தை நானறிய.
செப்பிடுவ தன்றியுமென் : சீலகுண வண்ணியரே !
ஒப்புடனான் கண்டிடவே : ஓர்மலரைத் தந்திடுவீர்.
கடினகுளிர் காலமதில் : காசினியி லெங்குமில்லா
படிபுகமு மம்மலரை : பார்த்திடநான் வேணுமண்ணி.
தந்திடுங்க ளண்ணியரே ! : தாமதங்கள் செய்யாமல் [அ.
இந்தமகிழ்ந் தெந்தனுக்கோர் : திருமலரைத் தாரு" மென்

கொஞ்சுமொழி பாலகன்போல் : குணவாள னண்ணியிடம்
கெஞ்சியங்கு மன்றாடி : கேட்கையிலென் தங்கையரோ !

அக்கணமே நாயகியாள் : ஆர்ந்தணிந்த வம்முடியை
பக்குவமாய்க் கையேந்தி : "பாரு"மென வேகொடுக்க.

ஆசையுட னன்னவனும் : அட்டியின்றி கைநீட்ட
வாசனைதான் வீசுதல்லால் : வாஸ்தவமாய்ப் பூமுடியை.

கண்களினால் காணாமல் : கலங்கிடுமிவ் வாலிபனை
அண்ணனவ லேரியனும் : ஆசைமிகும் தன்னினிய.

தம்பிதனை சேர்த்தணைத்து : தாங்கியேமார் போடணைத்து
நம்பிக்கை யோடுவொரு : நாற்காலி மீதமர்த்தி.

"புண்ணியனே! கண்மணியே! : புகலரிய வுன்னினிய
அண்ணியரும் நானுமின்று : அணிந்திருக்கும் பூமுடிகள்.

தடவரையி லோர்வினையும் : தாசருக்கு நேராமல்
கடவுளே தாமனுப்பி : காத்திருந்து நோக்குவதால்.

சுந்திரனே! யிவ்வுலகில் : சூழ்ந்தலையு மஞ்ஞான
அந்தகருக் கிம்மலர்கள் : அற்பமுமே தோன்றாது.

ஆணும் நின்மலனும் : ஆண்டவரைத் தோத்தரித்து
ஞானவருள் தீக்ஷைதனை : நாட்டமுட னேயடைந்தால்.

நீயுமுந்தன் கண்களினால் : நிக்ஷயமாய்க் காண்பதன்றி
பாயுந்தி ருவுதிரப் : பங்கடைவா" யென்றவிந்த.

அருள்மொழியைக் கேட்டுசிறு : அன்பனவன் வாய்பொதிந்து
பொருளறியா தவ்விடத்தில் : பொம்மையைப்போல் நின்றுகொண்டு.

பண்ணாத யோசனைகள் : பண்ணியபின் னாத்திரமாய்ன்.
"அண்ணாவே! நீங்களிப்போ : அறைந்தமொழி யம்புவிரி
சொற்பனமோ கற்பனையோ : சொல்லிடுங்க ளெந்தனுக்கு
சற்பனையு மின்றியதை : சாற்றிடுங்கள் நானறிய."

என்றிவனும் வேண்டிடவே : இணையிலா வண்ணனவன்
மன்றுடும் தம்பியிடம் : மாதயவாய்ச் சொல்லுகிறன்.

" என்றுமெனை விட்டகலா : என்பிறவி தம்பியரோ!
ஒன்றுக வேபிறந்து : ஒப்புறவாய் நாமிருவர்.

மேட்டிமையாய் வாழ்ந்திடினும் : மெய்யறிவே தில்லாமல்
நாட்டின்தே வாதிகளை : நாட்டமுடன் கைதொழுது.

ஆற்றுருவ மில்லாநம் : ஆத்துமத்தைப் பாவமெனும்
சேற்றினிலே தான்புதைத்து : சீர்குலைய விட்டுவிட்டோம்.

ஆண்மையுட னேவளர்ந்தும் : அறிவில்லாப் பேதைகள்
[போல்
வீண்பொழுதைப் போக்கிவெகு : வியர்த்தமே யாக்கிவிட்
[டோம்.

ஆனாலும் கேளுமெந்தன் : அன்பனே! யென்றழைத்து
பானொளிசேர் கன்னிகையைப் : பார்த்தவண்ணம் சொல்லு
[கிறன்.

பளிங்குசொரு பம்போலே : பாசமுடன் வீற்றிருக்கும்
களங்கமே யில்லாத : கற்பினலங் காரியிவள்.

சென்றபிற வுதனில் : செப்பியமா போதகத்தை
நன்றியுடன் கேட்டொழுக : நான்மனது கொண்டதினல்.

ஆதியந்த மில்லாத : ஆண்டவனை நானறிய
மேதினியி லேயடைந்தேன் : மேலான பாக்கியத்தை."

என்றண்ணன் சொல்லிடவே : இணையில்லா வாஞ்சையுடன்
ஒன்றான தம்பியவன் : ஓசையெழச் சொல்லுகிறன்.

" அண்ணவே! யாதேனும் : அற்புதநற் காட்சிகளை
கண்டதுவு முண்டோவென் : கசடறவே சொல்லு"மென.

" அப்பனே! யெங்குமில்லா : அற்புதத்தி லற்புதந்தான்
செப்பவெனி லோர்கோடி : செங்கதிரு மொன்றாக.

உதித்ததுபோ லிவ்வறையில் : உண்மையிலோர் வான்றூதன்
கதித்தெழுந்து நின்றதையென் : கண்ணாலே கண்டதன்றி.
அவரோதன் வாய்மலர்ந்து : ஆழ்ந்தபல புத்திகளை
நவமாகச் சொல்லியபின் : நகர்ந்தகன்றார் கண்டுநின்றேன்."
என்றண்ணன் சொன்னவிந்த : ஏற்றசுப வார்த்தைகளை
நன்றாகக் கேட்டுமவன் : நம்பாமல் சொல்லுகிறான்.
"அண்ணா! நீர் சொல்லுவது : ஆகடிய வார்த்தைகளோ?
பெண்ணினங்கள் மெச்சிடவே : பேசும்ப ழங்கதையோ?
சங்கைமிகு மண்ணாவே! : சத்தியம்போல் நீருரைத்த
உங்களது வார்த்தையது : உண்மையிலு முண்மையெனில்.
எந்தனிரு கண்களினால் : இந்திரவான் றூதுவனை
சுந்திரவ டிவிலங்க : சூழ்புவியில் காணாமல்.
நம்பே" னெ னவுரைக்க : நற்குணவ லேரியனும்
"தம்பி! நீ காணவெனில் : தாமதங்கள் செய்யாமல்.
அண்ணனைப்போல் நீயுமந்த : அருள்ஞான தீக்ஷைபெற்
கண்களினால் கண்டிகத்தில் : கனபுகழ டைந்திடுவாய். [றால்
ஆகவே யென்பிரிய : அன்பனே தம்பியே! நீ
தேகமுட னேதொழுவும் : தேவதாைஸி ராகரித்து.
சங்கையுடன் மெய்யான : சர்வேச னைப்பணிந்து
அங்கீக ரித்தவரை : ஆதரையி லேதொழுதால்.
உள்ளபடி காண்பா" யென் : றோதிடவே வாய்பதறி
துள்ளியந்த வாலனவன் : சொல்லுகிறா னாத்திரமாய்.
"இம்மட்டும் போதுமண்ணா : இத்தரையில் நான்தொழுது
கும்பிட்ட தேவர்களை : கூசாம லேசிமிக.
குறைகூறி நம்முடைய : குலத்தினுக்கே கேடாக
முறைமீறி நீசமத : முட்புகவோ சொல்லுகிறீர்?
காலாகா லங்களிலும் : கண்டுவரும் தேவர்களை
காலால்மி தித்தகற்ற : காசினியி லேற்குமதோ?

ஓர்பெண்ணுக் காகவேநம் : உண்மையுள்ள தேவர்களை
வீரியங்கள் பேசியிப்போ : விலக்கிடவோ சொல்லுகிறீர் ?
பதறியே செய்யுமெந்த : பல்லளவு வேலைகளும்
சிதறியே வோர்நொடியில் : சீரழிந்து போய்விடுமே.
கொப்பணியு மாதருடன் : கூடிவாழ் தேவர்களை
தப்புற்ற வர்களென்றே : தள்ளிவிடச் சொல்லுகிறீர் ?
மங்கைபல மங்கையரை : மணர்ந்துமகிழ் கொண்டிலகும்
தங்ககுண தேவரையோ : தாழ்மையாய்ப் பேசுகிறீர் ?
முப்பதொரு முக்கோடி : மூர்க்ககுண தேவர்களை
துப்பற்ற வீணரென்றே : தூற்றிவிடச் சொல்லுகிறீர் ?
ஆரியக்கூத் தாடினுமென் : அண்ணுவே ! யவரவர்தம்
காரியத்தின் பேரிலொரு : கண்ணிருக்க வேண்டாமோ ?
பாட்டனவன் பூட்டனுமே : பரம்பரையாய்ப் பார்தொழுத
நாட்டின்தே வாதிகளை : நான்தொழுது கொண்டிருக்க.
பெருமையுள்ள வக்கோடி : பேர்பெரிய தேவர்கள்முன்
ஒருவரென நீர்புகழும் : உன்கடவு ளெம்மூலை ?
ஆடியவோர் பெண்ணழகை : ஆவலுடன் கண்டிடவே
மோடிவித்தைக் காரனைப்போல் : முகமதனை நாலாக.
மாற்றிமகிழ் வுற்றிருக்கும் : மாபிரம தேவனைநான்
போற்றிப்பு கழ்ந்திடுவேன் : பூதலத்தி லுள்ளளவும்.
பெண்களின்மே லிச்சைகொண்ட : பேர்பெரிய தேவரெல்
பண்ணினமல் யுத்தமதை : பாருலகில் யாரறியார் ? [லாம்.
ஆண்மையுள்ள வக்கோடி : ஆனபல தேவரையே
ஆண்மையுடன் நான்தொழுது : ஆசரிப்பே னதையினல்.
பழையதே வாதிகளை : பாரினிலே விட்டகற்றி
நுழையவே மாட்டேனுன் : நூதனமா மார்க்கமதில்.
என்னவித்தை யண்ணுவே ! : எற்குமோ வுங்களுக்கு
வின்னமில்லா தேவர்களை : விட்டகன்றி சோர்நொடியில்.

பிறந்தமுத லொப்புரவாய் : பேதமின்றி நாமிருந்தும்
சிறந்தவண்ணி யாலடைந்த : சீலமுறை தானிதுவோ ?
உடுக்கைசத்தங் கேளாமுன் : உருண்டுபுறண் டோடிவரும்
துடுக்கான தேவர்களே : சூரர்களே வீரர்களே !
புல்லறிவா லண்ணனவர் : புத்திகெட்டுப் போனதினுல்
நல்லறிவு தந்திடவே : நாடியிங்கு வந்திடுங்கள்.
அண்ணுவே ! பெண்களுடன் : அகமகிழ்வாய் வாழ்ந்து
கண்ணுன தேவர்களை : கைநெகிழ விட்டீரோ. [வரும்
கண்ணெதிரே வீற்றிருக்கும் : காணரிய வண்ணியரின்
பெண்புத்தி கேட்டுமனம் : பேதலித்துப் போனீரோ ? "
என்றிளைஞ னண்ணனிடம் : ஏளனமாய்ப் பேசுவதை
நன்ருகக் கேட்டுவந்த : நாயகிசெ சீலியம்மாள்.
இருளடர்ந்த மாய்கையிலே : இருக்குங்கொ முந்தனவன்
அருளடைய வேண்டுமென : ஆசையுட னேயழைத்து.
" கண்ணினுல் கண்டதும்பொய் : காதுகளால் கேட்டதும்
உண்மையைய றியவேநான் : ஓதுஞ்சில ஞாயமதை. [பொய்
தீரமுடன் கேட்டதனை : சிறிதளவுன் புத்தியினுல்
சீர்தூக்கிப் பார்க்கிலதின் : திண்மையைய றிந்திடுவீர்.
மண்பொன்ம ரங்களினுல் : மானிடர மைத்தவுங்கள்
கண்ணில்லாப் பேய்ச்சிலையை : காசினியில் தெய்வமென.
சொல்லிடுவோர் புத்திகெட்ட : சுத்தமுழு மூடரன்றி
நல்லறிவு கொண்டவர்கள் : நாவதினு லோதுவரோ ?
மண்ணினிலு யிர்பிரிந்து : மாளும்பி ணங்களுக்கும்
புண்ணியனே ! நீதொழுவும் : புத்தசிலை யானதற்கும்.
என்னவித்தி யாசமது : இருக்குதென்று நீரறிந்து.
சின்னவளாம் நானறிய : செப்புவது மல்லாது.
கண்ணிருந்தும் பார்த்திடுமோ? : காதிருந்துங் கேட்டிடுமோ?
திண்ணமாய் மற்றெதையும் : தீரவறிந் தோதிடுமோ ?

நெருப்பால தையெரித்து : நீறாக்கி நீண்டபெரும்
செருப்பால தையடித்து : சேதமுறச் செய்தாலும்.
கூறிப்புகழ்ந் திட்டாலும் : கூசாமல் கிட்டநின்று
காறியுமிழ்ந் திட்டாலும் : கட்டைத்து டைப்பமதால்.
ஓங்கியடித் திட்டாலும் : ஓலமிட்டு வாழ்த்திபல
சாங்கியஞ்செய் திட்டாலும் : சரியாயொ ரோவிதமாய்.
கோலமுடன் நோக்குஞ்சிலை : கோலமலங் கோலமும்பேய்
கோலமுமல் லாமலென்ன ? : கூறும்கொ ழுந்தனரோ.
பூட்டகமாய்ச் சொல்லவெனில் : புத்தியுள்ள புண்ணியனே !
நாட்டினுக்கோர் நல்லரசும் : நன்மனைக்கோர் நாயகனும்.
சூரியனும் வானுலக : சுருள்மதியு மொன்றாக
நேரியவிப் பூதலத்தில் : நிசமாயி ருப்பதுபோல்.
அண்டகோ ளங்களெனும் : அகண்டவிந்த வாறிரண்டு
மண்டலங்க ளத்தனைக்கும் : மாகடவு ளொன்றேதான்.
ஒன்றுமில்லா தேயிருந்த : ஓதரிய காலமதில்
இன்றேயா கட்டுமென : இயம்பியவவ் வோர்நொடியில்.
எல்லாச்ச ராசரங்கள் : எல்லாமும் வல்லவொரு
சொல்லாலே யுண்டமைத்த : சுத்தசரு வேசனுமாய்.
ஆறுலக்ஷ ணக்கடவுள் : அனுதிசு யம்புவுமாய்
சீருடன வரமைத்த : சிருஷ்டிகளின் காரணராய்.
மட்டில்லா நன்மையுள்ள : மாதெய்வ மாகையினால்
திட்டமாய் நீரறிவீர் : தேவர்கள்வே றில்லை" யென்று.
சொல்லியதைக் கேட்டுவந்த : சூரன்தி பூர்ஸனவன்
மல்லிகைபோ லேமலர்ந்து : மறுமொழிகள் சொல்லுகிறான்.
"அண்ணியரே ! நீருரைத்த : ஆகமமொன் றல்லாதே
மண்ணினில்வே றில்லையென்ற : மாமொழியை நம்பியேநான்.
சத்தியமா யெந்தனுயிர் : சாவால்பி ரியுமட்டும்
நித்தியனைப் போற்றிசெய்து : நீள்புவியில் வாழ்ந்திடுவேன்."

என்றிளைஞன் பூஜிதமாய் : இயம்பிடவே நாயகியாள்
நின்றபடி யாண்டவனை : நெஞ்சமதி லேதுதித்து.
போர்வையினு லங்கவனைப் : போர்த்துவது போலறைக்கண்
பார்வையினுல் பார்த்துமுக : பட்சநயங் காட்டியபின்.
கூறியநற் போதகத்தால் : குணமடைந்த புண்ணியனின்
மாரினிலே வாய்படிய : வாழ்த்தியே முத்தமிட்டு.
'தன்னிகரோ தில்லாத : தற்பரனே யுந்தனுக்கு
பன்னரிய தோத்திரங்கள் : பாருலகி லுண்டாக!'
எனவாழ்த்தி கற்புநிறை : ஏந்திழையாள் சொல்லிடுவாள்
"கனிவாகப் பேசியவென் : காணரிய சுந்திரனே!
இனிநாறு பேசுவதில் : என்னபல னுண்டுகண்டீர்
வினையில்லா வானுலகில் : வீற்றிடுவீர் சத்தியமாய்.
ஆகவே யென்னினிய : அருமைச்ச கோதரனே!
தாகமுட னிக்கணமே : தனிதீக்ஷை பெற்றுவர.
போய்வாரு" மென்றுகிறு : பூவையவள் சொல்லாமுன்
சேய்போல விச்சிறுவன் : சிந்தனைவே றில்லாமல்.
"அண்ணுவே! தீக்ஷயெனும் : ஆசீர ளிக்குமந்த
புண்ணியனு ரெங்கிருப்பார் : போய்வரலாம் வாரு" மென.
அண்ணனவன் தம்பிதனை : ஆசையுட னேயணைத்து
"புண்ணியனே தீக்ஷதனை : பூதலத்தி லேயளிக்கும்.
குருவொருவ ருண்டுதம்பீ : கூறுவே னன்னவரின்
புருவஞ்ச ரிந்திருக்க : புஷ்பம்போல் கண்குழித்து.
வானவில்போல் தேகமது : வளைந்திருந்தும் லௌகீக
மானதொல்லை யையொழித்து : வாழும்சி ரேஷ்டரவர்.
பத்தியிலும் புத்தியிலும் : பாய்ந்தேசி றந்தொளிரும்
உத்தமமேற் றிராணியர்பேர் : ஊர்பானென் றேயுரைப்பார்.
திட்டமுட னன்னவர்வாழ் : சீர்சிறந்த மாளிகையோ
பட்டணத்திற் கப்புறத்தில் : பறித்தெடுத்த பூமியினுள்.

அந்தரங்க மானவொரு : ஆழ்ந்தசு ரங்கமதில்
தந்திரமாய் வாழுகிருர் : தாரணியோர் காணுமல்.
உத்தமனே! காரணத்தை : ஓதவெனி லுண்மையிலென்
சித்தம்ப தைத்திடினும் : செப்பிடுவேன் கேட்டிடப்பா.
ஓர்குடையில் தேசமதை : ஒப்புறவா யாண்டுவரும்
பேரறிவி ழந்தகொடும் : பேர்பெரிய ராயரெல்லாம்.
சத்தியமா வேதமதை : சதமாக வேவெறுத்த
லுத்தர்களாய்த் தாமலேந்து : லூசியா சாட்சிசெய்து.
மாண்டாலும் வாசியென : மானிலத்தி லொன்றுன
ஆண்டவரைப் போற்றிவரும் : அன்புள்ள நேசர்களே.
ஆக்கினேயா லேசிதைத்து : அன்னவரைக் கொல்லுமந்த
பாக்கியத்தின் பங்கடைய : பாய்ந்துசென்று" ரென்றவிந்த.
வாசகத்தைக் கேட்டசிறு : வாலிபன்ம திமயங்கி
கேசரியோ டேயெதிர்த்து : கெட்டமத யானையைப்போல்.
மதியிழந்து புத்திமங்கி : வாடியவன் சோம்பிடவே
இதயங்க லகலங்கி : இயம்புவா னிவ்விதமாய்.
" அருமையுள்ள அண்ணுவே! : அம்புவியில் நாமிருவர்
பெருமையாய் வாழுகின்ற : பிரபல்ய வாழ்வைவிட்டு.
அற்புதர சாங்கமதை : ஆள்வதுபோல் கண்டசிறு
சொற்பனத்தை நம்பியவன் : சுகித்திருந்த வாறதுபோல்.
பார்வைக்குள் ளேயடங்கா : பரமனுக்கா யிக்கொடிய
தீர்வைதனக் குள்ளாகி : திகைத்திடுவ தும்மதியோ ?
கானகத்தி லோரிடத்தில் : கச்சிதமாய் வைத்தநெருப்
பானதுப டர்ந்தெரிந்து : பரவிடவே பக்கமுள்ள.
எல்லாமு மேயெரிந்து : ஏகமாய்ப் பாய்ந்துருகி
நில்லாமல் கண்ணெதிரே : நீருய ழிவதுபோல்.
சத்தியமா மார்க்கமதில் : சாடியே நாம்புகுந்தால்
இத்தரையில் நாமுமல்லோ : ஈனதசை யுற்றாசால்.

மெய்யாக மாண்டிடுவோ : மாகையினு லோதரிய
தெய்வமதை யுள்ளமதில் : தியானித்தா லாகாதோ ?

ஒப்போயி துவுமக்கு : ஒப்பில்லையோ சொல்லு" மென
"இப்போதே நானுமக்கு : எடுத்துரைப்பே" னென்றினிய.

பூங்கொடியாள் வாய்மலர்ந்து : பூமாரி பெய்வதுபோல்
தாங்குதடை யில்லாமல் : "தம்பியே" யென்றழைத்து.

"மானிடருக் கிவ்வுலகம் : மாறுச்ச தமெனிலோ
தேன்வண்டி றைவதுபோல் : தீர்க்கமாய்ச் சொல்லியது.

முழுஞாய மாயதுகள் : முடியுமா ஞலோகேள்
முழுதுமவ் வாறல்ல : மொழிகுவேன் சத்தியத்தை.

இம்மைம றுமையென : இரண்டுண்டு வாகையினல்
செம்மையா யாண்டவனை : சேவித்தொ ழுகுபவன்.

ஊழியுள்ள காலமெல்லாம் : உயர்ந்தபர லோகமெனும்
ஆழிதனில் மூழ்கினனுய் : அனவரதம் வாழ்ந்திடுவான்.

காரியமிவ் வாறிருக்க : காசினியி லுள்ளபலர்
ஆறுலக்ஷ ணக்கடவுள் : ஆணைதனை மீறினராய்.

திராப்பெ ருந்துயர்கள் : திரண்டுருவு கொண்டதுபோல்
பேராவ லென்றபொருள் : பேய்களதின் மாய்கையினல்.

அற்பப்பொரு ளானதையும் : அம்புவியும் பெண்களையும்
கற்பகமென் றெண்ணியெண்ணி : கலங்கித்தி ரிந்துலகில்.

மதயானை போனுழன்று : மாளும்பெரும் பாவியவன்
சதமான நிரகில் : சாகாமல் வெந்திடுவான்.

ஆதலால் பேரின்ப : அருள்மோக்ஷ வாழ்வினுக்காய்
பூதலத்தி னுபாச : பொருளையொ ருபொருட்டாய்.

எண்ணும லேயொழித்து : இகழ்ந்திடவே வேணு" மென
"அண்ணி ! நீர் சொல்வதுபோல் : ஆயிரம்நான் கேட்டிருந்
தும்.

நம்பவில்லை யென்னனிலோ : நானிலத்தில் மானிடர்கள்
ஜம்பமாய் வாழ்ந்தபின்னிச் : சாகரத்தி லேமரித்தால்.
சரீரப்ப தார்த்தமது : சலசலென வேபிரிந்து
பிருகிருதி யாம்பஞ்ச : பூதமதி லேகலந்து.
போய்விடுதென் றிவ்வுலகோர் : பூரணமா யோதுகையில்
நிரக மேதுவண்ணீ? : திருலோக மோக்ஷமெங்கே?
பட்டப்பகல் போலிகத்தில் : பார்ப்பதைநாம் விட்டகற்றி
இஷ்டம்போல் பித்தர்களும் : இயம்புவதை நம்புவதோ?
உன்னருமை போதகத்தால் : உடன்பிறந்த வண்ணனேநீர்
வின்னமுறத் தன்மறையை:விட்டொழிக்கச்செய்ததுபோல்.
என்னிடம்நீர் சொல்லுவது : எற்காதென் னண்ணியபோ [று.
இன்னமுநான் சொல்லுவதை : இப்பொழுதே கேளு” மென்
புகலரிய விஸ்தாரப் : பூதலத்தி லுள்ளபல
சகலவித சாஸ்திரத்தை : சாருய்ப்பி ழிந்தவன்போல்.
“மோக்ஷமும நிரகும் : முயல்கொம்பே யாகையினல் [ம்.
சாக்ஷியங்க ளுண்டெனில்நீர் : சாற்றுமண்ணி” யென்றவனு
சொல்லிடவே நாயகியாள் : சோதிவத னந்துலங்க
நல்லவென்ச கோதரனே! : நானிலத்து மானிடர்க்கு.
கண்ணிரெண்டே யானலும் : கற்றோர்க்கு மூன்றுவிழி
உண்டெனவே நீருணர்ந்து : உனதுசந் தேகமற.
செப்புவதைக் கேளுமிந்த : செகந்தனிலே மானிடர்கள்
தப்பாதி றந்தவுடன் : சாகாத வாத்துமந்தன்.
தன்மையையி ழக்காமல் : தானழிந்து போகாமல்
என்றென்று மாறுமல் : இருந்துலவு மாகையினல்.
அடர்ந்திடுமுன் சந்தேகம் : அகன்றுபரந் தோடிடவே
திடர்ந்துநான் சொல்வதைக்கேள் : தூயகுண மைத்துனபோ!
அண்டபர மண்டலங்கள் : அத்தனையு மோர்நொடியில்
உண்டமைத்த தேவபரன் : ஒருவரா னுலுமவர்.

மூன்றாட்க ளாய்ப்பிரிந்து : மூவிதசு பாவமின்றி
தானேக மாயிருக்கும் : சத்தியத்தி னற்புதத்தை.
மட்டில்லா நன்மைமிகும் : வடிவுடைய வானோர்கள்
மட்டுமறி வார்களல்லால் : மானிடரா லேலாது.
அறியாய லைசுவரும் : ஆழ்ந்தகட லாழமதை
நரிவாலி னாலளக்க : நம்மாலி யலுவதோ?
ஆனாலும் கேளுமிந்த : அகண்டவான் சூரியனில்
தானாக வேகிரணத் : தாருஷ்ண வெப்பமதும்.
இம்மூன்றும் சேர்ந்தொருங்கே : இரும்பதுவு மல்லாமல்
நம்மாத்து மத்தில்மனம் : நற்புத்தி ஞாபகமும்.
கட்டாயி ருப்பதுபோல் : காரணன்ம னோவாக்குக்
கெட்டாத வவ்விதமாய் : இருக்கிறா" ரென்றுமிக.
சாதுரிய மாவசனி : தமதிரித்வ சத்தியத்தை
மாதுரிய மாய்ச்சொன்ன : மாத்திரத்தில் வாலனிவன்.
"அண்ணியரே!" யென்றவளை : அருமையுடனேயழைத்து
எண்ணமுமே வேறாகி : எகிறிக்கு தித்தெழுந்து.
"சிந்தைபதைத் தாடுதண்ணீ : சின்னஞ்சி றியன்மனம்
தொந்திரவு மின்றியது : துடிதுடிக்குங் காரணத்தை.
அறியவென்னா லாகுதில்லை : அம்மம்ம! வென்னவிந்தை
பெரியதொரு சத்தியத்தைப் : போதிக்கு தாகையினால்.
விரிவாக நீயெனக்கு : விளம்பியவிப் போதகத்தால்
திரியேகன் மாகூஷிமையை : திடமாய்வி சுவசித்தேன்.
என்றாலு மின்னுமுள்ள : இதரசந் தேகமதை
இன்றுடனே னக்குரைத்து : இடராகற்று" மென்றவனே.
மன்றாட வுத்தமியாள் : வாசமிகுஞ் சத்தியத்தை
நன்றாகச் சொல்லுகிறாள் : நங்கையரே! கேட்டிடுங்கள்.
"பரமதி ரித்துவத்தின் : பகரிய சத்தியத்தை
திரமாய்வி சுவசித்த : சீருலவு மைத்துனரே!

அந்தக்கி ரித்துவந்தான் : ஆதித்தாய் தந்தையரை
மந்திரம்போ லோர்நொடியில் : மானிலத்தி லுண்டமைத்து.
சிங்கார மாயவனை : சீர்புகழுந் தோப்பினிலே
மங்களமாய் வைத்தவர்க்கு : மாதயவாய்ச் சொல்லிடுவார்.
'கண்ணான செல்வர்களே ! : கர்த்தனின்சொல் மீறுமல்
புண்ணியராய் வாழ்ந்துலகில் : புகழுடைவீ' றென்றுரைத்து.
கற்பனையா யங்கிருந்த : கனிமரத்தைக் காட்டி 'யிதின்
அற்பக்க னிகளைநீர் : அருந்தாதீர் அன்பர்களே.
அருந்தினுல் சாவீர்கள் : அழகான வக்கனியால்
பெருந்துயரம் நேருமெந்தன் : பேதமில்லாப் புத்திரரே.
ஆகவே தின்னுதீர் : அகிலமதி லுள்ளளவும்
சாகவே சாவீர்கள் : சாக்கிரதை யாயிருங்கள்.'
என்றமலன் சொல்லியதை : ஏற்காமல் தின்றதினுல்
அன்றுமுதல் மானிடர்க்கு : அழிநரகம் வாய்ந்ததையா.
நீள்புவிபி லேயுதித்த : நேர்மையில்லா மானிடர்கள்
பாழ்நரகில் வீழ்ந்தழிய : பார்க்கச்சகி யாமலிந்த.
பாவப்பழி மேற்சுமந்த : பாதகரை மீட்டிடவே
தேவதிரு வல்லபரன் : சித்தங்கொண் டாரதினுல்.
பிதாவினு ணைப்படியே : பாருலகில் வந்துதித்த
சுதனை தேவபரன் : சொற்கடங்கி நின்றவராய்.
முட்செடிக்குள் வீசிமலர் : முற்றிவளர் தன்மையதாய்
கட்புமதி யாலழிந்த : நம்மாதாம் கோத்திரத்தில்.
கற்பின்வி ருக்ஷமுமாய் : காசினியோர் தஞ்சமுமாய்
உற்பவித்த கற்றவத்தாள் : ஓதரிய வர்ச்சிஷ்ட.
மரியம்மா ளென்னுமொரு : மாசணுகா மங்கையிடம்
கருவாயு ருவெடுத்து : கன்னிமையே குன்றுமல்.
வெய்யோன்க திரொளிபோல் : விறைந்தகுளிர் காலமதில்
மெய்யாக வேயுதித்தார் : வெல்லைம லையருகில்.

சிறுகுழந்தை போலவந்து : ஜெனித்தவரோ யென்றுமுள்ள
திரித்துவத்தின் ரெண்டாமாள் : சேசுவெனும் தேவசுதன்-

பாலகனாய் வந்தவரும் : பாருலகின் மானிடனாய்ப்
போலவேதா னய்வளர்ந்து : பூதலத்தி லேயிருந்தார்.

கேட்டுவரு முத்தமனே ! : கேவலர்க்கா யப்பரமன்
மேட்டிமையொன் றில்லாமல் : மேதினியில் வாழ்ந்துவரும்-

அக்கால மானதிலே : ஆண்டவனார் மாதயவாய்
முக்கியமாய் மானிடரை : முகமலர வேயழைத்து.

'நன்மனங்கொள் மானிடரே ! : கர்த்தனருள் வேதமதை
நன்மனதாய்க் கேட்டொழுக : நாடியிங்கு வந்திடுங்கள்.

நாஞ்சொல்லும் போதகத்தை : நாகமணி கற்களென
வாஞ்சையுட னேற்றதனை : வைத்திடுங்க ளும்மனதில்.'

என்றவரோ வாய்மலர்ந்து : இரந்தழைத்து 'மானிடரே !
ஒன்றான தேவனுக்கே : உவந்தவராய்த் தானிருங்கள்.

ஆங்கார முள்ளடக்கி : ஐம்புலனைச் சுட்டெரித்து
நீங்காத்த வம்புறிந்து : நித்தியனைப் போற்றிடுங்கள்-

ஈனகுண சத்துருவின் : இழியடிமை விட்டகற்றி
ஞானவருள் தீக்ஷைதனை : நாடிநல முற்றிடுங்கள்.

பாரமதால் தத்தளித்து : பரதபிக்கும் மானிடரே !
ஆறுதலை நாமளிப்போம் : ஆகையினு லிக்கணமே.

கூறுமுங்கள் தேவனிடம் : கூசாம லோடிவந்து
பேர்பெறவிப் பூதலத்தில் : பிரபலராய் வாழ்ந்திடுங்கள்.

இவ்விதமாய் வாழ்வடைந்து : இறந்தபின்னே மோக்ஷ
[மெனும்
அவ்வுலகஞ் சேர்ந்ததனில் : அக்ஷயராய் வாழ்ந்திடுங்கள்.

அழுகண்ணர் பாக்கியர்கள் : ஆதரையி லல்லவந்த
பழுதில்லா வானுலகில் : பாக்கியங்கள் மெத்தவுண்டு.

ஐயோகே டுங்களுக்கு : ஐசுவரிய வாளர்களே !
மெய்யாகச் சொல்லுகிறோம் : மேலுலகி லொன்றுமில்லை.

ஊசியின்து வாரமதில் : ஒட்டகம்நு ழைந்தாலும்
நீசர்களே ! வானுலகில் : நீர்நுழைய மாட்டீர்கள்.

மனவிரக்க முள்ளவர்க்கு : மானிலத்தில் மட்டுமல்ல
கனமகிமை மெத்தவுண்டு : காணரிய வானுலகில்.

சுத்தமன முள்ளோர்கள் : சூழ்புவியில் பாக்கியர்கள்
பத்திமிகு முத்தமர்க்கு : பாக்கியங்கள் மெத்தவுண்டு.

தாங்கொணாப் பாரமதை : தலைதனிலே வைத்தழுத்தி
பாங்காக வாழ்ந்துவரும் : பாம்பினத்தின் சந்ததியே !

இத்தரையில் மட்டுமல்ல : இகபரமி ரண்டினிலும்
சத்தியமா யொன்றுமில்லை : சண்டாள ரேயுமக்கு.

ஆதலா லிவ்வுலக : அற்பசுக போகமதை
தீதறவே விட்டகற்றி : சீர்பெருக்க' ளென்றவரோ.

பலவாறு யோதிவந்தும் : பாதகர்கம் பாமல்வெகு
கலகப்பி ரியர்களாய் : கர்த்தனையே பார்த்துரைப்பார்.

'மோக்ஷம்ந ரகமெங்கே ? : மோனமிகு மத்தலத்தை
காக்ஷியுடன் கண்டதனில் : களித்தவர்க ளா' ரெனவே.

கருணாக ரக்கடவுள் : கர்த்தரவர் வாய்மலர்ந்து
தருணமே சொல்லிடுவார் : 'சண்டாள மானிடரோ !

புத்தியில்லா நீங்களுமென் : போதகம்நம் பாவிடினும்
அத்தாட்சி யாகவேநாம் : அருளும்பு துமைகளை.

திட்டமுடன் கண்ணோக்கி : தேறிடுங்க' ளென்றுசொல்லி
பட்டப்பகல் வேளையவர் : பார்த்திடவே யெண்ணரிய.

குருடர்செ விடர்பல : குஷ்டரோ யாளர்களை
திருமொழிக ளாலுரைத்து : தீண்டிக்கு ணப்படுத்தி.

செத்தோர்த மையெழுப்பி : சீருங்க ருங்கடலின்
மத்திபத்தி லேநடந்து : மாறியே கொந்தளித்து.

குமுறலிடி போலொலிக்கும் : கோரப்பு சல்களது
அமரவே யோர்கொடியில் : அடக்கிமிக வாவேசம்.
ஏறியபேய்க் கூட்டமதால் : இம்சையடைந் தோர்பலரை
தேறிமன மக்களிக்க : செய்ததன்றி யிவ்விதமே.
நூறுநூ றுனபல : நுதனமா வற்புதங்கள்
ஆறுலக்ஷ ணக்கடவுள் : ஆதரையோர் முன்னிலையில்.
செய்துவரக் கண்டபல : சீலகுண மானிடர்கள்
தெய்வமிவர் தாமெனவே : சிந்தைகளி கூர்ந்தவராய்.
ஆசையுட னன்னவர்கள் : அருள்ஞான தீக்ஷைபெற
பாசகுண நேசமுடன் : பாய்ந்தணுகி வந்தார்கள்.
பரிவாக வேயிதனைப் : பார்த்திருந்த வக்கால
வரிவேதா சாரியரும் : வன்மகொடுங் கோலர்களும்.
ஊரினதி காரிகளும் : ஒன்றாய்த்தி ரண்டிருண்டு
மாறுப்பொ றுமையுடன் : மந்தைமந்தை யாயவர்கள்.
காசினியி லாண்டவரை : கண்டித்துச் சாகடிக்க
தாசிகள்போல் கைகளிலே : தரித்தார்கள் கங்கணத்தை.
கொஞ்சமெனும் நெஞ்சிரக்கம் : கொள்ளாக்கொ டுந்துரோ [க
பஞ்சமாப் பாவிகளப் : பாதகரும் யூதர்களும்.
இஷ்டம்போ லேயவர்கள் : இன்னுமந்த பட்டணத்து
துஷ்டகுண துற்சனரை : தோதாகச் சேர்த்தழைத்து.
திரிதினங்க ளொன்றுமுண்ண : சிங்கம்புலி போலவர்கள்
சரமாரி யாய்த்திரண்டு : சர்வேச னைப்பிடித்து.
மானமவ மானமின்றி : மாசில்லா தற்பரனை
கோனுன்பி லாததுவின்முன் : கொண்டுசென்று தானிருத்த.
சருவாதி காரணரும் : தம்மரணம் மானிடர்க்கு
உறுதியென மாபொறுமை : உற்றிருந்தா ரவ்விடத்தில்.
பார்த்திபனு மாண்டவரை : பாதகரின் கையளிக்க
சேர்த்திருக்கிக் கட்டியவர் : சேனைகள்போ லேதிரண்டு.

கஸ்திமிக வாகுதப்பா ! : கர்த்தர ணிந்ததிரு
வஸ்திரத்தைத் தாமுறிந்து : வார்களினு லேயடிக்க.
சீராய்த்தி ருவுதிரம் : சிதைந்துவிழ பூமியிலே
ஆருய்த்தி ரண்டோட : அடித்தேம முக்கியபின்.
வருவாரும் போவாரும் : வாயினுமிழ் நீர்களினல்
திருமுகத்தில் துப்பபலர் : தூஷணிக்க வேறுசிலர்.
அன்னைமுகத் தோடணைத்து : ஆழ்ந்துமுத்த மிட்டதிரு
கன்னமதி லோங்கியிரு : கண்கலங்க வேயறைந்து.
நீசரந்த பாதகர்கள் : நிஷ்டூர வாதைசெய்தும்
ஆசையடங் காததினல் : அங்கவர்கள் பின்னியவோர்.
முண்முடியைப் பொற்சிரசில் : மூர்க்கமாய் வைத்தழுத்த
கண்கள்வழி யாயுதிரம் : கால்வாய்கள் போலொழுக.
வலுவான வோர்பெரிய : மரத்தினல் செய்தகன
சிலுவைதனை தோள்சுமத்தி : சிறந்தநகர்க் கப்புறமாய்.
விறைந்தேகத் தள்ளாடி : வீழ்ந்தசுதன் தன்னைப்போ
அறைந்தார்மூன் ருணிகளால் : ஆத்திரமா யப்பொழுதே.
நேசகுண மைத்துனரே ! : நேர்மையில்லா மானிடர்க்காய்
மாசணுகா தேவசுதன் : மரணித்த வேளையிலே.
நடந்தபல காக்ஷிகளை : நானுரைப்ப தெங்ஙனமோ
மடந்தையிள மாதர்முதல் : மற்றுமுள்ள ஜெந்துகளும்.
தகுந்தவித காரணத்தை : தாமறியா தேங்கிடவே
மிகுந்ததிகில் கொண்டதுகள் : மெய்சோர்ந்து நின்றிடவும்.
சாமிபிறந் தாரெனவே : தார்தலமெல் லாமழுக
பூமியுந்தன் வாய்பிளக்க : புண்ணியரு யிர்த்திடவும்.
மலைபோன்ற கோபுரங்கள் : மாளிகைக ளானதெல்லாம்
நிலைகுலைந்து வீழ்ந்துமிக : நிர்தூளி யாகிடவும்.
சூரியனி ருண்டுருண்டு : சுசிகரமாய்த் தான்மறைய
காரிருளின் மேகமெங்கும் : கவிழ்ந்திடவே காட்டிநுள்ள.

சிங்கம்பு லிகரடி : சிறுத்தைகளும் நாடுகளில்
எங்குமிதி ரிந்துலவ : ஏதமில்லா மீன்கணங்கள்.
நிலைதவறி யேநழுவி : நீணிலத்தில் பூக்களைப்போல்
பலபலென வேயுதிர : பால்மதியும் வானமதில்.
மாறிடவு மத்தினத்தின் : மாகூஷியையும் காகூஷியையும்
கூறிடவு மேலாமென் : கொழுந்தனரே !" யென்றுரைத்து.
"மற்றதையும் கேளுமெந்தன் : மைத்துனரே !" யென்றுமவ
பற்றறவே சொல்லுகிருள் : "பார்த்தீரோ யிவ்விஷயம். [னப்
நடந்தமூன் றுந்தினமே : நம்கடவு ளென்றுமவர்
அடைந்தசுய வல்லமையால் : அக்ஷயராய்த் தாமுயிர்த்து.
சேயாகப் பூவுலகில் : சிந்தைமகிழ் வோடுபெற்ற
தாயார்க்கும் மற்றவர்க்கும் : தன்பிரிய சீஷருக்கும்.
காண்பித்து நாற்பதுநாள் : காசினியி லேயிருந்து
ஆண்பெண்ண டங்கலுமோர் : ஐநூற்றுச் சில்வான.
நேத்திரங்கள் கண்ணெதிரே : நிமலசரு வேசனவர்
ஆத்துமச ரீரமொடு : ஆகாய மார்க்கமதாய்.
மண்டலத்தோர்க் காசீனா : மனமகிழ்வாய்த் தந்துபர
மண்டலத்திற் கேகியபின் : மாதவவப் போஸ்தலர்கள்.
உலகெங்கு மேபாவி : ஓதரிய வேதமதை
பலபலவஞ் ஞானிகட்கும் : பாராளும் மன்னவர்க்கும்.
அஞ்சாமல் சத்தியத்தை : ஆங்காங்க வர்க்குரைத்து
கொஞ்சமுமே பேதமில்லா : கோடிப்பு துமைசெய்து.
ஆண்டவர்க்காய் தம்முடைய : அரியவுயி ராக்கொடுத்து
மாண்டவர்க ளின்றுகையை : மாநிலத்தில் யாரறிவார் ?
சாகூஷியங்க ளுண்டானல் : சாற்றுமண்ணீ யென்றுரைத்த
தாகூஷியுள்ள வென்னினிய : தர்மகுண மைத்துனரே !
மோக்ஷமும ழிநாகு : முண்டெனவே முக்கியநல்
சாகூஷிகளாய் நின்றவர்கள் : தாமிவர்தான் மைத்துனரே !"

என்றுவிசு வாசமுள்ள : இன்பரச மந்திரத்தை
நன்றியுள்ள நாயகியாள் : நண்பனுக்குச் சொல்லிடவே.
சிறுகுழந்தை போலவனும் : தேம்பியே தானழுது
பெருமூச்செ றிந்தவனாய் : பேசுகிறா னண்ணியிடம்.
"காரிருளின் மேகம்போல் : கவிழ்ந்தேயென் புத்திதனை
சிறியடர்ந் தேயிருந்த : தீமருள்கள் மாறிடவே.
சூரியனு தித்ததுபோல் : சுத்தமாய் நீரொடுத்து
கூறியநற் போதகத்தால் : குணமடைந்தே னண்ணியரே !
நன்மரத்தில் புல்லுருவி : நாடிப்ப டர்வதுபோல்
என்மனதில் வேரூன்றி : இந்தமரு ளத்தனையும்.
முற்றுங்க ளைந்தகற்றி : மோக்ஷவழி காட்டியதால்
பெற்றவள்நீ ரல்லாமல் : பின்னெவரு மில்லையம்மா.
அண்ணியரே !" யென்றழைத்து : அவள்பாதம் தெண்டனிட்டு [ட்டு
கண்ணீரு திர்த்தெழுந்து : கண்ணனை தன்னினிய.
தமயன்வ ளேரியனை : தானழைத்து "அண்ணாவே !
கமனவி ரத்தனெனக் : ரகினியி லேயிருக்கும்.
உத்தமமேற் றிராணியெனும் : ஊர்பான்மு னிவரிடம்
இத்தருணம் போய்வரலாம் : எழுந்திடுங்க ளண்ணாவே !"
என்றவனு மாத்திரமாய் : எழுந்திடவே கன்னிகையும்
சென்றுள வர்களுடன் : தீவிரமாய் வாசல்மட்டும்.
அப்போதி ருவருமாய் : அத்தெருவைத் தாம்கடந்து [து.
செப்பிடவே கண்ணிமைபோல் : சேர்ந்திருவர் கைகோர்த்
ஆண்டவனைக் காணவெகு : ஆவலா யோர்நொடியில்
நீண்டசுரங் கவழியாய் : நேராகச் செல்லவங்கே.
தாக்ஷியே மன்னுருவாய் : தாலமிசை வந்ததுபோல்
மாக்ஷியுடன் வீற்றிருக்கும் : மாமுனியைக் கண்டவர்கள்.
இருவர்மன முங்குளிர : இன்பகுண வாண்டவரின்
திருவடிக ளைப்பணிய : தீவிரமா யாண்டவரும்.

உள்ளமகிழ் கொண்டவராய் : உன்னதவா சிரளித்து
கள்ளமில்லா வாலன்மனம் : கரைந்துருக வேதமதை.

ஓதியபின் மாமுனிவர் : ஓதரிய தீக்ஷைதனை
காதலுட னேகொடுத்து : 'கதிரவன்போல் வாழ்ந்திடப்பா.

ஆதலையி லுள்ளளவும் : அயலாரை யுந்தனைப்போல்
பேதமின்றி யாதரித்து : பேர்பெறவே வாழ்ந்தி' டென்று.

நேசமிகு மாண்டவர்தம் : நேர்மைமிகும் பொற்கரத்தால்
ஆசீர்வா தங்கொடுத்து : அங்கவரைத் தாமனுப்ப.

மோக்ஷமதி லேயிலகும் : மூவுலக தேவனைத்தம்
காக்ஷியிலே கண்டவர்போல் : காந்திமுகங் கொண்டவராய்.

ஒருவருட னேயொருவர் : உத்தமராய் தெய்வமறை
திருவுளத்தை நம்பினராய் : திரும்பினர் மாளிகைக்கு.

---

## 17-வது அத்தியாயம்.

### ராஜ கட்டளை.

மூவாசை வாரிதனில் : மூழ்கியெழு மானிடரோ !
பூவாலே நாரதுவும் : புகழ்மணமே கொள்வதுபோல்.

அற்பமதி யாலுலகில் : அஞ்ஞான ராய்ப்பிறந்தும்
கற்பின்ன ணிகலமாம் : கன்னிகைசெ சிஷியரின்.

இத்தவநற் சீரதினல் : இணைபிரியா தவ்விருவர்
உத்தமகி றீஸ்துவராய் : ஓங்கிவரும் நாளையிலே.

சஞ்சலத்தை வேரறுத்து : சான்றோராய் மேதினியில்
பஞ்சேந்தி ரியமதை : பற்றறவே தாமொறுத்து.

சுக்கிலமா பக்ஷமதின் : சூழ்மதிபோ லவ்விருவர்
தக்ககுண சீலர்களாய் : தாரணியில் வாழ்ந்துவந்தார்.

துக்கமிக வாகுதம்மா : தூயகுணத் தங்கையரே !
மிக்கமன வாட்டமுடன் : விளம்புவது மென்னவெனில்.
சீர்பெருகும் ரோம்நகரை : சீர்குலைத்து வாண்டுவந்த
மார்க்கோரே லென்னுமந்த : மாகொடிய வேந்தனவன்.
கத்தபமும் தன்குரலைக் : காம்போதி ராகமென
கத்தித்தி ரிவதுபோல் : காசினியின் பேயனிவன்.
தற்புகழாய்த் தான்பயின்ற : சாஸ்திரக்க லைகளினல்
தற்பெருமை கொண்டவனும் : தானென்னு மாணவத்தால்.
அஞ்ஞான ராயனவன் : அலகைகளின் போதனையால்
மெஞ்ஞானி யென்றவனை : மேதினியோர் தாமறிய.
சகஜமாய் மீனினங்கள் : ஜலந்தனிலே நீந்துதல்போல்
துவஜங்க ளாயவனும் : துர்க்குணத்தி லேயியல்பாய்.
ஆண்டாண்டு தோறுமவன் : அக்கிரம வித்தையில்தன்
பாண்டித்தி யத்தைவெகு : பரபரப்பாய்க் காட்டிவந்தான்.
இவ்விதமா யந்நகரை : ஈட்டியவ னுளுநகையில்
செவ்வையாய்க் கேட்டிடுங்கள் : செய்தபெருஞ் சூழ்ச்சிதனை.
எவ்விதமென் றுலவன்பேய் : ஏவலுக்குட் பட்டவனாய்
திவ்யபரா னேதுனித்த : தீங்கணுகா மாமறையை.
வேரோடே பேர்த்தழித்து : விட்டுவிட வேணுமென
மாரோடே பேசியவன் : மானிலமீ துள்ளபல.
ஊர்நாட்ட திபதிக்கும் : உள்ளமற்ற ராயருக்கும்
நேர்நேராய்த் தந்தவொரு : நிருபமது யென்னவெனில்.
‘ என்பிரிய சிற்றரசாம் : எந்தலைகளே ! வுங்களுக்கு
நன்மைமிக வுண்டாக ! : நானுரைப்ப தென்னவெனில்.
பேடிகள்போ லேயொளியும் : பேதைக்கிறீஸ் துவரை
தேடியலைந் தேபிடிக்கத் : தேவையில்லை யென்றாலும்.
சத்தியகிறீஸ் துமறை : சார்ந்தவரு னென்றமுழு
சுத்தமன வாக்குடனே : சொன்னலு மம்மறையை.

விட்டொழித்தோமென் றுவெகு : விளக்கமாய்ச் சொல்வோ
திட்டமாய் விட்டுவிட்டு : தீதான வம்மறையை. [ளை
மறுக்கோமென் றுங்களுடன் : மாகுதர்க்கஞ் செய்யுமெந்த
திருக்கான பேர்களையும் : சிரச்சேதம் செய்திடலாம்'
என்றுகொடுங் கட்டளையை : ஈவிரக்க மின்றியவன்
பன்றியைப்போ லேயுறுமி : பாரோர்க ளிக்கிடவே.
பூதலத்தி லுள்ளகுணப் : புண்ணியகி றீஸ்துவர்கள்
சேதிதனைக் கேட்டுடலம் : சிலிர்சிலிர்த்தா ரன்னையரே.
ஓதிடவென் னங்கமெல்லாம் : உருகுதம்மா தங்கையரே!
கோதணுகா தற்பரனார் : குணமுடனே யுண்டமைத்த.
மண்டலத்தை யாண்டுவந்த : மார்க்கொரோல் ராயனுக்கு
தண்டரசு நாயகனாய் : தகைமைமிகும் ரோம்நகரில்.
அல்மாக்கி யூலெனனும் : அழகான பேர்வகித்த
பொல்லாக்கொ டுங்கோலன் ; பொதுநீதி கர்த்தனென.
மோகமுடன் லோபமது : மோதியுரு கொண்டதுபோல்
தேகவுரு வுண்டவொரு : தீநரகப் பேயின்மகன்.
நீதிகள்செ லுத்திவர : நேசர்களும் பட்டதுயர்
ஓதிடவு மேலுவதோ? : ஊக்கமுடன் கேட்டுவரும்.
சங்கைமிகும் தங்கையரே! : சாற்றிடுவே னுங்கள்மனம்
பொங்கிடவன் னேன்குணத்தை : போங்காக வுங்களுக்கு.
சற்றிரக்க மில்லாத : சண்டாளப் பாவிமகன்
கற்றவித்தை கேட்டாலும் ; காதும்க சக்குமம்மா.
அரும்பாலர் மக்களையும் : அவருடனாண் பெண்களையும்
கரும்பெனவே யாட்டியவன் : கசக்கிப்பி ழிந்திடுவான்.
நீதியில்லா சண்டாளன் : நினைத்தபடி யேபணம்சம்
பாதிப்ப தேகருத்தாய் : பாழ்மனது கொண்டமட்டும்.
வஞ்சகமாய் லஞ்சமதை : வாங்கிவழக் கைத்தொடுக்கும்
அஞ்சாக்கொ டுங்கோல : ஆவேசப் பேயனவன்.

செய்வதுவும் கர்மமென்று : செப்பிடிலோ சீர்குலைய [ன்.
மெய்பாய்ச்சி ரித்தவனும் : மேட்டிமையாய்ச் சொல்லிடுவா
'புத்தியில்லா மானிடரோ ! : பூக்கள்விற்ற காசுகளில்
சத்தியமாய்ச் சொல்லிடுங்கள் : சார்மணங்கள் வீசிடுமோ ?
அல்லதுபு லால்விற்ற : அப்பணத்தி லேனுமுங்கள்
சொல்லைதுபோ லேநாற்றம் : சூழ்ந்துக விழ்ந்திடுமோ ?'
என்றுபல வாறுக : வீனங்கள் பேசுமிவன்
சென்றேகும் பாதைகளில் : சீர்குலைந்த பாவியிவன்.
துறவரங்கொள் மாமுனிபோல் : சூதனவன் தானடித்து
சிறுபுழுக்கள் பூச்சியையும் : சிதைவுறத்தன் கால்களினால்
மிதிக்கமன மொவ்வாத : மேதவன்போல் காட்டிவரும்
சதிகாரப் பேயனிவன் : தாகமுடன் தண்ணீரை.
குடிப்பதுவும் மானிடர்கள் : குரல்வளையைக் குத்தியவர்
துடிக்கம டிப்பதுவும் : துற்குண னுக் கொன்றேதான்.
புசித்துக்கு டிப்பதிலும் : புண்ணியம்வே றில்லையென்று
கசுமலத்தைத் தேடிவரும் : கழுகதுபோ லேயிவனும்.
சட்டமுடன் கட்டியதன் : தையலைக்கை விட்டுவிட்டு
வெட்கமற்ற மாதர்களாம் : வேசியரை யாசையுடன்.
நாடித்தி ரிவதிலே : நாட்டமுற்று நாய்களைப்போல்
தேடியலைந் தோடிடுவான் : தெருத்தெருவாய் நாள்முழுதும்.
பழுதையுரு கொண்டபெரும் : பாம்புவிஷம் பல்லிலெனில்
கழுதையிவ னங்கமெல்லாம் : கரும்விஷந்தான் தங்கையரே.
பொடித்துமனம் பேதலித்துப் : போகாம லெல்லோரும்
அடுத்துவந்து கேட்டிடுங்கள் : ஐயோவென் நேசர்களே !
மாற்கொரோல் ராயனிட்ட : மாகொடிய கட்டளையை
கூற்றரசன் கண்டுமனம் : குதூகலித்துச் சொல்லிடுவான்.
'வேடிக்கை போல்நமது : வேந்தன்கி றீஸ்துவனை
தேடிப்பி டிக்கவொண்ணு : தென்றனாக்கு மிவ்விஷயம்.

நேர்த்திவெகு நேர்த்தியடா : நீசனைத்தே டாவிடில்மும்
மூர்த்திகள்போ லேபதுங்கி : மூலையிலு றங்கிடுவார்.
ஆகையினால் காரியங்கள் : ஆய்விடுமோ ஆஹாவி
வேகமில்லா வேந்தனவன் : விதித்தமுறை தானிதுவோ ?
வாட்டமாய்த் தெண்டனிட்டு : வருந்தியழைத் திட்டாலும்
தோட்டநரி கூட்டமதில் : துணிதலாய் வந்திடுமோ ?'
என்றவனு டல்நடுங்க : எகிறிக்கு தித்தெழுந்து
நின்றபடி சொல்லிடுவான் : 'நீதியர சன்மனதில்.
கொண்டிருக்கும் வஞ்சகத்தைக் : கூட்டிலில டைப்பதற்கே
உண்டமைத்த மேலான : உயர்ந்தபெரும் தந்திரத்தை.
போலவே நானுமந்த : புத்தியில்லாப் பேதையர்க்கு
கால்விலங்கு மாட்டிகன : கசைப்பிரம்பு சாட்டைகளால்.
காகமொன வேயுதிரம் : கசிந்தொழுக வாட்டியவர்
திரவியத்தைக் கூட்டிவெகு : சிறப்பாக வாழ்ந்திடுவேன்.'
என்றுமனம் தேறினனாய் : ஏகசுதன் நேயர்களை
கொன்றிடுவே னென்றுமிக : கொக்கரித்துக் கூவியவன்.
சொன்னதுபோ லன்றுமுதல் : சுத்தகுண வுத்தமரின்
வின்னமில்லா கால்களிலே : விலங்குகளை மாட்டியம்மா.
சந்துசந்தா யோட்டிமணிச் : சாட்டைகசை யாலடித்து
மந்தைமந்தை யாய்த்திரட்டி : மாடாடு போல்விரட்ட.
சுந்திரர்கள் மெய்வாடி : சோர்ந்தயர்ந்து தள்ளாடி
பந்துகள்போ லேயுருண்டு : பாக்கியர்கள் போனவுடன்.
உலைவாயை மூடுதல்போல் : உயர்ந்தசிறைச் சாலையதின்
தலைவாயுள் விட்டடைத்து : தக்ஷணமே சொல்லிடுவான்.
'நிலையான வென்னுடைய : நேசமிகும் சேவகரோ
கொலையாள வீரர்களே : கூசாம லுங்கள்மனம்.
கொண்டமட்டு மிங்கிருக்கும் : கொடுங்கோல னவனைத்து
கண்டதுண்டமாய்ச்சிதைத்து : கட்டிடுங்கள் தோரணமாய்'

என்றுபல கட்டளையை : ஏற்றியபின் நில்லாமல்
சென்றிடுவான் தங்கையரே : சிங்கம்போ லேகதறி.
பாதகர்கள் வீதியெல்லாம் : பார்த்தலைந்து தேடியபின்
சூதாயி ரவிலுமே : துகைதுகையாய்த் தான்பிடித்து.
செய்யாத துன்பமெல்லாம் : செய்தவரைச் சீர்குலைத்து
வெய்யோனு திக்குமுன்னே : விட்டடைப்பார் காவலிலே.
ஆவியுந்தான் போமளவும் : அன்பருற்ற பாடுகளை
பாவியுநா னெவ்விதமாய் : பகர்ந்திடுவே னன்னையரே!
நெஞ்சிரக்க மில்லாத : நிஷ்டூரப் பேயனவன்
அஞ்சுமணி யாகுமந்த : அதிகாலை வேளையிலே.
அபராம லெத்தினமும் : ஆவலுட னோடிவந்து
துயரால்வ ருந்திமனம் : துடித்துப்ப தைத்திடுவோர்.
எத்தனைபே ரென்றறிந்து : எண்ணியபின் னேயெழுதி
வித்தகமா யாக்கினைகள் : விதித்திடுவா னப்பொழுதே.
கைகாலில் பட்டசிறு : காயமதைத் தாளாமல்
மெய்யாக வேயழுகும் : மிதமில்லா மங்கையரே!
அனியாயப் பாவியிட்ட : ஆக்கினையைக் கேட்டால்நீர்
தனியாக வோலமிட்டுத் : தானழுவீ ராகையினால்.
உத்தமர்கள் பட்டபல : ஓதரிய வாதைகளை
பத்தியுடன் கேட்டுடனே : பதித்திட்டா லும்மனதில்.
நித்தியமாய் வானுலகில் : நீங்கள்தழைத் தோங்கிடவே
சத்தியமாய் வேண்டிடுவார் : சந்ததமு முங்களுக்காய்.
ஆகவே கேட்டிடுங்கள் : அன்பர்களே! வுங்களைப்போல்
வாகுடனே தம்மனையில் : வாழ்ந்திருந்த புண்ணியரை.
கும்பல் கும்ப லாய்ப்பிடித்து : கொடுங்கோலர் பாதைகளில்
பம்பரமா யாட்டியவர் : பலகொடுமை செய்ததினால்.
தள்ளாடிச் சோர்வடைந்து : தரையில்வி ழுந்தபடி
துள்ளித்து டித்திடவே : தூதர்களும் விட்டுவிட்டு.

போய்விடுவா ராகையினல் : பொழுதுவி டியுமட்டும்
ஓயாமல் கூவியங்கே : உயிரிழந்த வுத்தமர்கள்.
எத்தனைபே சொன்றுரைக்க : இலக்கமே யில்லையம்மா
உத்தமரே ! கேட்டிடுங்கள் : உள்ளமற்றோர் சங்கதியை.
கூளியுரு கொண்டவந்த : கூற்றரசன் தன்னுடைய
மாளிகையை விட்டகன்று : மாவிரைவாய் வந்தவுடன்.
'கொலையாளரோ ! சிறையில் : கூடியுள்ள மாதர்களை
கலையாம லேவெளியில் : கட்டாய்நி றுத்திடுங்கள்.'
என்றுரைத்த மாத்திரத்தில் : என்பிரிய நேயர்களே !
ஒன்றுபத்தி ருபதல்ல : உத்தமர்நா ருயிரமாய்.
அங்கம்ப தைபதைத்து : ஆண்டவரோ யென்றலறி
சங்கோசை நாதமெழ : சகலருமே தானழுது.
முற்றத்தில் வந்துடனே : முன்னின்ற மாத்திரத்தில்
சுற்றுமுற்றும் பார்த்திடவே : சூழ்ந்தடர்ந்த கும்பல்களில்.
மெய்நோகப் பெற்றெடுத்த : மேன்மக்க ளோர்புறமும்
கைகால்வி லங்குடனே : காணரிய தந்தையரும்.
அண்ணனொரு கும்பலிலும் : ஆசைமிகும் தம்பியரும்
புண்ணியஞ்சே ரண்ணியரும் : பூவாகும் பாலர்களும்.
தாய்மார்க ளோர்புறமும் : தங்கையர்ம றுபுறமும்
வாயார முத்தமிட்டு : வளர்த்தமக்க ளிங்குமங்கும்.
செம்மறியின் குட்டிகள்போல் : சிதறியுரு வேறாகி
தம்மினிய நேயரெல்லாம் : தனித்தழுது நிற்குமிந்த.
காக்ஷிதனைக் காணவரும் : கசடர்களின் கும்பலிலே
சூக்ஷியா யங்கவரின் : சுற்றத்தார் நின்றழுக.
ஐயோவென் னன்னையரோ ! : அக்ஷயா மூதகுரல்
மெய்யாக வானுலக : மெட்டியொலித் திட்டதெனில்.
புண்ணியர டைந்தமனப் : போராட்ட வேதனையை
மண்ணிலெவர் தானறிவார் : மாசிறுவன் நானுரைக்க.

மஞ்சாகும் மூடுபனி : மலர்மாரி போல்சொரிந்து
பஞ்சுகள்போ லேசிதறி : படர்ந்திடுமக் காலையிலே.
அங்கங்கு ளிர்நடுங்க : ஆதுலர்போல் புண்ணியர்கள்
பங்குபங்காய் நின்றுருகி : பரதபிக்கும் வேளையிலே.
ஆவேசங் கொண்டவனு : அலகைபோ லவ்வரசன்
மூவாசை கொண்டமுழு : மூடனவன் சொல்லிடுவான்.
"மல்லகமா வீரர்களே ! : மாதரிவர் மக்களையும்
பல்லைப்பி டுங்கிடுங்கள் : பருந்தாட்ட மாட்டிடுங்கள்.
என்னெதிரோ மாரடித்து : இறைந்தழுகு மின்னவளின்
வின்னமுறும் கையிரண்டை : வீரர்களே வெட்டிடுங்கள்.
வில்லுகளா லெய்திவளை : வீழ்த்தியபின் னேயவளை
கல்லுகளா லேயெறிந்து : கணகோரம் செய்திடுங்கள்.
இங்குள்ள பாதகியை : இவ்விருவ ரோடிணைத்து
அங்கந்தெ றித்துவிழ : அடித்திடுங்கள் சாட்டையினால்.
வீரியங்கள் பேசுமிந்த : வீணைப்பெ ருங்குறடால்
கீறியவர் நாவுகளை : கிழித்துப்பி டுங்கிடுங்கள்.
சேசுவே யென்றழுகும் : சிறுவர்களை யொன்றாக
கூசாமல் வெட்டிடுங்கள் : குணவீர சூரர்களே.
கற்றவித்தை யத்தனையும் : காட்டினால் நான்மகிழ்ந்து
உற்றபரி சையளிப்பேன் : உங்கள்மனம் கோணாமல்.
கொலையாள வீரரெனக் : கொண்டபேர் தான்நிலைக்க
சலியாம லாக்கினைகள் : தந்திடுங்க" ளென்றுசொல்லி.
போனவுட னம்மையரோ ! : புற்றீசல் போல்பறந்து
ஈனகொலை பாதகர்கள் : எங்கிருந்து வந்தனரோ.
நானறியேன் தங்கையரே ! : நாற்றிசையு மேபரவி [தில்.
சேனைகள்போ லோர்நொடியில் : சேர்ந்திட்டா ரவ்விடத்
திட்டமுடன் சொல்லவெனில் : தினகரனு தித்துசுமார்
எட்டுமணி யாகுமந்த : இளங்காலை வேளையிலே.

அப்போது வந்தவர்கள் : ஆயிரமி ருக்குமம்மா
தப்பாம லொவ்வொருவர் : தங்கள்க ரங்களிலே.
வார்பிரம்பு சாட்டைகளும் : வாட்டமுள்ள வீட்டிகளும்
காரிரும்பி ணைகளும் : காந்தக்கு றடுகளும்.
சாட்டைச்ச வுக்குகளும் : சங்கிலிமுட் சக்கரமும்
தீட்டியவேல் பட்டயமும் : தேர்போன்ற வேணிகளும்.
அம்புகள்வில் லானபல : ஆயுதங்க ளேச்சுமந்து
செம்மேகம் போலவர்கள் : சேர்ந்துக விழ்ந்திடவே.
கூவியழும் புண்ணியர்கள் : குப்பெனவே வாய்பொதிந்து
ஆவிபிரிந் திட்டவர்போல் : அங்கங்கே சோர்ந்துவிழ.
ஆயனில்லா மந்தையினுள் : அடர்ந்தவன வோனுய்கள்
பாய்வதுபோ லக்கொடிய : பாதகர்க ளோர்திரளாய்.
கண்களிலே தீப்பறக்க : கார்மேகம் போல்திரண்டு
புண்ணியரின் கூட்டமதில் : புகுந்தவர்க ளைப்பிடித்து.
கட்டிப்பி ணைத்திறுக்கி : கனகோர மாயவனை
எட்டியுதைத் தார்களம்மா : எலும்புகளெல் லாமுறிய.
நாதனே யெம்மேசு : நாதனே யென்றழுதப்
பாதகர்ப தம்பணிந்தும் : பாவிகளி ரக்கமின்றி.
சிங்கமத யானைகள்போல் : சீறியவர் மேல்விழுந்து
பொங்கியெழு மூர்க்கமுடன் : பூவையரின் கூந்தல்களை.
குலையப்பி டித்திழுத்து : கோபமுட னேபலமாய்
தலைதனிலே யோங்கிநெடுங் : தடியால டித்திடவே.
மூளைகண்கள் மேற்சிதறி : முத்துமுகம் வேறுகி
காளைகள்போ லேயவர்கள் : கதறியுரு வங்குலைந்து.
புண்ணியஞ்சே ருத்தமிகள்:போய்வருவோ மென்றுசொல்லி
விண்ணுலகை நோக்கினராய் : விட்டார்கள் தம்முயிரை.
நெஞ்சம்ப தைக்குதம்மா : நேசர்களே ! யிவ்விதமாய்
கொஞ்சமல்ல மாண்டவர்கள் : குறித்துக்க ணக்கெடுக்க.

மாடப்புறு வெண்மையுள்ள : மாசிலரி னுத்தமங்கள்
ஓடிப்ப றந்திடவே : ஊளையிடும் பேய்களந்த
சண்டாள ரவ்வுடலை : சல்லிசல்லி யாய்நறுக்கி [ல்
பண்டிகையின் தோரணம்போல் : பறக்கவிட்டார் வீதிகளி

---

## 18-வது அத்தியாயம்.

### கொலைக்களம்.

சேல்விழிகொள் தங்கையரே ! : தேகம்ந சிந்துருகி
ஆல்விழுது போலசற்றும் : அசையாதி ருந்தகுண.
சீலர்கள்மு டிவையும்நான் : செப்பிடுவே னுகையினல்
வேலைபல வுண்டெனவே : விரைந்தெழுந்து போகாதீர்.
எந்தவித வாக்கினைகள் : ஏற்குமோ வென்றலறி
உந்திகு முறிமனம் : ஊசாடி நிற்கையிலே.
ஆங்கார வன்மகுண : ஆண்களுமொன் றாய்த்திரண்டு
ஓங்குபுலி போல்விழுந்து : உத்தமர்கள் மேற்பாய்ந்து.
பற்றிப்பிடித் தாட்டியந்த : பாங்கியர்கள் நின்றிருக்க
முற்றத்தை விட்டகற்றி : மேடுபள்ளம் பாராமல்.
பலமனிதர் கூட்டமதாய் : படர்ந்தேகும் பாதைகளில்
நலமுடைய சுந்திரனை : நட்பின்றி யோடத்த.
ஐயையோ நேசர்களே ! : அன்னவரின் மேனியெல்லாம்
நைந்துசதை பிய்ந்துவிழ : நல்லிரத்த மோடுவதை.
கண்டமனு மக்கள்பலர் : கண்ணீருந் தானுதிர்த்து
வெண்டாமரை முகங்கள் : வேறுபடத் தாமழுது.
பந்திபந்தி யாயடர்ந்து : பார்க்கவரும் கும்பலிலே
சந்திரவித் தாரமுகத் : தங்கையரி ருவர்கண்டு.

அஞ்சாம லவ்விருவர் : அங்கவரைத் தாமணுகி
கொஞ்சுமொழி சுந்தரிகள் : கூசாமல் பார்க்கையிலே.
உருமாறி செல்லுமொரு : உத்தமியைக் கண்டுருகி
அறியாம லவ்விருவர் : ஆத்திரமாய்ப் பேசுகையில்.
துக்கமுடன் செல்லுமவள் : தூதருக்கு மஞ்சாமல்
மிக்கதுய ரோடழுது : விளம்புவதைக் கேட்டிடுங்கள்.
"மக்களே! பாரிலும்மை : மனமகிழப் பெற்றெடுத்து
அக்களிப்பாய் முத்தமிட்டு : அமுதூட்டி யேவளர்த்த.
அன்னையர்தா னம்மாநான் : அடைந்ததுயர் கண்டீரோ
இன்னுமென்ன வாக்கினைகள் : இடுவாரோ நானறியேன்.
தந்தையவ ரில்லாத : தருணமதில் பாவிகளோர்
மந்தையா யுள்நுழைந்து : மடைக்கிப்பி டித்தார்கள்.
எந்தனைக்கா ணோமெனவே : ஏங்கிப்ப தறியுங்கள்
தந்தையரில் தந்தையவர் : தவித்துழண்டு மாண்டிடுவார்.
முத்தாடி யென்னுடைய : முகமதனில் முத்தமிட்ட
பத்தினியே யென்றவரும் : பாய்ந்தலறி வந்திடுவார்.
பொங்கிமனம் பேதலித்து : புண்ணியனு ரித்தெருவில்
தங்காமல் தேடியவர் : தான்வருவா ராகையினல்.
இச்சணமென் மக்களேநீர் : இருவர்விரைந் தோடியுங்கள்
உச்சிதபொற் றந்தையர்க்கு : உரைத்திடுங்கள் சங்கதியை.
கொங்கைய முதளித்து : கோகிலம்போ லேவளர்த்த
சங்கைமிகு மன்னையரின் : சங்கதியைச் சொல்லிடுங்கள்.
போனவுட னென்னினிய : புனிதமண வாளருக்கு
நானிருக்குங் கோலமதை : நன்றாகச் சொல்லிடுங்கள்.
சித்தந்தடு மாறினளாய் : செல்லும்தாய் சஞ்சலத்தை
முத்தமிட்ட சிலருக்கு : முடிவிலே சொல்லிடுங்கள்.
இக்கணமே சென்றிடுங்கள் : இல்லையே லுங்களுக்கும்
விக்கினங்கள் நேருமம்மா : விரைந்தோடிச் சென்றிடுங்கள்."



என்றமொழி கேட்டவுடன் : இவளீன்ற பாலகிகள்
கன்றுகள்போ லேகதற : காளையைப்போல் தாயாரும்.
ஒன்றுயு ருண்டழுது : ஓலமிடுங் கூக்குரலை
நின்றிருந்த சேவகர்கள் : நேர்முகமாய்க் கண்டிடவே.
அந்தரங்க மாயவர்கள் : அக்கணமே யோடிவந்தி
சுந்திரரி ருவனையும் : சூழ்ந்துபி கிந்துகட்டி.
மேட்டிமையாய் வாழ்ந்தவிரு : மித்திரனை நீசரவர்
சாட்டைச்ச வுக்குகளால் : சதைகிழிய வேயடித்து.
ஆட்டுமந்தை போலவங்கு : அடர்ந்தவர்கள் கொண்டேகும்
கூட்டமதி லோட்டியந்த : கொடும்வெயிலி லாத்திரமாய்.
வீதியெல்லாந் தாண்டியவர் : வெகுதூரஞ் செல்லுகையில்
கோதில்லா வுத்தமர்கள் : கோரணிகொ லைக்களத்தை.
கண்ணாலே கண்டவுடன் : கர்த்தனே யென்றலறி
எண்ணாதவெண்ணமெல்லாம் : எண்ணியெண்ணி யேநடக்க.
சூழ்கடலி றைவதுபோல் : சுத்தரமுங் கூக்குரல்கள் [ந்து.
வீழ்கவிந்தப் புண்ணியர்கள் : வெடவெடத்து வீழ்ந்தெழு
நிலைதவறி மெய்சோர்ந்து : நிமைப்பொழுதி லெல்லோரும்
கொலைக்களமே சேர்ந்தார்கள் : கூடியவ ரோர்திரளாய்.
அன்னையரும் மக்களுமாய் : அப்பெரிய கும்பலிலே
நின்றிருக்க விம்மூன்று : நேயர்களின் பின்புறமாய்.
குறுக்குமறுக் காய்ப்பிணைத்து : கூட்டியவோ ரணியிலே
இருக்குமொரு புண்ணியனை : ஈராறு சேவகர்கள்.
திருக்கைமீன் வால்களினால் : தீயர்சவி யாதடிக்க
பொருக்கமுடி யாமலந்த : புண்ணியனார் வாய்திறந்து.
'பாவிகளை மீட்டதிருப் : பார்த்திபனே! பாவியெந்தன்
ஆவியைநீர் சீக்கிரத்தில் : ஆட்கொள்ளு' மென்றிறைஞ்சி.
இன்னுமவர் சொல்லுகிறார் : 'இங்கிதமா யிவ்வுலகில்
அன்னம்போ லென்மனையில் : அன்புடனே வாழ்ந்திருந்த.

என்னருமை தேவியவள் : என்னகெதி யானளோ
கன்னிமரி பாலகனே ! : காணுவது மெக்காலம் ?
வந்திடுவே னென்றுநெடும் : வழிபார்த்தி ருக்குமெந்தன்
அந்தமிகுந் தேவியவள் : அழுதழுது மாய்ந்தனளோ.
சுந்தரியும் காணமல் : சோர்ந்துபு ரண்டுருண்டு
எந்தவழி யேகினளோ : ஏகசரு வேசுரனே !
இன்றேயென் தேவியையும் : எந்தனிரு மக்களையும்
உன்கரத்தி லொப்படைத்தேன் : உன்னததி ரித்துவமே !
சொந்தமென நீரளித்த : சுந்தரியை மக்களுடன்
உந்தனுக்கே கையளித்து : ஒப்படைத்தேன் கர்த்தாவே !'
என்றவரும் சத்தமிட்டு : ஏசுவே யென்றசொல்லை
நன்ருக மூன்றுமுறை : நாதமெழ வுச்சரித்து.
கதறுங்கு ரலிவர்கள் : காதில்வி ழுந்திடவே
பதறியந்த மூவர்களும் : பார்த்துமறி யாததினல்.
சிரங்கவிழ்ந்து நின்றுருகும் : செல்வர்களை நோக்கியந்த
நிறங்குலைந்த புண்ணியனர் : நேரியபே ரிட்டழைக்க.
மின்னலின்றி வீழ்ந்தவிடி : மேனையா யங்கவர்கள்
அன்னவனைப் பார்த்தழுக : அக்கணமவ் வுத்தமனும்.
"என்னைவழி விட்டனுப்ப : இங்கெவரு மில்லையென்றே
உன்மனையை விட்டகன்று : ஓடிவந்தா யுத்தமியே.
என்னருமைக் காதலியே ! : என்துயரைக் கண்டிடவோ
உன்னருமை மக்களுடன் : ஓடிவந்தா யித்தூரம்.
கண்ணன பாலர்களே : காதலியே யின்றுமுதல்
மண்ணிலுங்கள் தந்தையரை : மறந்துவிட வேணுமம்மா.
சத்தமாய்ப் பேசவுமென் ; சத்துவங்கு றையுதெந்தன்
உத்தமரோ போகுதம்மா : உடலைவிட்டென் னுத்துமந்தான்."
என்றவரும் சோர்ந்தயர்ந்து : இளைத்துக்க ளைத்திடவே
நின்றழுகும் தாயவளும் : நேயர்களும் கண்டுருகி.

கட்டிப்பி டித்தழுது : 'காதலனைக் கைநெழுக
விட்டோமே யாண்டவரோ ! : வேகுதே யெம்முடலம்.
மாதனையி லெங்களரும் : மன்னவனை யிவ்விதமாய்
நீதியில்லா பாதகர்கள் : நிஷ்டூரஞ் செய்தனரோ.
அருமைகுண வுத்தமனே ! : ஐயோவும் மேனியெல்லாம்
உருமாற வோர்கொடியில் : உறித்தனரோ' வென்றிவர்கள்.
சொல்லிவாய் மூடுமுன்னே : சோர்ந்தவரும் சொல்லுகிறார்
"எல்லாமும் தீர்ந்ததம்மா : என்பிரிய நேயர்களே !
என்றுமுள்ள தேவபரன் : என்னுடை ருப்பதினால்
நின்றுருகிச் சோருவதேன் : நீதியல்ல வுங்களுக்கு.
மங்கிமடி யாதீர்கள் : மாதுயரங் கொள்ளாதீர்
பொங்கிமனஞ் சோர்வடைந்து : போகாமல் புத்தியுடன்.
தந்தையர்நான் போனவுடன் : தக்ஷணமென் பின்தொடர்ந்து
எந்தன்பிற கெல்லோரும் : ஏகமாய் வந்திடுங்கள்.
பயிர்போல்ச தைதெறிக்கப் : பாவிகள்ந சித்திடினும்
அயராதீர் செல்வர்களே ! : ஆயிரமோ டாயிரமாய்.
நம்மினத்தா ரெல்லோரும் : நகநகென வானுலகில்
செம்மையாய் வீற்றிருக்க : சீக்கிரத்தில் காண்பீர்கள்.
என்னவித வாக்கினைகள் : இட்டாலும் வீரியமாய்
கன்னலைப்போல் நின்றிறந்து : கனமோக்ஷம் வந்திடுங்கள்.
ஆக்கினைக்கு மஞ்சாமல் : ஆண்டவர்க்காய் நீர்மரித்து
பாக்கியராய் நான்போகும் : பரலோகம் வந்திடுங்கள்.
கர்வமுறும் யானைகள்போல் : கனவதைகள் செய்திடினும்
சர்வேச னுங்களுடன் : சார்ந்திருப்பா ரஞ்சாதீர்.
கைகால்ந டுங்குதெந்தன் : காணரிய மித்திரரே !
வையகத்தை விட்டகல : வந்ததம்மா வேளையுந்தான்.
போய்வருவே னுத்தமரே : புகலரிய மித்திரரே
தாய்மாரே யெந்தனுக்கு : தந்திடுங்க ளாசினை.'

என்றிறைஞ்சி மன்றாடி : இளைத்துக்க ளைத்தவராய்
நின்றிடவே யம்மூன்று : நேயர்களின் கண்ணெதிரே.

சிறித்தமு கந்துலங்க : சீர்பரத்தை நோக்கினராய்
மரித்தாரொன் தங்கையரே ! : மாவேத சாக்ஷியராய்.

ஆவியும்பி ரிந்தவந்த : அக்கணமே வானோர்கள்
தாவியே யோர்திரளாய் : தகதகென வந்திறங்கி

கூவியவ ரார்ப்பரித்துக் : கொண்டேகி யப்பொழுதே
சீவியரின் கூட்டமதில் : சேர்த்தார்கள் புண்ணியனை.

அங்கிருந்த மற்றவர்கள் : அடைந்தகொடு மாக்கினையை
தங்கையரே ! சொல்லவெனில் : தாரணியுங் கொள்ளாதே.

சொல்லமனம் சோருதம்மா : சூதர்கள்கொ லைக்களத்தின்
எல்லையில்லா வாதைகளை : எல்லாமெ டுத்துரைக்க.

எங்ஙனம்நான் சொல்லிடுவேன் : ஏங்குதம்மா வென்னுட
சங்கைமிகும் மங்கையரே ! : சாலவே யுங்களது. [லம்

பேதமையால் செய்துவிடும் : பெரும்பிழையைக் கண்டவுங்
காதலரும் பெற்றவரும் : கடுமையா யேசிவிட்டால். [கள்

அம்புபட்ட மான்களைப்போல் : அலறிப்ப தைபதைத்து
வெம்பிமனஞ் சோர்ந்துருகும் : வித்தகசி காமணிகாள் !

ஆக்கினைக ளென்றாலும் : ஆக்கினைக ளல்லவம்மா
பாக்கியர்க ளவ்விடத்தில் : பட்டதுய ரோதுதற்கு.

கோதிலர்கள் பட்டபல : கொடுமைகளைக் கேட்டாலும்
போதுமம்மா நேசர்களே ! : புத்திரனைப் பெற்றெடுக்க.

நீங்கள்படு மம்பாய : நிகரில்லா வேதனையை
சாங்கியங்கள் செய்யவரும் : சனமறிய சாத்தியமோ ?

அங்கம்ப தைத்தழுகும் : அன்பர்களே ! மற்றதையும் [கள்.
பொங்கிமனஞ் சோராமல் : பொறுமையாய்க் கேட்டிடுங்

பட்டணிந்த சுத்தர்களை : பாவிகளா னோர்கவர்ந்து
கட்டியபின் சொல்லரிய : கனகோர மாயவனை.

மானமவ மானமென்அ : மடையர்களும் பாராமல்
தேனமுதச் செல்வரந்த : தேசுலவுங் கன்னியரை.
காணப்பலர் முன்னிலையில் : களைந்தார் துகிலையையோ
நாணமிகு முத்தமர்கள் : நாயகனே யென்றலறி.
தூண்களைப்போல் நின்றுருகி : துடித்தழுகுஞ் சுந்திரரை
ஆண்களெனப் பேர்வகித்த : அறிவீனப் பேயினங்கள்.
மஞ்சமதி லேயுறங்கும் : மாகிலரின் தேகமெல்லாம்
பஞ்சாய்ப்ப றந்தகல : பலவான்க ளானசிலர்.
அஞ்சுமணி முட்சவுக்கால் : அயராம லேயடிக்க
பஞ்சவர்ணக் கிள்ளைகள்போல் : பாக்கியர்க ளுந்துடிக்க.
பைங்கிளிகள் தங்கையரை : பாதகர்செய் வாதனையால்
அங்கந் தெறித்துவிழ : ஆர்நரம்புந் தானறுந்து.
மெய்ந்துசிதைந் தங்குவிழ : பேர்புகழும் புண்ணியர்கள்
ஐந்துதிருக் காயமுற்ற : ஆண்டவனே யென்றலறி.
அங்கங்கே சோர்வடைந்து : அயர்ந்துமடிந் தெல்லோரும்
பங்குபங்கா கப்பிரிந்து : பறந்தார்கள் வானுலகம்.
நீதியற்ற விக்கொடிய : நிஷ்டூர வாதனையால்
பாதியுட லோடுவிண்ணைப் : பார்த்தழுகு முத்தமரை.
நாவையறுத் தார்சிலரை : நாலெட்டு பற்களையும்
பாவிகளி ரக்கமின்றி : பற்றரவே தானுதிர்த்து.
பண்ணாத கோரமெல்லாம் : பண்ணியபின் னேசிலரின்
கண்களையுந் தோண்டியவர் : காய்ச்சிய வெள்ளீயமதை.
நங்கையரின் கண்களினும் : நாசியினும் வாய்களினும்
அங்கமெங்கு மூற்றியவர் : அறைகுறையாய் விட்டுவிட்டு.
இன்னுஞ்சில வாலர்களை : ஈவிரக்க மின்றியவர்
மின்வாட்க ளாலறுத்து : மீளாக்கொ டுமைசெய்தார்.
ஐயோவென் தங்கையரே ! : ஆதனாயி னுள்ளவரே !
மெய்தனைமி னுக்கிமகா : மேட்டிமையாய் வாழ்பவரே !

பெருநெருப்பு மூட்டிசிறு : பெண்மணிகளைத்திரட்டி
கருகியவர் மாண்டிடவே : களைதனில் சுட்டெறித்தார்.
பூட்டகமாய் மாசிலரை : பூட்டிச்சி றையடைத்து
காட்டினிலே யுள்ளபல : கடுங்கோர முள்ளபுலி.
சிங்கஞ்சி அத்தைபல : செந்துகளுக் கேயிறையாய்
தங்கள்மனம் போலவரைத் : தானெறிந்தார் தங்கையரே.
இன்னுமவ ருற்றபல : இணையில்லாப் பாடுகளை
அன்னையரே சொல்லமனம் : அக்கினிபோல் பற்றுதம்மா.
வையகமுங் கொள்ளாத : வாதைகளை யோதுதற்கு
கைகால்ந டுங்குதம்மா : கண்ணுன நேயர்களே!
உத்தமம னஸ்தாபம் : உள்ளவித யத்துடனே
சுத்தர்கள டைந்தபல : சொல்லொண்ணுப் பாடுகளை.
பத்தியுடன் கேட்டுமிக : பரிசுத்த ராய்நடந்தால்
சத்தியமாய் வானுலகில் : தரிசிப்பீர் தர்மவரை நீர்.
மோக்ஷமுடி பெற்றிடவே : முன்சென்ற முத்தர்களே!
தாழ்ச்சியுட னேதுதற்கு : தந்திடுங்கள் நல்வரத்தை.
ஆகவே கேட்டிடுங்கள் : ஆதியந்த மில்லாத
ஏகபரன் மாவருளால் : இன்னுமுள்ள நேயர்களே.
பொல்லாச்ச திகாரர் : பூட்டிய டைத்தவுடன்
எல்லோரு மாகவந்த : இருண்டசிறைச் சாலையினுள்.
மேகங்கு முர்வதுபோல் : மேன்மையுட னெல்லோரும்
ஏகசரு வேசுரனை : ஏற்கையுடன் தோத்தரித்து.
மன்றாடும் வேளையிலே : மாறுதம்போ லக்குலைஞர்
ஒன்றாய்த்தி ரண்டுருண்டு : ஓனாய்கள் போலவுறி.
படிபுகழும் செல்வர்களின் : பால்முகங்கள் மாறிடவே
மடமடென வுள்நுழைந்து : மாசிலர்கள் மேல்விழுந்து.
கெட்டிப்பி டித்திழுத்து : நேசகுண வாளரவர்
பட்டவதை போதாமல் : பாதகர்வி ரட்டுகையில்.

சேனைத்தி ரள்களைப்போல் : ஜெயசீல சுந்திரர்கள்
ஈனர்கள்போல் தள்ளாடி : இருளடர்ந்த கானகத்துள்.
நுழைந்து நுழை யாமுன்னே : நொடிப்பொழுதி லம்மம்மா
பழுதில்லாப் புண்ணியர்கள் : பதைத்துமனம் பேதலிக்க.
தனித்தனியா யந்தமிகும் : தர்மகுண வாளர்களை
கனத்தமரத் தோடிறுக்கிக் : கைசோரக் கட்டியபின்.
வண்டிகளி லேற்றியுள்ள : வறண்டவெ ரிகரும்பை
கொண்டுவந்தா ரம்மம்மா : கோடிக்க ணக்களவில்.
அப்பொழுதே மாசில்லா : அர்ச்சிஷ்ட வன்னையர்கள்
ஒப்புரவாய்த் தாமழுத : ஓசைதனைக் கேட்டாலும்.
போதுமெந்தன் நேசர்களே! : பூரணமா யக்கணமே
மாதனையி லுள்ளகன : மாகோடி பாவமெல்லாம்.
பஞ்சாய்ப்ப றந்திடுமே : பாவிகளே யுங்கள்மனம்
கொஞ்சமெனு மஞ்சலையோ : கோரவதை கள்புரிய.
ஒப்புவமை யில்லாத : உத்தமர்கள் நிற்கையிலே
துப்பற்ற பாதகர்கள் : துரிதமா யோடிவந்து.
நேசரவர் கட்டுடனே : நேர்நேராய் நின்றுகொண்டு
பூசரம்போல் கண்ணீரை : புலபுலென வேயுதிர்த்து.
நிற்குமந்த வேளையிலே : நீசரந்த பாதகர்கள்
கற்புநிறை யுத்தமரின் : காந்தியொளிர் நெற்றியிலே.
கொண்டுவந்தி ருந்தகன : கூர்ந்தவிருப் பாணிகளை
கண்டாலு டல்நடுங்கும் : கனத்தபெரும் சுத்திகளால்.
கூசாமல் வைத்தறைந்து : கொடும்வினைகள் செய்கையிலே
தேசுலவுங் கண்மணிகள் : தேவனே யென்றலற.
கங்கைஜலம் பாய்வதுபோல் : கபகபென வேயுதிரம்
பொங்கிவடிந் தோடுதம்மா : பொன்மேனி யங்கமெல்லாம்.
சொல்லரிய வித்தகைய : துயரமதைக் கண்டுருகி
அல்லல்படு முத்தமரை : ஆவேசப் பேயினங்கள்.

செய்தவனி யாயமதை : செப்புவது மெவ்விதமோ
பொய்யல்ல நங்கையரே ! : புண்ணியஞ்சேர் கன்னியனை.
சூரியவேல் பட்டயத்தால் : குணவதிகள் பொன்வயிற்றை
கீறிக்கு டல்சரிய : கிழித்தெரிந்த தன்றியந்த.
திங்களொளி வீசுகின்ற : திருத்தேகத் தங்கையரின்
கொங்கைகளைச் சண்டாளர் : கொத்திய றுத்தெறிந்தார்.
கனமகிமை மேட்டிமையாய் : காதலர்கள் மக்களுடன்
மனமகிழ்வாய் மாளிகையில் : வாழுமட மாதர்களே !
செவியாரக் கேட்டீரோ : சேல்விழிகொள் செல்வர்களே !
புவியிலே யுங்களைப்போல் : புத்திரர்க ளாய்ப்பிறந்த.
அக்காலப் பெண்மணிகள் : அல்லவோ பொன்மணிகள்
இக்காலப் பெண்மணிகள் : இவர்க்குயிணை யாவரோ ?
பல்லடுக்கு மாளிகையில் : பாங்குடன்வாழ் பாக்கியர்கள்
வல்லயமா யுற்றபல : வாதைகளும் போதாமல்.
சதிகாரப் பேயினங்கள் : சாலவே செய்தமகா
மதிமோச மானவொரு : வாதைதனைக் கேட்டிடுங்கள்.
நாளுமலங் காரமிகும் : நாயகிக ளானவரை
வாள்போன்ற சக்கரத்தில் : வைத்துக்கி ழித்தெறிந்தார்.
கால்நடைக ளானகருங் : காட்டுக்கு திரைகளின்
வால்களிலே கன்னியரின் : வாகான கூந்தல்களை.
சேர்த்துப்பி ணைத்துகட்டி : தீவிரமாய்த் தானடித்து
பார்த்துமகிழ் வேளையிலே : பார்புகழும் பாக்கியர்கள்.
பட்டதுய ரின்னதென : பட்டவரோ யன்றியதை
திட்டமாய்ச் சொல்லிடினும் : தெரியுமோ மற்றவர்க்கு.
கள்ளங்க படமில்லா : காந்திமுகக் கன்னியரை
முள்ளடர்ந்த பீப்பாயுள் : மூடியடைத் தேயதனை.
மேடுகளி லேற்றிவெகு : வேகமாய்க் கீழுருட்ட
வாடிவதைந் துத்தமிகள் : வானுலகஞ் சென்றார்கள்.

இவ்விதமாய் மாண்டவர்கள் : இத்தனைபே ரொன்றுமக்கு
செவ்வையாய்ச் சொல்லவிந்த : சிறுவனு லேலுவதோ ?
ஆண்டாண்டு தோறுமவர் : அடைந்ததிருப் பாடுகளை
ஆண்டவரோ யன்றியிந்த : அவனிதனில் யாரறிவார்.
விவரமதை நீரறிய : வேண்டுமெனில் தங்கையரே !
தவரா நீதிபரன் : தந்தளித்த கட்டளைபோல்.
வழுவாம லேநடந்து : வானுலகஞ் சேர்ந்தவுடன்
பழுதில்லாப் புண்ணியனைப் : பார்த்திடுவீர் கண்ணெதிரே.
கைதவஞ்சேர் தங்கையரே ! : காக்ஷியுறும் ரோம்நகரில்
வெய்யோனு தித்ததுபோல் : மெய்யாக வாழ்ந்துவந்த.
அஞ்ஞானி கள்முதலாய் : ஐயையோ வென்றலறி
சஞ்சலமி குந்தவராய் : சாகாத்தி லிக்கொடிய.
பாவியைப்போல் நாமிகத்தில் : பார்த்ததில்லை யென்றவர்கள்
நாவினல் பேருரைக்க : நடுங்கிடுவார் பாலர்முதல்.
கூவியழும் வேளையிலே : கொடுங்கோலன் பேருரைத்தால்
ஆவிபிரிந் திட்டவர்போல் : ஆர்ந்தயர்ந்து தூங்கிடுவார்.
திங்களொரு பத்தாக : தேகம்ந சிந்துருகும்
மங்கையரின் கெற்பமெல்லாம் : மாபாவி பேருரைத்தால்.
கலங்கிந டுநடுங்கி : கால்கள்தடு மாறியகம்
குலுங்கியொ டுங்கியவர் : கூவென்ற லறிடுவார்.
என்றந்த மானிடரும் : ஏதமில்லா கோத்திரரும்
பன்றியுரு கொண்டவனை : பலவாறு யேசியிந்த.
பாவிமகன் மாண்டாலும் : பாதகமே யில்லையென்று
கூவியந்த மானிடர்கள் : கோபக்கண் ணிருதிர்த்து.
வேதமுறை தானறியா : வீணர்களிவ் வாறழுதால்
நீதிபரன் நேயர்களின் : நிலமையைநா னுங்களுக்கு.
சொல்லிடவும் நீதியுண்டோ : சொல்லிடுங்கள் தங்கையரே !
புல்லறிவு கொண்டவெந்தன் : புத்திதடு மாறுதம்மா.

கவனமாய்க் கேட்பவரோ ! : கண்மணிக ளித்தகைய
அவமான முற்றதுவேன் : ஆதனையில் வாழ்வதற்கோ ?
அல்லவல்ல தங்கையரே ! : ஆண்டவருக் காகையினல்
வல்லவனைப் போற்றியிந்த : வையகத்தில் வாழ்ந்திடுங்கள்.

---

## 19-வது அத்தியாயம்.

### இரு சகோதரர்கள்.

இவ்விதமா யக்கொடிய : இறைவன்செங் கோல்பிடித்து
அவ்வுலகை யாளுகையில் : ஆதிக்கி நீஸ்துவர்கள்.
என்செய்வோ மாண்டவனே : ஏகனே யென்றழுது [து-
பொன்மேனி செல்வர்களும் : போங்கதியே தென்னவென்
தொல்லுலகி லிக்கொடியன் : தோதாய்ந மைப்பிடித்து
கில்லிகில்லி யாயுடலைச் : சிதைத்திடுவா னல்லாமல்.
வஞ்சகன்ப தம்பணிந்து : வாழியெங்கள் வல்லரசே
தஞ்சமும்நீ ரல்லாமல் : தரணியில்வே றில்லையென்று.
கொஞ்சிடினும் கெஞ்சிடினும் : கோவென்ற ழுதிடினும்
வஞ்சகனு லேநமக்குத் : தஞ்சமே யில்லையென்று.
சஞ்சலங்கள் மிஞ்சியந்த : சண்டாளப் பேயனுக்கு
அஞ்சினர்போ லன்னோர்கள் : அல்மாக்கி யூஸனெனும்.
சதிகார வன்மகுண : சண்டாளப் பேயுருவன்
எதிரிலே சென்றிடவும் : எவருந்து ணியாமல்.
புலிகண்ட மானினம்போல் : புத்திதடு மாறினராய்
மலைகாடு மேடுகளில் : மந்தைமந்தை யாய்நுழைந்து.
சீரழிவு கொண்டதுஷ்ட : தீயனுக்கா யெல்லோரும்
பேரிழவு கொண்டாடி : பேதலித்தார் தங்கையரே.

இத்தகைய கோலமதை : இரக்கமுடன் கண்டுவந்த
சுத்தன்வ லேரியனும் : சூதறியா தீபூர்ஸாம்.

வாடும்ப யிர்களுக்கு : வானமழை பெய்வதுபோல்
மேடுபள்ளம் பாராமல் : மேட்டிமையா யவ்விருவர்.

அஞ்சாத வீரமுடன் : அல்மாக்கி யூஸனெனும்
வஞ்சகனுக் கஞ்சாமல் : வாட்டமுகங் கொள்ளாமல்.

அந்திபக லாய்ச்சிறையில் : அடைபட்ட நேசர்களை
சந்தித்து பசரித்து : சாற்றரிய போதகத்தால்.

தேற்றித்தி டனுரைத்து : தேவுலக வானவர்போல்
போற்றிப்பு கழ்ந்திடுவார் : புண்ணியர்க ளவ்விருவர்.

நீதியில்லா மாகொடிய : நிஷ்டூரப் பாடுபட்டு
ஓதரிய நாதனுக்காய் : உயர்வேத சாக்ஷிகளாய்.

மாண்டோர்தி ருவுடலை : மறைத்துவெகு பூச்சியமாய்
நீண்டவுடை பட்டுகளால் : நேர்த்தியாய் மூடியதை.

தக்கமரி யாதையொடு : சவக்ஷேம சாங்கியத்தை
மிக்கபரி சுத்தமுடன் : மேலவர்மு டித்திடுவார்.

நெடுங்கால மிவ்விதமாய் : நேசரிவர் செய்துவர
கொடுங்கோல னோர்முறையில் : குறிப்பாகப் பார்த்திடவே.

குக்கலினத் தோடுதித்த : கூற்றரசன் மாக்கியூஸன்
செக்கலித்துக் கையுதறி : கேடுகெட்ட பாவியவன்.

சொல்லிடுவா 'ஹஹா! நான் : தொல்லுலகில் வந்தமுதல்
நல்லதின மெப்பொழுது : நல்கிடுமோ வென்றிருக்க.

பழுத்தபழம் கைநழுவி : பாலினில்வி ழுந்ததுபோல்
கொழுத்தயிவ ராஸ்தியெல்லாம் : கொண்டடைய வெந்த
[னுக்கு.

நிலையான காலமுந்தான் : நேர்ந்த'தென வார்ப்பரித்து
தலைகொள்ளாச் சந்தோஷ : சாகரத்துள் மூழ்கினனாய்.

என்னைப்பிடித்தசனி : இன்றோடே போச்சுதினி
கண்ணியமாய் வாழ்ந்திடவும் : காலமது வாய்ந்ததையா.
நல்லதிது நல்ல' தென்று : நாய்போலு ருமியந்த
பொல்லாக்கொ டுங்கோலன் : பூரித்து ளம்மகிழ்ந்து.
'காலமதை வீணிலேநான் : கழிக்காம லிக்கணமே
நீலவிழி கள்சிவக்க : நீசரிரு வாலரையும்.
நொடிப்பொழுதில் நான்பிடித்து : நொறுக்கியவர் கொட்ட [மதை
அடங்காமல் போனால்நான் : ஆணாய்ப்பி றந்தவனா ?
வாடியவர் மாண்டழிய : வாட்டாமல் விட்டால்நான்
பேடியே யாவதல்லால் : பேர்தண்ட நாயகனா ?'
என்றுபல வீரியங்கள் : ஏகமாய்க் கூறியவன்
ஒன்றாக வீரிரண்டு : ஒருயரச் சேவகரை.
ஆள்விட்ட ழைத்தவனும் : அங்கவருக் கேதுரைப்பான்
"வாள்வீர சூரர்களே ! : வாருடனீ ரிப்பொழுதே.
கலவரங்கள் கொள்ளாமல் : கட்டாக நால்வருமாய்
வலரியனும் தியூர்ஸ—ும் : வாழ்மனையுள் நீர்நுழைந்து.
கட்டியந்த நீசர்களை : காவலனா மென்சமுகம்
நெட்டிநெட்டிக் கொண்டுவந்து : நிறுத்திடுங்க" ளென்று [ரைக்க.
கட்டளைபோ லந்நான்கு : கனவீர சேவகர்கள்
பட்டணமெல் லாமலைந்து : பார்த்தவர்க ளைப்பிடித்து.
தீதில்லா புண்ணியரை : சேதமுற வேயடித்து
நீதியர சன்சமுகம் : நிறுத்தினர் நேசர்களை.
பார்த்தவுட னவ்வரசன் : பாய்ந்தெழுந்து சொல்லுகிறான்
"நேர்த்தியாய்க் காணுதையா : நேசகுண வாலர்களே !
இக்கோல மாகவும்நீர் : என்னெதிரே நிற்பதென்ன ?
தக்கவிடை நீரளிப்பீர் : தர்மகுண வாளர்களே."

என்றிளைவ னுஞ்சிரித்து : இச்சகமாய்க் கேட்கையிலே
நின்றவர்க ளோர்மொழியும் : நிகழ்த்தவில்லை யானதினால்.
கொடுங்கோல னப்பொழுதே : கோபமுட னேயெழுந்து
நடுங்கியவர் மெய்பதைக்க : நாகம்போல் சீறுகிறான்.
" கல்வியிலே தேர்ந்துமகா : கனபுகழோ டேயுலகில்
செல்வர்களாய் வாழுமுங்கள் : சீர்மகிமை தான்மறந்து.
தேட்டமாய் முன்னோர்கள் : தேடித்தொ ழுதுவந்த
நாட்டின்தே வாதிகளை : நாடாம லீனமுறை.
வேதமதைப் பற்றிமுழு : வீணருடன் சேர்ந்ததுபோல்
ஓதுவதென் காதுகளில் : ஒலிக்குதெவ் வாறெனிலோ.
கண்டித்து நான்மடிக்கும் : கசடர்ச டலமதை
வண்டிகளில் நீரேற்றி : வாளாவி ருள்தனிலே.
பொல்லாக்க ருத்துடனே : புகழ்தீப தூபமொடு
நல்லடக்கஞ் செய்வதென : நான்கேள்விப் பட்டதுண்டு.
மெய்தானோ வென்பிரிய : மேன்மைதுரை மக்களே! நீர்
செய்ததுவு முண்டானால் : செப்பிடுங்க ளிக்கணமே.
மன்னிப்ப தன்றியிந்த : மானிலத்தி லுங்களுக்கோர்
தின்மையணு காமல்வெகு : தீவிரமாய்க் காத்திடுவேன்."
என்றரசன் சொல்லிடவே : இளையவனும் தீபூர்ஸன்
நின்றிருந்த நாயகனை : நேசமுட னேயழைத்து.
" ஐயா! நீர் நிந்தனையாய் : அவமதிக்கு மன்னோர்கள்
மெய்யான தெய்வமறை : மேதவர்க ளானதினால்.
பற்றில்லா யிவ்வுலக : பாக்கியச லாக்கியத்தை
அற்பமென வெண்ணியதை : அவமதித்து வாவலுடன்.
தேடரிய பேரின்ப : தெய்வீக பாக்கியத்தை
நாடியவ ராசரித்து : நற்கெதியை யோசித்து.
ஓடினவ ராகையினால் : உன்னதவான் நேசர்களை
தேடியு பசரித்தோம் : தெரிந்திரோ மன்னவனே.

வின்னல்லா வெம்மரசே! : விவரமின்னும் வேணுமெனில்
மின்னுஞ்சிறு பூச்சிகளின் : வெளிச்சம்நெருப் பல்லவென்று
பண்டிதரா றிவதல்லால் : பாமரர்கள் யாரறிவார்?
கண்டீரோ நாயகனே : காதாரக் கேளுமிப்போ.
ஆகையினால் லௌகீக : அற்பசுக போகமதை
தேகமுட னேமதித்து : தெவிட்டாத பாக்கியத்தை.
நிந்தித்த வமதிப்போன் : நின்மூடப் பித்தனல்லால்
சிந்தைதெளி வுற்றநல்ல : சித்தனவ னுவானோ?"
என்றுசிறு வன்மறுத்து : இவ்விதப்ப திலுரைக்க
"நன்றாக நீயுமிப்போ : நாணுது ரைத்தமொழி.
நீயேதான் சொல்லுவதோ : நீசொலவ ரோனுமிதை
சேயான வுந்தனுக்கு : செப்பினரோ" வென்றரசன்.
வினவவே தீபூர்ஸன் : "வேந்தனே! கேளுமையா
மனுவாக விப்புவியில் : மாசனுகா றுற்பவித்த.
சேசுவெனு மாண்டவனே : சிறியனெந்த னுள்ளமதில்
பேசியுப தேசமழை : பொழிந்தாரென் நாயகனே."
என்றமொழி கேட்டிறைவன் : இறைந்துசி ரித்துசரி
நன்றுயி ருக்குதப்பா : நாவாலு ரைத்தமொழி.
அவித்தபயிர் தான்முளைத்த : அக்கதைபோ லாச்சுதென
தவித்துளறிப் பேயனவன் : தர்மன்வ லேரியனை.
நோக்கி"யெந்தன் மித்திரனே! : நுண்ணறிவே தில்லாத
போக்கிலிபோ லுன்தம்பி : பிதற்றினான் பித்தனைப்போல்.
ஆகையினால் நீயேனும் : அறிவுடனே யென்மொழியை [ன.
தாகமுடன் கேட்டிகத்தில் : தழைத்தோங்கி வாழ்ந்தி"டெ
ஓதுகிறா னப்பொழுதே : உயர்ந்தபெரும் ஞானியைப்போல்
"பூதலநற் கீர்த்திகளை : பூரணமாய்க் கொள்ளாமல்.
வேலையில்லா வீண்கசடர் : விரிவாய்ப்பி தற்றுவதை
சீலமென நம்பிவெகு : செபதான தர்மதவம்.

செய்வதுவும் மூடர்களின் : செய்கையல்லோ தாரணியில்
கைப்பொருளை விட்டுவிட்டு : கனபொன்கி டைப்பதுபோல்.
சொற்பனங்கள் கண்டுகொண்டு : சுகித்திருக்க வெண்ணு
அற்பமதி யல்லாமல் : அறிவாளர் வேலையிதோ ?" [வது
எனவுரைக்க அண்ணனவன் : "என்னநீர் சொல்லுமொழி
கனவென்று ரைத்ததுவுன் : கல்வியற்ற தன்மையையா.
சென்றவரு ஷத்தினிலே : சிறியோரு லாவுகையில்
ஒன்ருக நூறளவில் : உத்தமர்வே ளாளர்சிலர்.
உற்றபல கஷ்டமுடன் : ஒப்புரவா யெல்லோரும்
நெற்றியிலே வேர்வையெழ : நேர்நிலத்தைப் பண்படுத்தி.
சாகுபடி செய்துவரும் : சமயமதி லோர்திரளாய்
வேகநடை யோடுவந்த : வீணர்வெகு வித்தகமாய்.
கேட்டார்க ளங்கவரை : 'கேடுகெட்ட மானிடரே!
வாட்டமுகத் தோடுநீங்கள் : வாடியு ழைப்பதென்ன ?
எங்களைப்போ லேசுகமாய் : இருக்காம லிக்கொடிய
சங்கடத்துள் மூழ்கியேநீர் : தவிப்பானேன் தாலமிசை.
காயமும்நெ கிழாமுன் : கண்களுமி ருளாமுன்
வாயிலுள்ள பல்லனைத்தும் : வழுவாமுன் வையகத்தில்.
சாவதுவும் வாராமுன் : சாகரசு கக்கடலில்
தாவியு ழல்வதன்றோ : சன்மார்க்க சீலமுறை.'
என்றவர்கள் சொல்லிடினும் : ஏற்காம லங்கவர்கள்
ஒன்றுய்த்தம் வேலைகளை : ஒப்புரவாய்ச் செய்ததினல்.
சிறப்பாயவ் வுத்தமர்கள் : சீர்பயிரைக் கொய்துமன
விருப்பமாய் வாழ்ந்துவர : வீண்காலம் போக்கினவர்.
கட்டத்து ணிகளின்றி : கனதுயரா லேவருந்தி
பட்டினியால் சோர்ந்தயர்ந்து : பரதபித்தார் பாருலகில்.
சொற்பநாள் பூமியிலே : சொகுசுடனே வாழ்வதற்கு
அற்பமனு மக்கள்படும் : அவதிகளைப் பார்த்திரோ ?

அற்பசுக போகமதை : ஆற்றுமணல் போல்மதிக்கும்
விற்பனசொ ரூபிகளை : வீணொன்றே தூற்றுகிறீர் ?

சைத்தியநோய் கொண்டவன்போல் : சன்மார்க்க நேயர்களை
பைத்தியங்கொண் டோரெனவே : பாரில்நி னைத்தவளா.

கைவழித்த மண்ணதைப்போல் : கனக்குறைவா யெண்ணி
[யெண்ணி

வையகத்தி லிக்கொடுமை : வழுத்திவரும் நீர்மிகுந்த.

சஞ்சலங்க ளோடுதெய்வ : சாபமதை மேற்சுமந்து
வஞ்சகமாய் செய்யுமுந்தன் : மாகோடி தோஷமதால்.

ஐயையோ வென்றலறி : ஆராத தீநரகில்
மெய்யாக வெந்தழிந்து : வேகாமல் வெந்திடுவாய்.

மன்னவனே" யென்றியம்ப : மாகோபங் கொண்டரசன்
புன்னகைமு கத்துடனே : புத்தியில்லாப் பித்தனவன்.

சொல்லுகிறு "னப்பப்பா : சூழ்புவியி லுன்கடவுள்
வல்லரச னெந்தனையும் : மற்றுமுள்ள வேந்தரையும்.

நரகமெனு மாழியிலே : நசித்திடுமோ?" வென்றுமிக
கருவமுடன் கேட்டிடவே : கலங்காத நெஞ்சமுடன்.

"வல்லரச னென்றுரைக்கும் : மன்னவனும் மாபெரிய
தொல்லுலகை யாண்டுவரும் : துகையில்லா ராயர்களும்.

நிரந்தரமா யென்றுமுள்ள : நிமலசரு வேசுரன்முன்
பறந்தகனும் தூசியல்லால் : பார்புழுக்க ளெவ்வளவோ ?

மங்காதெய் வீகருணை : வல்லபமக த்துவமுன்
உங்களது வல்லமைகள் : உண்மையிலெம் மாத்திரமோ ?

கூரியவேல் வாளேந்தும் : குவலயத்து மன்னவனே !
சூரியன்முன் மின்மினிகள் : சோதியுமெம் மாத்திரமோ ?

வின்னமில்லா மன்னனென : வீண்பெருமை கொண்டிருக்
[கும்

மன்னவனே ! புத்தியுடன் : மானிலத்தில் வாழுமையா.

புத்தியுட னேதியவென் : போதகத்தை யுண்டுமிக
சித்தந்தெளி வுற்றுடனே : சீரடையு" மென்றுரைக்க.

இத்தகைய வார்த்தைகளை : இருசெவியில் கொண்டவந்த
பித்தன்அல் மாக்கியூஸன் : பேதலித்துப் பொங்கினனாய்.

பொரிசிதறி கண்ணையவன் : புரட்டியு ருட்டியிரு
அருமைச்ச கோதரரை : அலகைமுகன் பார்த்துமிழ்ந்து.

சிங்கம்போல் சீறிமுகம் : சிவந்திடவே சீரிழந்து
அங்கம்ப தைபதைக்க : ஆங்கார மாயுரைப்பான்.

"இம்மட்டோ டுங்களது : இனியபிர சங்கமதை
அம்பட்டன் வைப்பதுபோல் : அடக்கிடுங்க ளாஹறாநான்.

பொறுமைக்கி டங்கொடுத்து : புத்திசொல்லி வந்ததெல்லாம்
வெறுமைக்கி டமாச்சோ : வீணர்களே" யென்றுரைத்து.

"நீங்களிரு பேருமெந்தன் : நேர்மைகுண தேவர்களை
தீங்கரவே யின்றுமுதல் : தீவிரமாய்க் கும்பிடுவீர்.

கும்பிடவே வேணுமிப்போ : கும்பிடா விட்டாலோ
பம்பரமா யாட்டியும்மை : பலகொடுமை செய்திடுவேன்.

ஆவியுந்து டிதுடித்து : அரைநொடியில் நீரிருவர்
சாவீர்க" ளென்றலறி : சண்டாள னார்ப்பரிக்க.

சிறிதளவு மஞ்சாமல் : சித்திரம்போ லவ்விடத்தில்
பிரியாமல் நின்றிருந்த : பிரபலர்கள் சொல்லிடுவார்.

"ஒருவாக்கா லுண்டமைத்து : உலகமதைத் தாங்கிவரும்
திரிலோக வாண்டவரை : தேடித்தி னந்தினமும்.

தொழுதுவரு மெங்களது : தூயபதம் போற்றிசெய்து
பொழுதுவிடி யுமளவும் : பொங்கல்கள்நீர் போட்டாலும்.

நாட்டுத்தே வாதிகளை : நாங்கள்பரிச் சேதமுமே
வாட்டமுடன் கண்ணேக்க : மாட்டோமி துநிசமே"

என்றுமன மொன்றுக : இவருரைக்க வவ்வரசன்
ஒன்றுக நிற்குமந்த : உத்தமரைப் பார்த்துரைப்பான்.

" அந்தணர்போ லென்னுடனே : அயராம லேயுளரும்
மந்திகளே! நீங்களிந்த : மானிலத்தி லேதொழுவும்.
உங்களது தெய்வமதின் : உற்றபேர் சொல்லு" மெனச்
சிங்கம்போ லவ்வரசன் : சினந்தவனைக் கேட்டிடவே.
மங்களஞ்சே ருத்தமர்கள் : மனமகிழச் சொல்லிடுவார்
" சங்கைமிகு மப்பெயரைச் : சாற்றத்து ணிந்தவர்கள்.
விண்ணிலுமே யில்லையையா : வேந்தேயி ருளடர்ந்த
மண்ணிலுமே யில்லையையா : மாதண்ட நாயகனே"
என்றவர்கள் சொல்லிடவே : இருகண்சி வக்கவவன்
" ஒன்றாக நீரிருவர் : ஓதுமொழி யென்னவிது!
துகையில்லாப் பேருடைய : யூப்பிற்றர் வேனூஸும்
இகமதனில் நான்தொழுவும் : இவரெல்லாம் வீணர்களோ?"
என்றவனுங் கேட்டிடவே : இளையன்தி யூர்ஸனவன்
" நன்றாயு ரைத்திடுவோம் : நாயகனே! கேளுமிப்போ.
ஆதியந்த மில்லாத : அனாதியா யென்றுமுள்ள
சோதிவடி வாயிலங்கும் : சுயம்புவே யெங்கடவுள்.
என்றறிவ தன்றியவர் : இம்மூன்று லோகமுடன்
பன்னிருமா மண்டலத்தை : படைத்தளிக்க வல்லவராம்.
அவரேக டவுளன்றி : அறிவீன நீயுரைக்கும்
நவமான யூப்பிற்றர் : நப்தூன்பு லுத்தோனும்.
வேனூஸும் மற்றுமுள்ள : வெவ்வேறு பேருடைய
வீணர்கள்ப ரிச்சேதம் : மெய்க்கடவு ளாவாரோ?
வேலேந்தும் மன்னவனே! : வேதாள மானவர்கள்
சேல்விழிகொள் மாதர்களின் : சீர்கற்பைச் சீரழித்து.
சோரங்கொலை மோகமுடன் : சூதாட்ட பாட்டமெனும்
கூறடங்கா பாதகங்கள் : கூசாமல் செய்வதிலே.
காலமதை வீண்போக்கிக் : கழித்தகச டர்களென
ஓலமுறை தானிடுதே : உங்கள்பு ராணமெல்லாம்.

ஆகையினுல் நீருரைத்த : அவர்களெரி தீநரகில்
வேகாமல் வெந்தழிந்து : வினைகளுறும் பேய்களல்லால்.
தெய்வமென்று சொல்லிடவே : தெய்வீக லக்ஷணங்கள்
ஐயோ அவர்களிடம் : அற்பமெனு முண்டோ சொல்.''
என்றிவன்ம றுத்துரைக்க : எதிர்நின்ற அண்ணனவன்
"நன்ருயு ரைத்தாயென் : நன்மை மிகுஞ்சுந்திரனே.''
என்றண்ணன் தம்பிதனை : இருகரத்தால் சேர்த்தணைத்து
கன்றினைப்போல் துள்ளிவெகு : கனிவுடனே முத்தமிட்டு.
"மன்னவனே பாலனிவன் : மறுத்துரைத்த வார்த்தைகளை
உன்மனதில் நாட்டியிந்த : உலகினிலே வாழுமையா.''
என்றிவனு ரைக்கவந்த : இறைவன்முகம் நாணினனுய்
பன்றியுரு கொண்டபடு : பாதகனும் வீரர்களை.
அழைத்தவர்க்குச் சொல்லிடுவான் : "ஆஹாகம் தேவர்களை
பழித்ததினு லிந்தபடு : பாதகனை யோர்மரத்தில்.
கட்டியபின் நீண்டபெரும் : கனத்தமி லாறுகளால்
கொட்டமத டங்குமட்டும் : கொத்திடுங்க'' ளென்றுரைக்க.
தாமதமொன் றில்லாமல் : சாடிவந்தவ் வீரர்களும்
சோமநிகர் மாவதன : சுந்திரன்வ லேரியனை.
பிடித்தவன ணிந்திருந்த : பீதாம்ப ரத்துயிலை
மடத்தனமா யன்னவர்கள் : மளமளென வேயுரிந்து.
கம்பமதில் கட்டியவர் : கனவுதிர மோடிடவே
வம்பாளர் தாமடிக்க : வாட்டமாய் நிற்கையிலே.
வலேரியா னென்னுமந்த : வாலவனு மப்பொழுதே
மலர்ந்தமுக மேதுலங்க : வாய்திறந்து சொல்லுகிருன்.
"ஓ! பிரிய ரோமான : உத்தமரோ! யுங்கரத்தால்
தாபரவாய் நானடையும் : தண்டனையால் நீங்களிப்போ.
ஏக்கமுற்று வாடாமல் : ஏகபரன் வேதமதை
ஊக்கமுடன் பற்றிமிக : உத்தமராய் வாழ்ந்திடுங்கள்.

அணிவகுத்து நிற்குமெந்தன் : அன்பர்களே! யெந்தனுடல்
பிணியெல்லா மோர்நொடியில் : பேதமின்றி யேமுடியும்.
ஆனால தின்பலனே : அக்ஷயமா யென்றுமுள்ள
வானுலக மோக்ஷமதில் : வளர்ந்திடு"மென் றோதுகையில்.
அண்ணன னுபவிக்கும் : ஆனந்த பாக்கியத்தை
கண்ணாரக் கண்டுவெகு : கனமகிழ்வ டைந்தசிறு.
தம்பியந்த தீபூர்ஸன் : சலசலென வேயழுது
வெம்பிமனஞ் சோர்ந்துருகி : வீழ்ந்துமுழங் காலிருந்து.
வானுலகை நோக்கினனாய் : வளர்கரத்தை நீட்டிவெகு
ஆனந்த சாகரத்துள் : ஆழ்ந்தவனாய்ச் சொல்லுகிறான்.
"புல்லறிவு பாலனுக்கிப் : புண்ணியத்தில் பங்கெதுவும்
இல்லையோ வாண்டவனே : ஏகனே" யென்றழுது.
நீதியற்ற நாயகனை : நேசமுட னேயழைத்து
ஓதுகிற "னெங்களது : உத்தமனே கோமானே.!
இவனைமட்டு மிவ்விதமாய் : இக்கோலஞ் செய்வதிந்த
அவனிதனி லொவ்வாது : அவனைப்போல் நானுமொரு.
சத்தியகி றீஸ்துவன்தான் : தாமதியா தென்னையும்நீர்
ஒத்திவரோ டேபிணைத்து : உன்மனம்போல் செய்திடுவீர்.
எம்மட்டில் குற்றமில்லை : என்றுகண்டா லிப்பொழுதே
வம்பாட்ட மின்றிவிட்டு : வாழுவதே நீதி"யென்று.
சொல்லிவாய் மூடுமுன்னே : சூழ்தண்ட நாயனுக்கு
பொல்லாக்க டுங்கோபம் : பொங்கிடவே பல்லையவன்.
நெறுநெறென வேகடித்து : நேராகச் சொல்லிடுவான்
"கறகறென காக்கையைப்போல் : கத்தாதே கண்டபடி.
உன்னுடலு முன்னுயிரும் : உன்சர்வ மம்மதையும்
என்னிடது கையினிலே : ஏற்றிருப்ப தாலதனை.
விரித்திடுவே னாமாகில் : வீணாக விப்பொழுதே
மரித்திடுவா யுண்மை"யென : மன்னவனுஞ் சொல்லிடவே

“ அவ்விதம்நீர் பேசுவதும் : அழகல்ல மன்னவனே !
எவ்விதமென் ருலிகத்தில் : இவ்விருவர் நாமரிக்க.
பயந்தவர்க ளல்லவையா : பாங்காயு மதுகையை
நயந்தேவி ரித்திடலாம் : நல்லரசே யுன்மனம்போல்.”
என்றிவர்க ளொன்ருக : இயம்பவே யக்கொடிய
மன்னன்க லகலத்து : மாச்சரியங் கொண்டவனய்.
மண்டலத்தி லித்தகைய : மாருத்து ணிகரத்தை
கண்டதில்லை யென்றுசொல்லி : கனலதிலே வீழ்ந்தசிறு.
புழுபோல்து டிதுடித்து : பொங்கியவன் சொல்லுகிருன்
“ பழிவழிக்கே வந்தகொடும் : பாதகர்க ளானீர்கள்.
றழலதுதன் வாயதினுல் : நொடிப்பொழுதில் மாள்வதுபோ
முழுவதுமே கெட்டழிந்தீர் : மூடர்களே” யென்றலறி. [ல்
மக்ஸீமன் யென்னுமொரு : மாகொடிய சேர்வையிடம்
அக்கணமே சொல்லுகிருன் : “ ஐயா ! நீ ஞைஞூறு
சேவகர்கள் சூழவிந்த : சிறுவருடன் யூப்பிற்றர்
கோவிலுக்குச் சென்றுவந்த : கோணலில்லா பொற்சிலைக்கு.
நறும்புகைகள் காட்டியதை : நாடிந மஸ்கரித்து [போல்.
பெரும்புகழ்கள் சொல்லிடவே : போதிப்பீர் சொன்னது
செய்தாக்கால் விட்டிடுவீர் : செய்யோமென் றேமறுத்தால்
கொய்தவர் சிரமிரண்டை : கொடுத்திடுவீர் தேவருக்கே.”
என்றிறைவன் சொன்னபடி : இருநேசர் கைகளையும்
ஒன்ருய்ப்பி ணைத்திறுக்கி : ஓங்குபறை சாற்றியவர்.
செங்துள்ப றக்கபெரும் : சேனைகள்போ லேதிரண்டு
வந்தார்க ளம்மம்மா : மந்தார வேலையிலே.
நிதானகுண செல்வர்களே ! : நீள்புவியில் வாழுகின்ற
உதாரகுண மானிடர்க்கும் : உத்தமகி றீஸ்துவர்க்கும்.
பெரும்போர்தி ரவியமும் : பேர்புகழும் சீவியமும்
துரும்பாகு மென்றுலகோர் : சொல்லும்ப ழமொழிபோல்.

வலேரியனும் தீபூர்ஸூம் : வந்தமனுக் கும்பலதும்
கலகலென வெல்லோரும் : கட்டாக நிற்கையிலே.
போர்க்களத்தைக் கண்டகன : புகழ்வீர சூரர்கள்போல்
யார்க்குமஎளவுபடா : வானந்தங் கொண்டவராய்.
சுந்திரச கோதரர்கள் : சுற்றுமுற்றும் நோக்கியவர்
சந்தோஷ வாரிதனில் : சாடினராய்ச் சொல்லுகிறார்.
" அந்நாளில் தீக்ஷைதனை : அடைந்தவந்தக் காலமுதல்
இந்நாளுக் காகவல்லோ : இன்பமுடன் காத்திருந்தோம்.
நோக்கரிய வானவனும் : நோண்பாயு ளைத்தவந்த [ம்.
பாக்கியத்தை யின்றல்லோ : பார்க்கக்கொ டுத்துவைத்தோ
பாருலகில் நாம்புரிந்த : பாவம்ப றந்தலக
கூறரிய புண்ணியஞ்சேர் : குணப்பலனை யேயடைந்தோம்.
ஆகவே சூழ்ந்திருக்கும் : அன்பர்களே ! யெங்களுக்காய்
ஏகசரு வேசுரனை : ஏற்றிப்பு கழ்ந்திடுங்கள்.
சோகமுற்று வாடாமல் : சோதிமுக செல்வர்களே !
தாகமுட னேசிரசை : தாழ்த்திப்ப ணிந்திடுங்கள்.
கோதிலரே மாசிலரே : குணவாள சேவகரே !
ஆதிபரஞ் சோதியிடம் : ஆவலாய் வேண்டிடுங்கள்.
ஆண்டவரின் பூசகரே ! : அன்புடனே, யெல்லோரும்
நீண்டகுர லோசையுடன் : நித்தியனைப் போற்றிடுங்கள்.
மனத்தாக்ஷி யுள்ளபல : மங்கையரே, தங்கையரே !
கனத்ததொனி பாடலுடன் : கர்த்தனைநீர் போற்றிடுங்கள்.
வெண்ணுடைய ணிந்தபல : வேதியர்க ளின்தளமே
மண்ணதிர வீணைசுரம் : மாசுகிர்த வாத்தியங்கள்.
தம்பூறு நாகசுரம் : தாளங்கைத் தாளமொடு
அம்பரனை வாழ்த்திவெகு : ஆனந்தங் கொண்டிடுங்கள்.
எங்களையே முத்தமிட : எதிர்நோக்கும் முத்தர்களே !
மங்களங்கள் பாடிவெகு : மகிழுறங்க ளோர்கொடியில்.

வந்திடுவோ மாகையினல் : மாக்ஷியுட னெல்லோரும்
அந்தமுறும் தேவனிடம் : ஆவலாய் வேண்டிடுங்கள் ”
என்றவர்க ளொன்ருக : இப்பொழுதே மோக்ஷமதில்
ஒன்றித்தி ருப்பவர்போல் : ஓதரிய வக்களிப்பாய்.
மணியோசை போலிசைந்து : மன்ருடும் மாசிலரின்
துணிகரத்தைக் கண்டுநின்ற : தூதன்தி கைத்தவனய்.
நேசர்களை வாஞ்சையுடன் : நேராக வேயழைத்து
பேசுகிரு னப்பொழுதே : “ பேர்புகழும் வாலர்களே !
கற்றறிந்த சுத்தர்கள்முன் : கசட னு ரைக்குமொழி
குற்றமென வெண்ணமல் : குணமாய்ம தித்திடுவீர்.
தேவன்கொ டுத்தபல : தேடரிய நன்மைகளுள்
சீவனன்றே முக்கியமாய் : சிறந்தபொரு ளாகுமையா.
ஆகையினல் மானிடர்கள் : அவ்வுயிரை யிவ்வுலகில்
தாகமுடன் காப்பாற்றி : தழைத்திருக்க வேண்டுமையா.
காரியமிவ் வாறிருக்க : காணரிய நேயர்களே !
கூறிடுமென் புத்திதனைக் : குணமாய்ம தித்திடுங்கள்.
சாதனையா லும்முடைய : சத்தியமா மெய்மறைக்காய்
வேதனைக ளுற்றுலகில் : வீணிலே யும்முயிரை.
சேதப்ப டுத்துவதும் : செப்பிடில நீதமன்றே ?
ஓதிடுவீ ரென் னுடைய : உத்தமரோ கேளுமிப்போ.
மறந்துநான் செத்துவிட்டேன் : மறுபடியென் னங்கமதில்
பறந்துவா யென் னுயிரே : பரிவாக வென்றழைத்தால்.
போனவுயிர் வந்திடுமோ : புண்ணியரே ! யாகையினல்
நானுரைப்ப தென்னவெனில் : நாடாப்பெ ருநெருப்பை.
மூடியுள்ள சாம்பலைப்போல் : மோசமுற்று மெய்சோர்ந்து
வாடாம லுங்கள்விசு : வாசமதை வையகத்தில்.
உள்ளளவும் பற்றிமிக : உறுதியாய் நம்பிபகல்
கள்ளனைப்போல் மற்றவர்க்கு : காட்டிப்பி ழைத்திடுங்கள்.

ஆபத்தைக் கண்டவுடன் : ஆமைதலை வாங்குதல்போல்
கோபக்கொ டியரசன் : கூறியுள்ள கட்டளையை.
ஒப்பிரு டப்பவர்போல் : ஒப்புரவாய் நீர்நடித்து
தப்பிப்பி ழைத்திடுங்கள் : தர்மர்களே!" யென்றுரைக்க.
மறுமொழியா யந்தவிரு : மாக்ஷிமிகு நேசர்களும்
சிறுவிழியால் நோக்கியப்போ : செப்புகிறு "ரெம்மினிய.
ஐயாவே! நீருரைத்த : அம்மொழிக ளெம்மனதை
மெய்யாக வக்கினியால் : மேலும்மே லுஞ்சுடுதே.
பாருலக மன்னவனைப் : பற்றியநீ ரும்முடைய
சீருயிரைத் தந்திடவும் : சிறிதும்பின் வாங்குவையோ.
ஓர்நொடியில் மாண்டழிந்து : ஓடிவிடும் மன்னனுக்காய்
ஆருயிரைத் தந்திடவும் : அயர்ந்தேபின் வாங்குவையோ.
அவ்வாறி ருக்கவெம்மை : ஆவலுட னுண்டமைத்து
செவ்வுதிரஞ் சிந்தியிந்த : சீருலகை யாதரித்த.
வானுலக ராஜனுக்காய் : மாசிறுவர் மாளாமல்
ஈனமதி கொண்டவராய் : இருக்கவோ வும்மொழிபோல்.
வேதமுறை நேயமுமே : மேன்மையல்லா லிப்பெரிய
மேதினியி லிந்தவுயிர் : மிகப்பெரிதோ தெய்விக.
பாக்கியம் நற்பாக்கியமே : பாழுலகின் லெளகீக
பாக்கியம் நிற் பாக்கியமே : பலவாறாய்ப் பேசுவதில்.
பலனில்லை யாகையினால் : பரிச்சேதம் பேய்ச்சில்லை
தலைநிமிர்ந்து கண்ணோக்கத் : தான்மாட்டோ மாகையினால்.
நேசனே! வும்முடைய : நேர்வாள்பி டித்துமுன்பின்
யோசனைகள் செய்யாமல் : உடனேயி ருதலையை.
மட்டியர சன்கொடுத்த : மாறாத கட்டளைபோல்
வெட்டியெறிந் தோடியந்த : வேந்தனிடஞ் சொல்லிடுவீர்.
கட்டாகச் சூழ்ந்துநிற்கும் : கனவீர சூரர்களே!
விட்டுங்க ளப்பிரிய : வேலையுந்தா னச்சுதிப்போ.

தேடரிய வானுலகம் : சேர்ந்தவுட னுங்களுக்காய்
கூடியேநாம் வேண்டிடுவோம் : கூட்டமுட" னென்றுரைக்க.
உத்தமனே யாகுமந்த : உயர்சேர்வைக் கார "னையா !
செத்தபின்னே வேறுமொரு : சீவியமுந் தானுளதோ ?"
என்றியம்ப தீபூர்ஸன் : " எம்மினிய சேர்வையரே !
நன்றிகெட்ட விக்கொடிய : நானிலத்தி லேயுதித்த.
மனிதரி றந்தவுடன் : மாபுவியில் செய்தபெரும்
வினைகளதற் கேற்றமுறை : விதிப்படியே நீடூழி.
மோக்ஷம்ந ரகமென்னு : மிவ்விரண்டி லொன்றினிலே
சாக்ஷியம்ப கர்ந்திடவே : சாடிடுவான் சத்தியமாய்.
ஐயாவே மெய்யி"தென்று : அவனுரைக்க வாத்திரமாய்
"மெய்தானு வென்னயிது ! : மேதினியி லிக்காலம்.
சூக்ஷிகுண பாட்டியர்கள் : சொல்லும்ப ழங்கதைபோல்
மோக்ஷம்ந ரகமெல்லாம் : முயற்கொம்பா மென்றிருந்தேன்.
அருமையாய்ப் பேசுகின்ற : அழகுதுரை யன்பர்களே !
மறுவுலக முண்டெனவே : மாபாவி நானறிய.
திருஷ்டாந்தம் தந்தால்நான் : தீரமுட னுங்களைப்போல்
கிறீஸ்துவனு மாவதுமெய் : கேவலன்நான் நம்பியதை."
என்றவனுங் கேட்டவுடன் : என்பிரிய தங்கையரே !
நன்றாகக் கேட்டிடுங்கள் : நாதன்வ லேரியனும்.
சர்வேசன் யேவுதலால் : சலசலென வேயழுது [மெங்கள்.
" திருஷ்டாந்தம் வேணுமெனில் : செப்பிடுவேன் கேளு
தலைதனைநீர் வெட்டுமந்த : தருணமதி லாத்துமங்கள்
நிலையாம லிங்கிருக்கும் : நீசச்ச டலமெனும்.
உடையைக்க ளைந்தெறிந்து : உன்னதவான் மோக்ஷமதை
அடுத்தேகும் வேளையிலே : அண்ணார்ந்து பார்த்துநின்றால்.
மாசில்லா வாத்துமத்தின் : மகிமைப்ர தாபமதை
நேசகனே கண்குளிர : நேர்முகமாய்க் கண்டிடுவீர்.

அல்லாம லிப்போகாம் : ஆயிரமு ரைத்தாலும்
எல்லாம்வீ ணாகுமையா : எம்மினிய சேர்வையரே."
என்றமொழி கேட்டவுடன் : இச்சேர்வைக் காரனவன்
நின்றபடி வானமதை : நேராக நோக்கியப்போ.
நெஞ்சம்ப தைபதைத்து : நேசக்கண் ணீருதிர்த்து
கொஞ்சமெனு மஞ்சாமல் : கூவியவன் சொல்லுகிறான்.
"ஐயாவே! நீருரைத்த : அந்தவடை யாளமதை
வையகத்தி லென்னிருகண் : வண்மையுடன் கண்டுவிட்டால்.
அப்பொழுதே நான்தொழுவும் : அலகைகளை யொப்புர
துப்பித்து லேத்துவிட்டு : தூயபரன் மாமறையை. [வாய்
சேர்ந்திடுவே" னென்றுமிக : தேர்ந்தசப தங்கூறி
கூர்ந்தவாள் தொட்டதனை : குணவாளன் முத்தமிட்டு.
சத்தியங்கள் செய்துடனே : சலசலென வோசையெழ
வைத்துச்சொ ருகிவிட்டான் : வாளையு ரைதனிலே.
போற்றரிய தங்கையரே! : பூதலத்தி லத்தினமே
நாற்றிசையு மேசிவக்க : நாகமதில் சூரியனும்.
மளமளென மேற்கடலில் : மறைந்திடவே மக்ஸீமன்
வளமாக நின்றிருந்த : வாள்வீர சேவகரை.
ஒன்றாகச் சேர்த்தழைத்து : ஓசையெழச் சொல்லுகிறான்
"இன்றிந்த வேலைதனை : இயற்றமுடி யாதெனக்கு.
நேரமிக வாச்சுதிந்த : நிறையம்மா வாசையிலே
கோரவதை நாம்புரியக் : கூடாது வாகையினால்.
துடிபிடியென் றின்றுதினம் : துவக்கினதை நாளையன்று
எடுத்துமு டித்திடலாம்" : என்றுரைத்து முன்னடக்க.
பாதகர்போ லவ்விடத்தில் : பரிவாக நின்றவிரு
கோதிலரைச் சூழ்ந்துமற்ற : கொடுங்கோலர் பின்றுடர.
மும்முரமா யெல்லோரும் : மூடியவி ருள்தனிலே
வம்பின்றி யேதிரும்பி : வந்தார்ரோ மாபுரிக்கு.

---

# 20-வது அத்தியாயம்.

## இணைபிரியா வேதசாட்சிகள்.

அந்தசுப சேதிதனை : அறிந்தசெ சீலியம்மாள்
சுந்திரவா ணண்டவனை : தோத்தரித்து வாழ்த்தியபின்.

உள்ளங்க ளுருகி : உத்தமியாள் தானழுது
கள்ளங்க படமில்லா : கன்னிகையுஞ் சொல்லுகிறாள்.

'உயிரான நாதனையும் : உற்றகொ ழுந்தனையும்
நயமாய்ம றுமுறையில் : நான்காணச் செய்தபரி.

சுத்ததி ரித்துவமே! : சோதியே வுந்தனுக்கு
நித்தியமா தோத்திரங்கள் : நீள்புவியி லுண்டாக.!'

என்றுதொழு தேற்றியந்த : ஏந்திழையா ளாத்திரமாய்
கன்றதுபோல் துள்ளியந்த : கனவிருளி லேநடந்து.

கற்றக்கோ மென்னுமந்த : கருஞ்சுரங்க முள்ளிறங்கி
உற்றகுண வாளமுனி : ஊர்பான்மேற் றிராணியனை.

கட்டிப்பி டித்தழுது : கட்டழுகி தான்வீழ்ந்து
திட்டமாய் நேர்ந்தபல : சேதிகளைச் சொல்லிடவே.

சித்தமகிழ் கொண்டவந்த : சீலகுண வாண்டவனர்
"உத்தமியே" யென்றழைத்து : "ஓடிவந்த காரணத்தை.

ஓதினதா லம்மணிநீ : உன்மனம்போ லாக்கமிரும்
நீதனுகா வேதியனை : தீவிரமாய்த் தானழைத்து.

போகலா" மென்றவரும் : புகலவே யெல்லோரும்
வேகமாய் வந்தார்கள் : வீண்பொழுது போக்காமல்.

வந்தவர்கள் நேராக : மாசேர்வை மாக்ஸீமின்
சுந்திரம ணையணுகி : சூக்ஷமாய்ப் பார்க்கையிலே.

இளைத்தமுக மும்மலர்ந்து : இன்பமதில் மூழ்கினளாய்
களைத்தமுக மும்குளிர : கனதுயரம் நீங்கினளாய்.

தேகம்ப ரவசமாய் : தேன்மொழியாள் நின்றிருக்க
மேகமதி போல்வதனம் : மின்னித்து லங்குதம்மா.
சந்திரவ டிவிலங்கும் : தாரகையாம் பொற்கொடியின்
அந்தமிகும் மாமுகத்தை : அவ்விருவர் கண்டிடவே.
பானுருவைக் கண்டசிறு : படர்தாம ரைமலர்போல்
தீனதயா ளக்குணராம் : தேட்டாளர் தாமகிழ்ந்து.
சந்தோஷத் தாலழுது : சாந்தமுட னவ்விருவர்
வந்தகுரு மார்களுக்கும் : வான்மதிசெ சிலியர்க்கும்.
ஓதிடவே சங்கதியை : ஓடிவந்த சற்குருக்கள்
பாதியிர வென்றுமவர் : பாராம லக்கணமே.
வெளிப்படையா யங்கவர்க்கு : வேதமதை யோதிடவே
களித்தமன தோடுவெகு : கவனமாய்க் கேட்டுவந்த.
மக்ஸீமு மன்னவனின் : மனைவிமக்கள் மற்றோரும்
மிக்கபரி சுத்தமுள்ள : மெய்மறையின் சத்தியத்தால்.
தக்கபுத்தி கொண்டவராய் : தங்கள்க ரமுயர்த்தி
துக்கமிக வேயழுது : சொல்லுகிறு "ரெம்மினிய.
வேதியரே ! மாமுகில்கள் : மேகமழை பெய்வதுபோல்
மேதினியில் நாம்பிழைத்து : மேலுலகி லோங்கிடவே.
சொல்லியநற் புத்தியெல்லாம் : சுத்தப்ப சுமரத்தில்
கொல்லனிருப் பாணிதனைக் : கொண்டறைந்த வாரதுபோல்.
மனதிலே தைத்ததினுல் : மானிலத்தி லிக்காலம்
கனமான தெய்வமென : கைதொழுத பேய்களையும்.
வினையில்லா வேதியரே ! : வித்தகரே நாங்களிந்த
தினமேப சாசையுமத் : தீக்கிரியை யத்தனையும்.
விட்டொழித்தோ மாகையினுல் : விரைவிலே யெங்களுக்கு
மட்டில்லா தீக்ஷதனை : மனமகிழ்ந்து தாரு" மென.
கெஞ்சியவர் மன்றுடிக் : கேட்டிடவே யக்குருக்கள்
கொஞ்சுமொழி யோடளித்தார் : குணஞான தீக்ஷதனை.

அப்பொழுதே தீக்ஷைபெற்ற : அனைவோரு மார்ப்பரித்து
ஒப்பில்லா வேதாந்த : உருவிலனைத் தோத்தரித்து.
பாக்கியரா யெல்லோரும் : பங்கமின்றி யவ்விரவை
போக்கினர் தங்கையரே ! : பொழுதும்வி டிந்ததம்மா.
உத்தமனை வாழ்த்திமிக : உயர்சோப னமுனைக்க
இத்தரையி னுத்தமர்கள் : எவருமில்லை யென்பதுபோல்.
மெய்யான சுத்தர்களை : மேதினியில் முத்தமிட
வெய்யோனும் கீழ்த்திசையில் : வேகமாய் வந்துதித்தான்.
அப்போசெ லீயம்மன் : ஆருத்து யரடைந்து
குப்புறவே வீழ்ந்தழுது : கூறியநாள் வந்ததென.
கூந்தல விழ்ந்துவிழ : கூச்சலின்றி மார்பறைந்து
காந்தம்பி டிப்பதுபோல் : கட்டழகி பூமியிலே.
வீழ்ந்தழுது மெய்வாடி : வேசாரி சோபமுற்று
ஆழ்ந்தகுர லோசையுடன் : அழுதழுது சொல்லுகிருள்.
'என்செய்வே னுண்டவரே : என்னுடனே யென்னுயிர்போல்
அன்புடனே யெப்பொழுதும் : அகமகிழ்வோ டேயிருந்த.
அருணமுக செல்வர்களை : ஆதனையி லேபிரிய
தருணமுந்தா னுச்சேயென் : தற்பரனே, யென்றிறைஞ்சி.
கூவியழுங் கூக்குரலிக் : குணவாளர் காதில்விழ
ஆவிபிரிந் திட்டவர்போல் : அன்னோர்து யரடைந்தும்.
துக்கமதை யுள்ளடக்கி : தூயகற்ச கோதரர்கள்
மக்ஸீம னையணுகி : மாவாஞ்சை யோடழைத்து.
சொல்லுகிறு "ரெம்மினிய : தூயகுண வுத்தமனே !
அல்மாக்கி யூஸரசன் : அன்றளித்த கட்டளையை.
இன்றுநிறை வேற்றிடவே : எழுந்திடுவ தன்றியும்நீர்
நின்றபடி யேசென்ற : நிறையம்மா வாசையிலே.
சொன்னவுந்தன் வாக்கதுபோல் : யூப்பிற்றர் கோவிலுக்கு
வின்னமில்லா வெங்களைநீர் : விரைவிலழைத் தேகுமண்ணு."

என்றவர்கள் சொல்லாமுன் : என்பிரிய தங்கையரே !
நின்றிருந்த வெல்லோரும் : நீண்டபனை போல்விழுந்து.
குஞ்சரங்கள் போலபெரும் : குரலோசை யோடவர்கள்
சஞ்சலத்துள் மூழ்கினராய் : சகலருமே நின்றமுக.
அற்பக்க ளங்கமில்லா : அவ்விருச கோதரர்கள்
கற்புநிறை யுத்தமியாள் : கன்னிஜெய சீலியரின்.
ஒப்புயர்வே தில்லாத : உன்னதபொற் பாதமதில்
குப்பெனவே வீழ்ந்தழுது : கும்பிட்டுச் சொல்லுகிறார்.
" மாசில்லாக் கன்னிகையே ! : மாமயிலே யெங்களுக்காய்
காசினியில் நீரடைந்த : கணக்கில்லாப் பாடுகளை.
உம்மனதில் வையாமல் : உயர்மோக்ஷ வானுலகில்
செம்மையாய்ச் சேர்ந்திலங்க : சீக்கிரம னுப்பிடம்மா.
போனவுட னுமிருவர் : புகழ்சோப னங்களுடன்
தேனமுதே வுந்தனுக்காய் : தேவனிடம் வேண்டிடுவோம்.
நின்மலப ரஞ்சுதனர் : நேசமிகும் பேராலே
உன்மலர்த்தாள் வேண்டுகிறோம் : உத்தாரம் தாருமம்மா."
என்றுவிடை கேட்டெழுந்து : இன்னுமங்கே கண்கலங்கி
நின்றுருகுஞ் சத்தியமா : நேசகுரு மாரவரின்.
ஆசீர்மி கவடைந்து : அன்னோர்பு றப்படவே
நேசகுண மாதாசி : நேரமுந்தா னுச்சுதென்று.
முத்தாய்க்கண் ணீருதிர்த்து : முகமெல்லாம் சோரவிட்டு
உத்தமியும் சொல்லுகிறாள் : " ஓதரிய வீரர்களே. !
புண்ணியரே ! வும்மையிந்த : பூதலத்தி லென்னுடைய
கண்களினல் கண்டுமிக : களிப்புறுவ தெக்காலம். ?
தீக்ஷதனை மாமகிழ்வாய் : சீலமுடன் பெற்றகுண
மாக்ஷிநிறை யுத்தமரே ! : மானிலத்தை விட்டகன்று.
சீர்பெருகும் மோக்ஷமதின் : சிறந்தவி ருதுடனே
போர்புரிப்ப் போகின்றீர் : பொழுதுவிடி யாமுன்னே.

அளவில்லாப் பேரின்ப : அருண்மோக்ஷ வாழ்வுதனை
வளமாக வேயடைந்து : வாழ்ந்திடப்போ கின்றீரோ.?
தங்ககுண வாளர்களே ! : தர்மப்பி ரபுக்களே !
உங்களிரு பேர்களையும் : உன்னதப ரன்கரத்தில்.
ஒப்படைத்தே" னென்றுசொல்லி : உருண்டுபு ரண்டழுது
அப்புறமும் சொல்லுகிறாள் : "ஆவிதான் போமளவும்.
என்றென்றும் மாறுபடா : இன்பப்ப ரகதியில்
ஒன்றாய்நீர் வாழ்வடைய : ஊக்கமுட னும்மூபினா.
கொடுத்திடுங்க ளின்னமும்நான் : கொஞ்சநாட் குள்ளாக
அடுத்தேகி வந்திடுவேன் : ஆகையினால் மூவுலக.
சேசுவெனும் ராசனுக்காய் : சேர்ந்திருவ ரொற்றுமையாய்
நேசவுயிர் தந்திறந்து : நீடூழி வாழ்ந்திடுங்கள்.
பெண்ணான வெந்தனைநீர் : பிரிந்தகன்று போவதினால்
கண்ணான செல்வர்களே ! : கனதுயரங் கொள்ளாதீர்.
மண்ணில்நீர் கண்டவெந்தன் : மாக்ஷிநிறை சம்மனசை
கண்ணொளிகள் மின்னிடவே : காண்பீர்கள் வானுலகில்.
அவரோடென் சங்கதிகள் : அத்தனையும் சொல்லிடுங்கள்
தவறும லித்தினமே : தாவியவர் வந்திடுவார்.
ஆதரவு மற்றசிறு : அகதிபோல் நானிருக்கும்
சேதிதனைச் சொல்லிடுங்கள் : தேடியவர் வந்திடுவார்."
என்றுபல தேறுதலை : இயம்பியபின் கண்மணியாள்
நின்றிருந்த நேசர்களை : நீள்கரத்தா லேயணைத்து.
மாசிலரின் மார்பினிலே : மாகனிவாய் முத்தமிட்டு
ஆசிமிகக் கூறியவள் : அனுப்புமந்த வேளையிலே.
நின்றழுது கொண்டிருந்த : நேர்மைகுண புண்ணியர்கள்
நன்றியுள்ள நாயகியின் : நற்பதத்தை முத்தமிட்டு.
புறப்பட்டா ரம்மம்மா : புத்தியுள்ள தங்கையரே !
சிறப்பாக வப்பொழுதே : சீர்மனையை விட்டகன்று.

அப்பியா விதிதனை : அரைநொடியி லேகடந்து
செப்பவே மூன்றுமைல் : தீவிரமாய்த் தான்நடந்து.
கூசாமல் யூப்பிற்றர் : கோவிலதை நாடிடவே
பூசாரிப் பேயனவன் : புகைகிளம்பும் தூபமதை.
கொண்டுவரச் சொல்லியிரு : குணவாளர் கைகொடுக்க
மண்டலம்பு றண்டாலும் : மானிலத்தி லித்தகைய.
பாதகச்செ யலதைநாம் : பரிச்சேதம் செய்யோமென்
றோதித்த டுத்திடவே : ரோசமுள்ள பூசாரி.
மேலுங்கீ ழும்விழித்து : மெல்லவமைத் தோதிடுவான்
“ வாலர்களே ! வாழியுங்கள் : வளமான புத்திதனை.
பறக்கடித்து விட்டீரோ : பாரிலுங்கள் ஜீவனின்மேல்
இரக்கமுட னேயிருங்கள் : இல்லாவிட் டால்நொடியில்.
சாவீர்க ளென்றறிந்து : தக்கவினத் தார்களுக்கு
ஓவியசா வோலைதனை : உடனேய னுப்பிடுங்கள்.”
என்றந்த பாதகனும் : இழிவாகப் பேசுகையில்
நின்றுகொண்டி ருக்குமந்த : நேசரிரு புண்ணியர்கள்.
“ தாறுமாறுப் பேசிடவும் : தருணமிது தானோடா
கூறுவதா லென்னபலன் : கோவில்பூ சாரியேநீ.
பேயனே யானதினால் : பீற்றவுட லைவளர்க்க
நேயமில்லா காரியத்தை : நாடியெமைச் செய்யுமென.
சொல்லுகிறு” யென்றுவெகு : துணிதலா யவ்விருவர்
கல்லுங்க றைந்துருக : கலகலென வேயழுது.
சுந்திர ரிருவர்களும் : சொல்லரிய பேரின்ப
சந்தோஷ சாகரத்தில் : சாடியதில் மூழ்கினராய்.
முத்தியெனும் வான்நோக்கி : முழங்காலி லேயிருந்து
கத்திவெட்டுக் காயவர்கள் : காத்திருக்கும் வேளையிலே.
பூசாரி யாகுமந்த : புத்தமதப் பேயனவன்
வேசாரி யேயுரைப்பான் : வேலையற்ற பித்தனைப்போல்.

"சேவகரே! நீங்களொரு : சணப்பொழுதி லிந்தவிரு
பாவிகளா னோர்தலையை : பற்றறவே வெட்டியதை.
தேவர்களுக் கேபலியாய் : சேர்த்திடுங்க" ளென்றுரைக்க
சேவகரும் தீக்ஷைபெற்ற : சேர்வைபந்த மக்ஸீமும்.

தாலமிசை யெங்களரும் : தலைதான்சி தரிடினும்
தோலோதோ விந்தவித : துற்கிரியை யானதற்கு.
உட்படமாட் டோமெனவே : ஊக்கமுட னேமறுக்க
சட்டெனவே கோபமுற்ற : சாம்பலணி பூசாரி.

மடமடென வோடியங்கு : மறைவிலே நின்றிருந்த
குடிகார பாதகனை : கூப்பிட்ட ழைத்துவந்து.
இந்தவா ளேந்தியிந்த : இருவர்தலை வெட்டுபணம்
தந்திடுவே னென்றவனை : தட்டிக்கொ டுத்திடவே.

சீரழிந்த சண்டாளன் : சிந்தனையே தில்லாமல்
கூரழிந்த வாளதனை : குணக்கேடன் கைபிடித்து.
தேவுலக வானவர்போல் : தேகம்ப ரவசமாய்
சாவையெதிர் பார்த்தவண்ணம் : தாவிமுழங் காலிருந்து.

வானுலகை நோக்கினராய் : வல்லவனைப் போற்றிசெய்யும்
தேனமுதச் செல்வர்களின் : திருமுகத்தைப் பாராமல்.
கோரவதை செய்யவந்த : கொடுங்கோல னோர்நொடியில்
வீரவாளைப் பிடித்து : வேகமாய் வீசிடவே.

ஐயையோ நேசர்களே! : அழகுசிர மவ்விரண்டும்
மெய்யாகப் பூமியிலே : வீழ்ந்துருண்டு வோடுதம்மா.
பாவியிவர் பால்முகத்தை : பார்த்தாலும் போதுமேடா
பூவிலிந்த கோரவதை : புரியமனம் கொண்டாயோ?

பாதகனைக் கண்ணாலே : பார்த்துமறி யாதவனா
மேதினியி லிக்கொடிய : வீரவதை செய்தானே.
ஆதன்கு லத்துதித்த : அன்னைதங்கை யன்பர்களே!
ஓதிடவு மென்னுடலம் : ஓய்ந்தயர்ந்து போகுதம்மா.

பஞ்சமாப் பாதகனிப் : படுங்கொலையைச் செய்தவுடன்
நஞ்சுடமை தானறிந்த : நாகம்ம றைவதுபோல்.
எங்கொழிந்து போயினனோ : என்பிரிய நேசர்களே!
மங்கிமனம் வாடுதம்மா : மற்றதையும் சொல்லிடவே.
சொல்லுவதைக் கேட்டுவிட்டு : துயரமுற்று சோருவதில்
இல்லையம்மா வோர்பலனும் : இன்னுமுள்ள சங்கதியை.
ஓதிடுவே னதையினால் : ஓதரிய வாதையுற்ற
கோதிலரின் பாடுகளில் : குறைவில்லாப் பங்கடைய.
வேணுமெனி லெல்லோரும் : வீழ்ந்துமுழங் காலிருந்து
நாணமல் வேண்டிடுங்கள் : நல்வரங்கள் நீரடைவீர்.
நெஞ்சிரக்க மில்லாத : நிஷ்டூரப் பேயனவன்
கொஞ்சமெனு மஞ்சாமல் : கோரமாய் வெட்டுகையில்.
சேசுவே யென்றவர்கள் : சொன்னதல்லால் வேறொதையும்
நேசரவர் சொல்லிடவும் : நேரமில்லை யன்னையரே.
தலைதானு ருளுதென்றால் : தாவிச்சு ழன்றுவரும்
அலைகள்பு றள்வதுபோல் : அந்தமிகும் நேசருடல்.
நிலைக்காம லம்மம்மா : நீண்டுசு றுண்டுருண்டு [போல்.
அலைக்கழியு தன்னையரே : அறுத்துவிட்ட கோழியைப்
துள்ளித்து டிக்கையிலே : சுத்தருடல் ரொத்தமெல்லாம்
அள்ளியிறைத் திட்டதுபோல் : அங்கமதில் தங்காமல்.
பொங்கிவடிந் தோடிடவே : புண்ணியர்தி ருவுடலம்
செங்குருதி வாரிதனில் : சேர்ந்துமிதந் தாடுதம்மா.
சொன்னமொழி கேட்டழுது : சுரும்புபோ லேயிறையும்
கன்னல்மொழி தங்கையரே! : காணரிய வித்துயரை.
கண்களினால் கண்டதுபோல் : கருத்தில்ப தியவைத்து
மண்ணில்நீ ருள்ளளவும் : மாசிலராய் வாழ்ந்திடுங்கள்.
இரண்டுமணி நேரமதாய் : இரண்டுடல மொன்றாக [லாம்.
புரண்டுருண்டு கொண்டிருந்த : போராட்டத் துன்பமெல்

பொக்கெனவே தானமர : போர்ச்சேர்வை மக்ஸீமன்
துக்கமது தாளாமல் : சோர்ந்துமுழந் தாளிருந்து.
ஆராய்க்கண் ணீரொழுக : அண்ணார்ந்து பார்க்கையிலே
நேராய்த்தி றந்திருக்கும் : நித்தியமா மோக்ஷமதில்.
எண்ணில்லா வானவர்கள் : இருப்பதையு மின்னுமிந்த
மண்ணுலகில் தன்கையால் : மாண்டபரி சுத்தர்களும்.
வாலர்களும் கன்னியரும் : வைரமணி கோர்த்ததுபோல்
மேலுலகி லேதிரண்டு : மின்னித்து லங்குவதும்.
அவரவ ரடைந்ததுயர் : அத்தனையும் நீங்கியங்கு
நவரத்ன மேடைகளில் : நகநகென வீற்றிருக்க.
களங்கமற்ப மில்லாத : காந்திமுக வானவர்கள்
தளந்தளமாய் சூழ்ந்துகொண்டு : சற்சனரை வாழ்த்துவதும்.
பன்னரிய வேதியரும் : பற்பலமா நீதியரும்
உன்னதமா யந்தமிரும் : உயர்மோக்ஷ வானுலகில்.
ஓர்திரளாய்ச் சூழ்ந்துநின்று : உன்னததி ரித்துவத்தை
நேர்முகமாய்க் கண்டுவெகு : நியமமுடன் போற்றுவதை.
பரவசங் கொண்டவனாய் : பார்க்குமந்த வேளையிலே
ஒருகோடி சூரியர்கள் : ஒன்றாயு தித்ததுபோல்.
உலகதனி லெங்குமில்லா : உயர்சுடரா மேலணியாய்
நிலவரமாய்க் கொண்டிரு : நேசச கோதரரின்.
ஆத்துமங்கள் தோன்றுவதும் : அதைச்சூழ வெண்ணடங்
வாத்தியங்க ளோடுபல : வானவரு மோர்திரளாய். [கா
மங்களங்கள் பாடியந்த : மாசிலரைப் போற்றிசெய்து
திங்களொளி வீசவெகு : தீவிரமா யெல்லோரும்.
மோக்ஷமதை நாடிடவே : முகிலேக்க டந்தேகும்
காக்ஷிதனைக் கண்டவிந்த : கனசேர்வைக் காரனவன்.
ஆச்சரியங் கொண்டவனாய் : அங்கம்ப தைபதைத்து
பேச்சுமறி யாதசிறு : பிள்ளையைப்போ லேயழுது.

சொல்லுகிறு 'ஞேதரிய : சோதித்தி ரித்துவமே!
தொல்லுலகி லுந்தனுக்கே : தோத்திரங்க ளுண்டாக!
இத்தனையி லுள்ளளவும் : எந்தன்விசு வாசமது
தத்தளித்துச் சோராமல் : தற்பரனே நீருவி.
சமுத்திரத்தை நாடிடவே : தாமதியா தோடுதல்போல்
சமுத்திரையாய்ப் பேரின்ப : சுகிர்தபர லோகமதின்.
பாக்கியத்தை நாடிடவே : பதைத்துருகு மெந்தனைநீர்
சீக்கிரமாய் வானுலகம் : சேர்த்திடுவீ' ரென்றிறைஞ்சி.
பட்டயம ணிந்தவந்த : பார்புகழும் சேர்வையவன்
கட்டாந்த ரைதனிலே : கலகலத்து வீழ்ந்துவிட்டான்.
உத்தமகி றீஸ்துவரொன் : ருேதமனம் நாணுகின்ற
புத்தியில்லாப் பேதையரோ : புதுமைதனைக் கேட்டிரோ.
ஆயிரமோ டாயிரமாய் : அவனிதனில் கொன்றழித்த
நேயமில்லா சேர்வையவன் : நிமைப்பொழுதில் மாறினதை.
தேனுண்ட வண்டினம்போல் : சிந்தைதடு மாறினராய்
வானுலகைப் பார்த்தவண்ணம் : வாடியங்கு வீழ்ந்திருக்கும்.
போர்ச்சேர்வைக் காரனென்னும் : போற்றறிய மாக்ஸீமை
கோர்வையாய் நின்றிருந்த : கூறரிய சேவகர்கள்.
ஆற்றியு பசரித்து : ஆறுதல்கள் சொல்லியவர்
தேற்றித்தி டனளித்து : தீவிரமா யெல்லோரும்.
புண்ணியர்கள் தாமரித்த : புகழ்பெரிய சேதிதனை
விண்ணுலக வானவரின் : வினையில்லாத் தங்கையிடம்.
ஓடியவ ரோதிடவே : உத்தமசெ சிலியம்மன்
வாடிவதைந் தக்கணமே : வல்லவனைத் தோத்தரித்து.
கன்றிழந்த தாயதைப்போல் : கதறியழு தோடியவள்
நன்றியுள்ள வாண்டவர்க்கும் : நன்மைகுரு மார்களுக்கும்.
சங்கதியைச் சொல்லிடவே : தாமதியா தங்கவர்கள்
மங்களஞ்சேர் ராக்கினியாள் : மனமகிழ வக்கணமே.

தந்திரமா யோடிசிலர் : தகுந்தமரி யாதையுடன்
விந்தைமிக வுற்றிறந்த : நிகரில்லா நேசர்களின்.

திருவுடலைக் கொண்டுவந்து : சீலமுறை யோடதனை
மருவில்லா வச்சிரக்கல் : வைத்திழைத்த பெட்டியினுள்.

பந்தனமாய் வைத்தடைத்து : பகலோன்ம றையுமுன்னே
அந்தமிகு மக்குருக்கள் : அவ்வுடலைத் தாம்சுமந்து.

கட்டக்கோ மென்னுமந்த : கருஞ்சுரங்க மானதிலே
திட்டமுடன் வைத்தடக்கி : திரும்பினர் செல்வியரே.

---

## 21-வது அத்தியாயம்.

### மக்ஸீமன் வேதசாக்ஷி.

நேர்மைகுண தங்கையரே ! : நேர்ந்தவிந்த சம்பவத்தை
கூர்மையாய்ப் பார்த்திருந்த : குணக்கேட ரானசிலர்.

அல்மாக்கி யூஸனெனும் : அறிவழிந்த பேயனிடம்
சொல்லிடவே நீதியில்லா : சுணங்கன்ப டபடென.

மீசைது டிதுடித்து : மேலுங்கீ ழும்விழித்து
ஓசையெழக் கத்தியவன் : உதடைக்க டித்துமிழ்ந்து.

நேத்திரங்க ளானதிலே : நெருப்புப்பொ றிபறக்க
சித்துப்பூத் தென்றலறி : சினந்துமனம் பேதலித்து.

துப்பற்ற பேயனவன் : சூதாக வேசிரித்து
அப்பொழுதே பன்னிரண்டு : அலகைமுகச் சேவகரை.

ஏவியவ ருக்குரைப்பான் : “ என்பிரிய சேவகரே !
பாவியந்த மக்ஸீமன் : பாரினிலே வேதமதை.

பற்றின னென்றெனக்கு : பலஜனங்கள் சொல்லுவதால்
அற்பமதி கொண்டவந்த : அறிவீனப் பாதகனை.

நண்டபிண்ட லாய்ச்சிதைத்து : நான்கொடுக்குங் கட்டளை [போல்
கண்டுபிடித் தன்னவனின் : கால்கரங்கள் கட்டியபின்.

நிர்வாண மாய்க்கிடத்தி : நிணைவழிந்த பாதகனின்
கர்வமத டங்குமட்டும் : கனவுதிர மோடிடவே.

ஈயமணிச் சாட்டையினுல் : ஈவிரக்க மின்றியங்கம்
பீய்ந்துதெறித் தோடிவிழ : பிரிந்தடியு" மென்றுரைக்க.

"அவ்வாறே செய்திடுவோம் : ஆண்டவனே" யென்றவர்
செவ்வுதிரம் பாய்ந்தொழுக : சேர்ந்தவா டித்ததினுல். [கள்

மங்கையரே! தங்ககுண : மக்ஸீம னங்கமெல்லாம்
பங்குபங்கா கக்கிழிந்து : பாத்திகள்போ லேபிளந்து.

காணுமந்த வேளையிலும் : கனசூர வீரனவர்
நாணமில்லா சேவகரை : நாட்டமுட னேயழைத்து.

சொல்லுகிறு "ரன்பர்களே! : சூழ்புவியி லுங்களைப்போல்
நல்லசரு வேசுரனை : நானிகழ்ந்து நாசமிகும்.

சூழ்நரகப் பேய்களையே : கூசாமல் கைதொழுது
வழிநடத்தும் தெய்வமென : வாழ்த்திவந்தே னித்தரையில்.

பூதலத்தி லெத்தனைதான் : புகழ்பெறவே வாழ்ந்திடினும்
ஆதிசரு வேசுரனின் : அக்ஷயமா மெய்மறையின்.

தீக்ஷையில்லா தீயனுக்கு : தீநரகே வாய்க்குமன்றி
மோக்ஷமில்லை யென்றுணர்ந்து : மோனபரா னவரின்.

போதகத்தை யேற்றுகன : புகழ்ஞான தீக்ஷைபெற்று
தீதிலராய் வாழ்ந்திறந்து : திருநகரம் சேர்ந்திடுங்கள்.

எத்தனைதான் மேட்டிமையாய் : இகமதனில் வாழ்ந்தாலும்
உத்தமரே! வானுலகில் : ஓர்பலனு மில்லையப்பா.

உங்களைப்போல் நானுமிந்த : உலகிலே யென்காரத்தால்
சங்கையின்றி கொன்றழித்த : சனங்கள்கணக் கில்லையையா.

துகையில்லா வத்தகைய : சுத்தகுண வாளரெல்லாம்
நகநகென வானுலகில் : நன்மைநிறை பாக்கியராய்.
போற்றரிய வானபரன் : புகழ்மோக்ஷ ராக்ஷியத்தில்
வீற்றிருக்கக் கண்டேனென் : வீரர்களே சூரர்களே. !
எந்தனைப்போல் சண்டாளன் : இவ்வுலகி லில்லையென்று
சுந்திரமா வீரர்களே ! : சொல்லாம லேயறிவீர்."
என்றுபல போதனையை : இவருரைக்கும் வேளையிலே
நன்றிகெட்ட பாதகர்கள் : நாகம்போல் மேல்விழுந்து.
கைசோரா தேயவர்கள் : கனகோர மாயடிக்க
மெய்சோர்ந்து நாவறண்டு : மேலுலகை நோக்கியவர்.
"வையகத்து மானிடரை : வானுலகில் சேர்த்திடவே
கைவிரித்துப் பாடுபட்ட : காணரிய ரெக்ஷகனே.
மெய்வருந்தி நான்மடிய : மேதினியி லிக்கொடியர்
செய்யுமிந்த பாதகத்தை : தெரியாமல் செய்வதினால்.
திரித்துவத்தி லொன்றான : தேவமரி பாலகனே ! [மூது.
பொறுத்தருளு மாண்டவனே : புண்ணியனே" யென்ற
வேண்டுமந்த வேளையிலும் : வேதாள மானவர்கள்
மீண்டுமதி வேகமுடன் : மீளாம லேயடிக்க.
பெருத்தவுட லங்கமதில் : புறண்டோடும் நீர்ச்சுனைபோல்
இரத்தம்பெ ருகிடவே : இங்கிதமார் பும்பிளக்க.
சிறப்பாக வாழ்ந்திருந்த : செல்வன்வ யிர்கிழிந்து
திறக்கவே நீள்குடல்கள் : சேர்ந்துநெ ளிந்துவிழ.
கூறரிய வாதைகளை : கொடுங்கோலர் செய்கையிலே
பேரரிய மாக்ஸீமன் : பேதலித்து வாடிமனம்.
சோராமல் போர்வீர : சூரனவர் சற்றேனும்
மாறுத்தி டமுடனே : வானுலகை நோக்கினராய்.
உயிர்பிரியு மட்டுமவர் : உள்ளபல வாதைகளை
அயராம லேசகித்து : அந்தியகா லந்தனிலே.

"மாசில்லாக் கன்னிமரி : மாசுதனே ! மானிடர்க்காய்
நேசவுயிர் தந்திறந்த : நித்தியப்ப ரஞ்சுடரே. !
இன்றெந்த னாத்துமத்தை : எழில்பாதத்தில் சேர்த்தருளும்"
என்றுயிர்விட் டக்கணமே : ஏகினார் வானுலகம்.
தங்கையரே ! ஆலயத்தின் : தனிவிளக்கு மங்களமாய்
பங்கமின்றி யேஜொலித்து : பாரினில வணைவதுபோல்.
மக்ஸீமன் புண்ணியனார் : மரிக்குமந்த வேளையிலும்
துக்கமதால் வாடிமனம் : சோர்ந்தயர்ந்து போகாமல்.
மாணிக்கம் போல்துலங்கி : மானிலத்தை விட்டகன்று
ஆணிப்பொன் வானுலகை : அடைந்தாரென் தங்கையரே. !
மாசணுகா மாக்ஸீமன் : மரித்தவிந்த சேதிதனை
தேசுலவுங் கன்னிஜெப : சீலியம்மாள் கேள்வியுற்று.
அப்பொழுதே வீழ்ந்தழுது : அனல்மெழுகு போலுருகி
ஒப்புயர்வே தில்லாத : உருவிலனைத் தொத்தரித்து.
'ஆண்டவனே ! காணுமிந்த : அவனிதனி லும்மடியாள்
வேண்டியமன் றாட்டுகளை : விரைவிலே கேட்டதினால்.
மானிலத்தி லென்னருமை : மாசில்லாக் காதலனை
ஆனமுத லாம்பலனும் : அன்னவரின் தம்பியையோ.
கருணையுள்ள மாதேவ : கர்த்தாவே ! யிப்புவியில்
இரண்டாம்ப லியெனவே : இன்பமுட னேயளித்தேன்.
ஆதியந்த மில்லாவ : னாதியே யாண்டவனே
சோதிகிர மாதவனே : சுயம்புவே சொன்மயனே. !
ஆதரவோர்க் காயுதித்த : அன்னைமரி புத்திரனே !
ஓதரிய வீரகுணன் : உத்தமனிச் சேர்வையனே.
இத்தினத்தி லுந்தனுக்கே : இனியமூன் றாம்பலியாய்
சித்தமகிழ் வோடளிக்கும் : சீர்பலனைக் கையேற்று.
கொள்ளவே வேணு'மென்று : கோதில்லாள் தானிறைஞ்சி
தெள்ளமுதத் தங்கையவள் : தேறிமுழங் காலிருந்து.

வாரிதனில் மூழ்கினளாய் : வான்மதிபோ லேயெழுந்து
தேறிமன மக்களித்து : தீவிரமா யோடியந்த.

புண்ணியனார் மாக்ஸீமின் : பூஜிதச டலமதை
கண்களினால் கண்டுவெகு : கனதுயரங் கொண்டவளாய்.

பணங்கொடுத்து வாங்கிவெகு : பாசமுட னவ்வுடலை
வணங்கியவள் முத்தமிட்டு : வாசனைப்பட் டாடைகளால்.

பந்தனமாய் மூடியபின் : பகல்பொழுதி லேமரித்த
சுந்திரானா க்ஷேமித்த : சொர்ணமணிக் கல்லறையில்.

மருவில்லா வேதியரும் : மற்றவரும் சூழ்ந்திடவே
திருவடக்கம் செய்தபின்னே : திரும்பினாள் மாளிகைக்கு.

---

## 22-வது அத்தியாயம்.

### எதிர்கால சிந்தனை.

ஓதரிய கற்புநிறை : உயர்ந்ததிரு வாலயமாம்
மாதரசி தன்னுடைய : மாளிகைய டைந்தவுடன்.

தெய்வமதின் மாவருளால் : செய்தபல யோசனையை
கைதவஞ்சேர் தங்கையரே ! : கவனமாய்க் கேட்டிடுங்கள்.

'மயானமதைக் காத்திடுமோர் : மதியில்லா வெட்டியன்போல்
தயாளகுண மீகைதயை : சாந்தமெனும் புண்ணியத்தை.

கனவிலுமெண் ணாதவந்த : கடுங்கோர வன்மகுண
வினைகளுழும் சண்டாளன் : வீணலகைப் பேயரசன்.

திரவியங்கள் சேகரிக்கும் : தீயகுண வாசையினால்
ஒருவயிற்றி லேபிறந்து : உத்தமராய் வாழ்ந்திருந்த.

என்பிரிய நாதனையும் : இங்கிதகொ ழுந்தனையும்
நன்றியில்லாச் சண்டாளன் : நாட்டமுட னேர்கொடியில்.

வாட்டிமடித் திட்டதுபோல் : வாய்ப்பொழுதி லெந்தனையும்
கூட்டிலடை பட்டசிறு : குருவியைப்போ லேசிறையில்.
மெய்நோகப் பூட்டியவன் : மிகக்கொடுமை செய்வதிலோர்
ஐயமுமே யில்லையில்லை : ஆகையினு லிப்பொழுதே.
மேதினியி லென்னுடைய : மிகக்கோடி யாஸ்திகளை
ஆதுலருக் கேகொடுத்து : அகமகிழ்வே, னென்றுரைத்து-
சொன்னமொழி போல்நமது : சுத்தகுண நாயகியாள்
தன்பூமி காணியையும் : சாலரிய மாளிகையும்.
கால்நடைக ளானபல : கன்றுமா டாடுகளும்
சாலரிய மற்றுமுள்ள : சகலவித வாஸ்தியையும்.
சிலகுண மாதரசி : சிந்தைகளி கூர்ந்தவளாய்
தாலமிசை விற்றதனை : தகுபணம தாக்கியபின்.
வறுமையுடன் வாடுகின்ற : வண்மைக்கி றீஸ்துவரை
அருமையுட னேயழைத்து : அன்புடனு பசரித்து.
அங்கவர்ப தம்பணிந்து : ஆசையுட னோதிடுவாள்
“ சங்கைமிகு மென்னுடைய : சன்மார்க்க நேயர்களே !
இத்தரையி லுங்களைநான் : இன்பமுடன் விட்டிறந்து
அத்தன்ச முகமதை : அண்டிடவே போவதினுல்.
நேசர்களே ! யிவ்வுலகில் : நீங்களி ருக்குமட்டும்
சேசுவையே நம்பியுங்கள் : சிந்தைகளி கூர்ந்தெனக்காய்.
வேண்டிடுங்க ” ளென்றதுதான் : வீரிட்ட வர்களெல்லாம்
“ மாண்டிடவோ போகின்றீர் : மாசில்லா வன்னையரே !
அந்தமிகுஞ் சுந்தரியே ! : ஆதரையி லுந்தனையே [தோம்-
சொந்தவன்னை யென்றல்லோ : சொல்லிமகிழ் கொண்டிருந்
பஞ்சவர்ணப் பெண்கிளியே ! : பார்புகழும் விண்ணெளியே!
கஞ்சமலர் மாவதனக் : கன்னிகையே கண்மணியே !
தூயவுந்தி ருமுகத்தை : தூரத்தில் காண்கையிலே
ஆயாசம் நீங்கிவெகு : அக்களிப்பு கொள்வோமே.

பேரரிய கற்பகமே! : பிரபலஞ்சே ருற்பவமே!
கூறரிய தற்பரனின் : குணமதியே கோகிலமே!
ஐயமெனக் கேளாமுன் : அள்ளியிறைத் தேகுமிந்த
கைகளைநா மிப்புவியில் : காண்பதுவு மெக்காலம்?
உந்தன்தி ருமுகத்தை : ஊழியர்நாம் காண்கையிலே
சிந்தைகளி கூர்ந்துகன : செல்வர்களாய் வாழ்ந்தோமே.
குற்றமென்ன கண்டீரோ : குலசேக ரத்திருவே!
பற்றறவே யெங்களைநீர் : பாரினிலே விட்டகல.
ஐயையோ நாயகியே! : அன்னையில்லாப் பிள்ளைகள்போல்
மெய்சோர விட்டகல : வேண்டாம்வ னமயிலே!
எங்களைவிட் டுப்பிரியும் : இச்சேதி சொல்லிடவோ
சங்கையுட னேயழைத்தீர் : சாந்தகுண மாதரசே!"
என்றுசில பேரழுக : ஏகமாய் மற்றவர்கள்
நின்றிருந்த வுத்தமியின் : நீள்பதங்கள் முத்தமிட்டு.
"தாயாரே! நீமறைந்தால் : தாயிழந்த கன்றுகள்போல்
சேயர்களும் வாடிவெகு : சிறுமையுற வாகுமம்மா.
செம்பஞ்சு போன்றகன : திகழ்சேர்தி ருவுருவே!
அம்புவியை விட்டகல : ஆசைமனம் கொண்டாயோ?
மருவில்லா வீலியெனும் : மாமலரோ மாறுபடா [தோம்."
பருவதமென் றெண்ணியல்லோ : பாங்குடனே நாமிருந்
என்றவர்க ளோர்குரலாய் : ஏங்கியழும் வேளையிலே
நின்றிருந்த நாயகியாள் : நெஞ்சமபி ளந்தவளாய்.
தாழ்ச்சியே பெண்ணுருவாய் : சாகரத்தில் வந்ததென
சாக்ஷியம்ப கரவந்த : சம்மனசின் தங்கையவள்.
வாய்விட்ட ழுதலறி : வண்டுகள்போ லேயிணைந்து
மாய்ந்துருகும் நேயர்களை : மார்போட ணைத்தமர்த்தி.
"சொந்தவென்பி றவிகளே! : சோர்ந்துமனம் பேதலித்து
எந்தனுக்காய் நீங்களிப்போ : இத்துயரங் கொள்ளுவதேன்?"

காரணத்தைச் சொல்லிடுவேன் : கண்ணான நேயர்களே !
ஓராணுவும் பேதமின்றி : உரைத்திடுவேன் கேட்டிடுங்கள்.
வையகத்தை விட்டகன்று : வானுலகம் சேர்ந்தவெந்தன்
மெய்யான நாயகனை : மேதினியி லேவதைத்த.
அந்தகொடுங் கோலரசன் : ஆதனையி லெந்தனையும்
நிந்தையுற வாட்டிமிக : நிஷ்டூரஞ் செய்திடுவான்.
அல்லாம லென்னுடைய : அளவில்லா வாஸ்திகளை
பொல்லாத பாவியவன் : போராய்க்க வர்ந்திடுவான்.
ஆகவே நீங்களப்போ : அகமெலிந்து வாடாமல்
சாகுமுன்னே வுங்களுக்கென் : சகலவித வாஸ்தியையும்.
பிதிராட்ச வாஸ்திகளாய் : பிரித்தளிப்பே" னென்றுசொல்
அதிரூப நாயகியாள் : அக்கணமே யுள் நுழைந்து. [வி
மாணிக்கத் தாவடமும் : மணிகள்பல கோர்த்திழைத்த
ஆணிப்பொன் னுபரண : அலங்கார மார்பணியும்.
வஜ்ரமணி யாலிழைத்த : வண்மைமிகு பூஷணமும்
பச்சைகற்க ளாலிழைத்த : பாங்கொளிசேர் மாலைகளும்.
இன்னுமங்கே யுள்ளபல : இரத்தினக்கல் மோதிரமும்
வின்னமில்லா தங்கமய : விலையுயர்ந்த பாத்திரமும்.
அடுக்குகலை யாதிருந்த : அழகியபட் டாடைகளும்
உடுக்குந்து கிலனைத்தும் : ஒன்றும்விடா திவ்விதமாய்.
தன்னிடத்தி லுள்ளகன : சதகோடி யாஸ்திகளை
சொன்னபடி யவ்விடத்தில் : சூழ்ந்திருந்த யேழைகட்கு.
மாரிமலர் பெய்வதுபோல் : மாசில்லாள் கைகளினுல்
வாரியிறைத் தங்கவளை : வாழ்த்தியபின் முத்தமிட்டு.
பிள்ளைகளே ! "யென்னருமை : பிறவிகளே ! பூதலத்தில்
உள்ளளவும் புண்ணியராய் : ஊக்கமுட னேயிருந்து.
முன்னமேநான் சொன்னவந்த:மொழிப்படியே யெந்தனுக்கு
தின்மையொன் றும் நேராமல் : தீவிரமாய் வேண்டிடுங்கள்.

அன்றியும்நான் வானுலகில் : அனவரத மூங்களுக்காய்
என்றுமுள்ள தேவனிடம் : என்றென்றும் வேண்டிடுவேன்.
பாருலகி லுள்ளளவும் : பாக்கியராய் வாழ்வடைந்து
சீருலவு மோக்ஷநகர் : தீவிரமாய் வந்திடுங்கள்."
என்றுபல தேறுதலே : இதமாக வேயுரைக்க
நின்றிருந்த வெல்லோரும் : நீண்டகுர லோசையுடன்.
பல்லாண்டு வாழிசொல்லி : பாக்கியர்க ளாய்த்திரண்டு
எல்லோரும் தம்முடைய : இல்லிடங்கள் சென்றார்கள்.
அந்திசந்தி ராப்பகலாய் : அவியாத தீநரகின்
தந்திரப்பேய் சோதனையால் : தாலமிசை யுள்ளளவும்.
தங்கநகை மேலணிய : தாவியு மூண்டலையும்
சிங்கார மங்கையரே ! : சேதிதனைக் கேட்டீரோ.
அல்லனுறும் போரதற்கு : ஆயத்தஞ் செய்யுமொரு
மல்லகமா போர்வீரன் : மதியூக மாய்த்தலையை.
முழுமொட்டை யாய்சிறைத்து : முஸ்திப்பு செய்வதுபோல்
அழிநரகப் பேய்களையும் : அல்மாக்கி யூஸனையும்.
வெல்லவே வேணுமென்று : வெகுதீர வீரமுடன்
நல்லமல்ல வீரனைப்போல் : நாற்றிசையும் போற்றிடவே.
அம்புவியில் பெண்ணுருவாய் : அவதரித்த வுத்தமியாள்
தம்படியும் மீற்றதனை : தனக்கென்று வையாமல்.
உலகமதி ஞஸ்திகளை : உதறியே விட்டுவிட்டு
கலவரமொன் றில்லாமல் : கடைசியுத்தம் பண்ணுகிறாள்.
மாயவுல கானதுடன் : மாசில்லாள் போர்புரிய
ஆயத்தம் செய்துவரும் : அச்சமிகும் சேதிதனை.
ஓதரிய வென்பிரிய : உத்தமரே ! யெழுதலே
பாதகங்க ளோருருவாய் : பாரினிலு தித்ததுபோல்.
தொல்லுலகி லேபிறந்த : துஷ்டகொடுங் கோலரசன்
அல்மாக்கி யூசனிவன் : அறிந்துமனம் பேதலித்து.

அணிலைமர மேறவிட்டு : அலையுமொரு நாயதைப்போல்
துணிவுகுன்றி யேமாறி : சூதன்மனம் புண்ணுகி.
அதிவேக மாயெரியும் : அக்கினிபோல் கண்சிவக்க
மதிமயங்கி பேயனவன் : மறந்துவுத டைக்கடிக்க.
குப்பெனவே பொங்கிவந்த : கோரரொத்த மத்தனையும்
கொப்பளித்துத் துப்பியொரு : கோட்டானைப் போலுறுமி.
அர்ச்சிஷ்ட வன்னையனா : ஆகடியஞ் செய்யவெண்ணி
கொர்ச்சித்து டல்நடுங்க : கேவலனும் தன்விரலை.
மூக்கின்மேல் வைத்தழுத்தி : முணுமுணுத்து மூச்சடைய
ஆக்கிரோசம் பொங்கினனுய் : அவன்தனியே சொல்லு
'இந்நாளா யிப்பெரிய : இத்தாலி சீர்மையிலே [கிருன்.
என்னுலே மாண்டகணக் : கில்லாத மானிடரின்.
ஆஸ்திகளி லோரணுவும் : அசையாம லென்மனையின்
பூஸ்திதியா யாண்டுகொண்டு : பூரித்தி ருந்தவென்னை.
இஞ்சிதின்ற மர்க்கடம்போல் : என்வயிறெ றிந்திடவே
வஞ்சகமா யத்தனையும் : வாரியிறைத் திட்டனளோ?
ஏமாறி நானிருக்க : எண்ணில்லா வாஸ்திகளை
சோமாரி யாசகர்க்கு : சூறையிட்டு விட்டனளோ?
நல்லதிது நல்ல' தென்று : நாசக்கொ டுங்கோலன்
கல்லடிக ளுண்டமலை : கருநாகம் போலெழுந்து.
சற்றிரக்க மின்றியவன் : சாற்றுகிறு னப்பொழுதே
'சிற்றெறும்பு போன்றவிந்த : சிறுமியிவ ளெந்தனையே.
வஞ்சித்துத் தன்பொருளை : வாரியிறைத் திட்டதினுல்
நெஞ்சிரக்க மின்றியொரு : நிமைப்பொழுதி லேபிடித்து.
பற்றிப்பி சைந்துமென்று : பாதகியு டலமதை
குற்றுயிராய் வாட்டிமிக : கொடும்வதைகள் செய்யாமல்.
விட்டுவிட்டா லென்னையிந்த : மேதினியி லுள்ளபெண்கள்
கட்டைத்து டைப்பமென்று : காறியுமிழ்ந் தேசாரோ?

அல்லாம லின்னுமுள்ள : அற்பசொற்ப வாஸ்தியையும்
பொல்லாத நீலியவள் : பூமியில்பு தைத்திடுவாள்.
விந்தையென்ன விந்தையிந்த : வினையறியாப் பேதையிவள்
தந்திரமா யாஸ்திகளை : தானழித்து விட்டனளோ.
மண்டலத்தி லுள்ளவர்கள் : வாய்பொதிந்து கைகுவித்து
தெண்டனிட்டு சேவைசெய்யும் : தேசத்த திபதிநான்.
தண்டரசன் பேருரைத்தால் : தாரணியோர் மாமகிழ்வாய்
கண்டவுடன் வாழிசொல்லி : காதலுடன் போற்றுகிறார்.
அப்படியி ருக்கவிந்த : அறிவழிந்த பேதையிவள்
இப்படியும் செய்தனளோ : இவளாண்மை நானறிவேன்.
ஆகவே யெந்தன்முழு : ஆண்மைத்த னத்தையின்று
வேகமாய்க் காட்டியவள் : வினையறிய வேணுமென்று.
வெம்பிமனம் பேதலித்து : வேதாளம் போல்குதித்து
சம்பிரதி யானவிரு : சண்டாளப் பாதகரை.
தக்ஷணமே தானழைத்து : சாற்றுகிற "னென்னுடைய
பக்ஷமுள்ள வீரர்களே ! : பாய்ந்திருவ ரிக்கணமே.
வலரியா னென்னுமந்த : வாலனவன் வாழ்ந்திருந்த
நிலவாநல் மாளிகைக்கு : நீங்களிரு பேர்களும்போய்.
அவனினிய தேவியம்மாள் : ஆனஜெய சீலியனை
கவனமாய்க் கண்டறிந்து : காதலுட னேயவட்கு.
சொல்லிடுங்க 'ளம்மாநீ : தொல்லுலகின் தேவர்களை
கல்லெனவே தூஷணித்து : காறியுமிழ்ந் திட்டதன்றி.
கிறீஸ்துவர்கள் வேதமெனும் : கீழ்மறையைப் பற்றினதாய்
பிரஸ்தாப மாயுலகில் : பேசுகிறார் மானிடர்கள்.
அற்பக்க ளங்கமில்லா : ஆரணமே ! யுன்பேரில்
கற்பனையா யந்தபல : கழிசிறைகள் சொல்லுமொழி.
சுத்தமுழுத் தப்பெனவே : சூழ்புவியோர் தாமறிய
இத்தினமே யெங்களுடன் : எகிவந்து நம்முடைய.

முன்னோர்கள் போற்றிவரும் : முதல்கடவுள் யூப்பிற்றர்
சன்னதியை நாடினதும் : சகலர்களின் கண்காண.

தூபமதைக் காட்டிநல்ல : சுருதிமுறை யின்படியே
சோபனங்கள் கூறியதை : துதித்திடம்மா' வென்றவட்கு.

இச்சகமாய்ப் பேசிமனம் : இளகிடுமத் தன்மையதாய்
மெச்சுமொழி யாலிருவர் : மேன்புகழோ டேயவட்கு.

சொல்லிடுங்க ளெப்பொழுது : சூதாய வனுனைக்கும்
பொல்லாம றுமொழியைப் : போலவே யெந்தனிடம்.

செப்பிடுங்க ளெப்போநான் : செய்வதுவு மின்னதென
அப்போது சொல்லிடுவேன் : ஆகையால் போய்வருவீர்."

என்றரசன் தந்திரமாய் : இவர்க்குரைத்து யேகிடவே
ஒன்றாக வவ்விருவர் : ஓடிவ லேரியனின்.

சுந்திரமா மாளிகையை : சூரரவர் தாமணுகி
தந்தமிழைத் தேயிலங்கும் : தலைவாச லுள்நுழைய.

அம்மம்மா தங்கையரே ! : ஆத்திரமாய்ச் சென்றவர்கள்
பொம்மைகள்போல் நின்றவொரு : புதுமைதனைக் கேட்
[டிடுங்கள்.

மன்னனவன் கட்டளைபோல் : மடையர்களு முள்நுழைய
அன்னநடை மின்னழகும் : ஆதனையி லெங்குமில்லா.

வன்னவுடை சொர்ணமணி : மாசில்லாக் கன்னிமணி
மின்னிடுங்க திரவன்போல் : வித்தகமா யம்மனையில்.

எதிர்ப்புறமி ருந்துவர : இருசூர வீரர்களும்
உதறித்து டிதுடித்து : ஊமைகள்போல் வாயடைத்து.

மருவில்லா நேசகுண : மாதரசி யானவளின்
திருவதன மண்டலத்தில் : செழித்தொளிரும் காந்தியையும்.

அருள்பொங்கி யோங்குமிரு : அழகுவிழி யானதிலே [தை.
தெருள்பொழியு மெஞ்ஞானம் : திகழ்ந்திலகும் லக்ஷணத்

[illegible]டுகின்ற கன்னிகையின் : காணரிய மாவழகை
[illegible]டகமாய்க் கண்டவிவர் : புத்திதடு மாறினராய்.
ஒப்புவமை சொல்லிடவே : ஓர்வகையும் காணமல்
குப்பெனவே கண்ணிருள : கூகைகள்போ லேவெருண்டு.
பாமரர்க ளானவந்த : பாதகருஞ் சொல்லுகிறார்
"பூமியினு தித்தமகா : புண்ணியரா ஜேஸ்வரியோ.
பொன்னுலக தேவதையோ : போற்றறிய வானவரின்
கன்னிகையோ அல்லதொரு : காந்திரியோ காணரிய.
அசரீரி தானேநல் : அம்பரிபோ லேயெழுந்து
நிசமாக நம்மெதிரில் : நிற்கிறதோ, வென்றிவர்கள்.
ஒப்புவமை யில்லாத : உத்தமியைப் பார்த்தவுடன்
அப்பப்பா வென்றலறி : அச்சமிகு மவ்விருவர்.
" அம்மாநீர் யாரெனவே : அடியோர றியவிப்போ
செம்மையுட னுன்பேரை : சீக்கிரமு ரைத்திடம்மா."
என்றவர்கள் நின்றிருந்த : இடந்தனிலே வீழ்ந்தெழுந்து
மன்ருடி நிற்கையிலே : மாங்குயிலி ன்னேசையெழ.
விரும்புங்கு ரலொலியாய் : வீணையொலி போலவம்மன்
அரும்பான பல்துலங்க : ஆதவனைப் போன்றவிளம்.
சாந்தகுண மாதரசி : சங்கையுடன் வாய்மலர்ந்து
"நான்தான்செ சிலியம்மன் : நன்மைநிறை நேசர்களே.!"
என்றுரைக்க வவ்விருவர் : இதயங்க லகலத்து
நன்ருயி ருக்குதென : நாணித்த லைகவிழ்ந்து.
கட்டாக வவ்விருவர் : கால்பதறி கையுதறி
மட்டுதிட்ட மில்லாத : மாசிசுக்கள் போலழுக.
கண்டவிளங் கண்மணியாள் : கண்கலங்கும் சேவகரை
அண்டிவந்து பசரித்து : அன்புடனே கேட்டிடுவாள்.
" நில்லாம லோடிவந்தும் : நீங்கள்வந்த காரணத்தை
சொல்லாமல் நின்றழுகும் : சூக்ஷமதை நானறிய.

செப்பிடுங்க" ளென்றவர்க்கு : சீதமுக செல்வதியாள்
ஒப்பில்லா வாஞ்சையுடன் : ஓதிடவே யவ்விருவர்.

"சொல்லிடவு மெங்கள்மனம் : சோர்ந்துருகி வாடுதம்மா
அல்மாக்கி யூஸரசன் : அளித்திட்ட கட்டளையால்.

இங்குவந்தோ மாகையினல் : ஈன்றெடுத்த வன்னையர்போல்
சங்கையில்லா வெங்குறையை : க்ஷமித்தருளு" மென்
[றிறைஞ்சி.

நல்லறிவே தில்லாத : நகர்பதியின் சேவகர்கள்
புல்மேயும் மாடுகள்போல் : பூமிதனை நோக்கினராய்.

தண்டமிகு நாயகன்சொல் : சங்கதிக ளத்தனையும்
சண்டாள ரன்னையிடம் : சாற்றினர் தங்கையரோ.

சேதிதனைக் கேட்டவுடன் : செல்வியவள் மாதயவாய்
ஓதுமொழி கேளுமெந்தன் : உடன்பிறந்த நேசர்களே. !

" சிறுவமுதல் நானறிந்து : சேவித்தொ ழுகுமெந்தன்
தெருள்விளங்கும் வல்லபரன் : திரித்துவமாம் தெய்விக.

மெய்யான கர்த்தனைநான் : மேதினியில் விட்டகற்றி
பொய்யாக நீர்தொழுவும் : புத்தியில்லாப் பேய்ச்சிலையை.

கும்பிடவோ சொல்லுகிறீர் : கூசாம லெந்தனிடம்
கம்பளத்தான் போலவெறும் : கதைகள்சொல்ல வந்தீரோ ?

கண்டோர்க லங்கியழ : காசினியை யாண்டுவரும்
தண்டரச னென்தலைக்கே : தக்கவுலை வைத்துவிட்டான்.

என்றறிவே னன்றியுமென் : எதிர்க்கூனா வேகையிலே
நன்றாக நின்றிடுமோ : நான்வசிக்கும் மாளிகையும்.

இன்னிலத்தி லென்னுடைய : இணையில்லா நேசருக்கும்
பின்னுமவ ரோடுலகில் : பேதமின்றி யேபிறந்து.

என்றும்பிரி யாதவொரு : ஏந்திரம்போ லென்மனையில்
ஒன்றாக வாழ்ந்துவந்த : உத்தமன்கொ ழுனனுக்கும்.

நேர்ந்தவந்த தீங்கதுவே : நேசர்களே! யெந்தனுக்கும்
நேர்ந்திடுமென் றேயிதனை : நிச்சயமாய் நானறிவேன்.

ஆதலா லென்னுயிரை : அரும்பொருளா யெண்ணுமல்
பூதலத்தை யாதரித்த : புகழேசு நாதருக்காய்.

வேதனைக ளுற்றிறந்து : விண்ணுலகம் சேருவதே
மாதவாயி லெந்தனுக்கு : மாவரிய பாக்கியமாம்.

ஆகையினு லென்பிரிய : ஆசைமிகு மன்பர்களே!
சோகமுறு தெந்தனைநீர் : சொற்பொழுதி லேபிடித்து.

கட்டிடினும் கட்டிடுங்கள் : காதலுட னென்தலையை [ல்.
வெட்டிடினும் வெட்டிடுங்கள் : வேந்தனிட்ட கட்டளைபோ

கஸ்தியுற்று நானிறந்து : காசினியை விட்டகல
முஸ்திப்போ டேயிருக்கும் : முயற்சிகளைச் சொல்லிடுங்கள்"

என்றுரைக்கக் கேட்டுநின்ற : இருவர்மன மேங்கினராய்
நின்றுநெடு நேரமவர் : நீள்மவுன மாயிருந்து.

புண்ணியஞ்சேர் செல்வதியை : பூஜிதமாய்ப் பார்த்துரைப் [பார்
"பெண்மணிகள் நாயகமே! : பேதைகள்நாம் சொல்லு [மொழி.

சிந்தையிலே கொண்டுணர்ந்து : சிறப்பான ஜீவனுக்கோர்
நிந்தையணு காதுடனே : நீழ்புவியில் வாழ்ந்திடம்மா.

அரசனுரைத் திட்டதுபோல் : ஆகட்டு மென்பதினுல்
குறைகளொன்றும் நேராதே : குவலயத்தி லுள்ளளவும்.

அடிமுடிக ளில்லாத : அருணமுக வன்னையரோ!
வடிவுயரு மும்முடைய : வாலிபந லந்தனைநீர்.

வியர்த்தமே யாக்கிமிக : வீண்பழியை மேற்சுமந்து [கள்.
அயர்ந்துருகி மாளுவதேன் : அம்மணியே!" யென்றவர்

வாய்புலர கையுதற : வழுத்துகையில் வாலமணி
நேயகுண மோடவரை : நேர்மையுட னேயழைத்து.

“ கள்ளமின்றி நீங்களிப்போ : காட்டினவா லோசனையை
தள்ளிவிட்டு வேறெதுவும் : சங்கதிக ளுண்டானல்.
சொல்லிடுங்க ளன்றியும்நான் : சூக்ஷமா யுங்களுக்கு
சொல்லுவதைக் கேட்டிடுங்கள் : சூரர்களே ! நான்வேத.
சாக்ஷிமுடி பெற்றிலகும் : சமயமதி லென்னுடைய
மாக்ஷிநிறை கற்பழகை : மனங்குளிரக் கண்டிடுவீர்.
சுருக்கமாய்ச் சொல்வதெனில் : சூழ்புவன மீதினிலே
பருக்கையாம் கல்லைவிட : பாங்கொளிரும் வஜ்ஜிரங்கள்.
மெத்தவும ருமையன்றோ ? : மேல்தளங்க ளில்லாத
பத்தடிகள் வீட்டினிலும் : பாராளும் மன்னவனின்.
மாளிகைசி ரேஷ்டமன்றோ ? : மானிலத்தை யோர்குடையில்
ஆளுமகா ராஜனிலும் : அகமெலிந்து வாடுமொரு.
பேதைபெ ரியவனே ? : பேசியவென் னன்பர்களே !
ஓதிடுவீர் பேதமின்றி : உண்மைதனைக் கண்டுணர்ந்து.
அப்படியே யிவ்வுலக : அற்பசுக வாழ்வினிலும்
ஒப்புவமை யில்லாத : உம்பர்கள்வாழ் வானுலக.
நித்தியமா பாக்கியமே : நீடூழி யென்றறிந்த
சத்தியமா மெய்மறையோர் : சாடுகிறார் வானுலகம்.
அல்லாம லோர்பிரபு : ஆவலுட னுங்களிடம்
சொல்லுகிற ‘ரென்பிரிய : சூரர்களே ! யெந்தனுக்கு.
கண்ணாடித் துண்டுகளை : கணக்காக நீர்கொடுத்தால்
எண்ணியோனா னத்தனைக்கும் : இரத்தினங்க ளைத்தருவேன்.
செல்லாத காசுகளை : சேவகரே நீர் கொடுத்தால்
நல்லதங்க நாணயங்கள் : நான்தருவேன் நிச்சயமாய்.’
என்றுரைத்தா லப்பொழுதே : ஏகிவிரைந் தோடியேநீர்
ஒன்றாகச் சேர்ந்திருவர் : ஊரூராய்த் தானலைந்து.
செல்லாத காசுடனே : சேகரித்து வாரிவந்த
எல்லாம ணிகளையும் : ஏகமாய்த் தான்கொடுத்து.

பளபளென மின்னுகின்ற : பலதங்க நாணயத்தை
சுளுவாய டைந்தபின்னே : சூரர்களே! நீர்கொடுத்த.
கண்ணாடித் துண்டுகட்கும் : காசுக்கும் கஸ்தியுற்று
கண்கலங்கி நிற்பீரோ? : காணரிய நேசர்களே!
ஆஸ்தியென்றால் வானுலக : அளவில்லா வாஸ்திகளே
ஆஸ்தியல்லால் லௌகிக : ஆஸ்திவெறும் நாஸ்தியையா"
எனமொழியக் கேட்டுநின்ற : இவர்மனது மாறிடவே
அனல்மெழுகு போலுருகி : ஆறாய்க்கண் ணீருதிர்த்து.
பவளக்கொ டியிடையாள் : பாதமதில் வீழ்ந்தவர்கள்
இவளைப்போல் மாதரசை : இன்னிலத்தில் கண்டதில்லை.
அம்மம்மா வென்றவர்கள் : ஆருத்து யரமுடன்
விம்மிக்கண் ணீருதிர்த்து : வேறெதுவும் சொல்லாமல்.
இருப்பவரைக் கண்டநல்ல : இன்பகுண மாதுமணி
விருப்பமுட னேயவரை : வீட்சித்துச் சொல்லிடுவாள்.
"ஐயா! நா னிப்பொழுது : அறைந்தவைக ளத்தனையும்
மெய்யோபொய் யோவெனவே : விளம்புவீ" ரென்றுரைக்க.
தேவவரங் கொண்டவிரு : சேவகர்க ளப்பொழுதே
கூவியழு தேயுரைப்பார் : "குலசேக ரத்திருவே!
உண்மையிது முண்மையென : உணர்ந்ததினு லின்றுமுதல்
மண்ணிலுள்ள நாளளவும் : மாதரசே! நீர்தொழுவும். [லோர்
தெய்வமதைப் போற்றியேநாம் : சேவைசெய்வோ மென்பதி
ஐயமுற வேண்டாமெம் : அன்னையரே" யென்றார்கள்.
அப்போசெ சிலியம்மன் : ஆண்டவரைத் தோத்தரித்து
செப்புவாள் வாய்மலர்ந்து : "சீர்பெருகுஞ் செல்வர்களே!
மித்திரரே! நீங்களின்று : மீண்டும ரசனிடம்
இத்தினமே யேகியபின் : இதமாய்நா னுங்களுக்கு.
சொன்னவைக ளத்தனையும் : சொல்லிய வனிடத்தில்
மன்னவனே யின்னுமந்த : மாதரசி மூன்றுதினம்.

கெடுகொடுக்க வேணுமென்று : கேட்கிறு' ளென்றுரைத்து
கடுகவே மீண்டுமெனே : காணவிங்கு வந்திடுங்கள்.
நீங்களருள் தீக்ஷதனே : நீதியுடன் பெற்றுயர
தீங்கனுகா வாண்டவரை : சீக்கிரம்வ ரவழைப்பேன்."
என்றம்மன் சொல்லியதும் : என்பிரிய தங்கையரே!
ஒன்றுயவ் வுத்தமர்கள் : ஓட்டமா யோடியந்த.
கொடுங்கோல மன்னனிடம் : கூறியபின் னன்னோர்கள்
தடங்கலொன் றுமில்லாமல் : தங்கள்மனேய ணுகி.
சற்றிளைப்பு மில்லாமல் : சாடிக்க ளிப்பவர்போல்
உற்ருரு றவினர்க்கும் : ஊரிலுள்ள நேயருக்கும்.
கற்றதிரு மெய்மறையின் : காரணத்தைச் சொல்லியதும்
முற்றுந்தெளி வுற்றமகா : முத்தர்கள்போ லத்தலத்தில்.
நானூறு பேர்வரைக்கும் : நாற்றிசையு மேபரவி
கானுறு பாய்வதுபோல் : கண்ணீர்சொ ரிந்தழுகும்.
நேசர்களை யந்தவிரு : நேர்மைகுண சேவகர்கள்
பாசமுடன் தேற்றியபின் : பரிவார மாய்த்திரண்டு.
ஆசையுட னெல்லோரும் : ஆதவனின் சோதிமுக
நேசகுண மாதரசின் : நேர்மனையைத் தாமணுக.
முன்னமே வந்திருந்த : மோனமிகு மாண்டவரும்
வின்னமில்லா வானபரன் : வேதமதின் சத்தியத்தை.
பூரணமா யோதியபின் : புண்ணியர்தன் பூங்கரத்தால்
தேறிமன மாமகிழ்வாய் : சேர்த்தளித்தார் தீக்ஷதனே.
வித்தாரத் தோள்களிலே : வீரமணி மாலையணி
மித்திரரே! கேட்டீரோ : மேதினியில் மற்றவர்க்கு.
புத்திசொல்லும் வேளைகளில் : பூதலத்தி லில்லாத
உத்தமர்போல் காதுகளில் : ஓதுகிறீ ரொன்றுனும்.
செப்புவது வொன்றுயும் : செய்கையது வேருயும்
தப்பாயி ருப்பதினல் : தங்கையரே வோர்பலனும்.

இல்லையம்மா வாகையினுல் : இவ்வுலகி லுங்களது
சொல்வினையும் செய்வினையும் : சோதிக்கு டரொளிபோல்.
ஒத்திருக்கு மேயாகில் : ஓதுமொழி மெய்யான
சத்தியநற் போதகமும் : சர்வபிர சங்கமுமாம்.
இத்தனைபேர் தீக்ஷைதனை : இம்மையிலே பெற்றபலன்
அத்தனையு முங்களைப்போல் : ஆதனின்கு லத்துதித்த.
சுத்தஜெய சீலியரின் : சூழ்பக்தி யென்றறிந்து
உத்தமராய் வாழ்ந்திறந்து : ஓடிடுங்கள் வானுலகம்.
என்னேர மும்பரனை : ஏற்றித்து தித்திலகும்
கன்னிமணி மாதரசி : காதலுடன் தீக்ஷைதனை.
பெற்றவந்த வுத்தமனை : பேணியவள் தானழைத்து
"பற்றறவே நீங்களென்றும் : பாதாளப் பேய்களது.
சற்பனையை விட்டொழித்து : சர்வேசன் மக்களென
அற்புதமாய் மாறினதால் : ஆதனையி லுள்ளளவும்.
அஞ்சாமல் தேவபரன் : அருண்மறையின் கட்டளையை
நெஞ்சமதில் நாட்டிமகா : நேர்மையுடன் வாழ்வீரோ?"
என்றவளைக் கேட்டிடவே : ஏகபரன் நேயரெல்லாம்
கன்றுகள்போல் துள்ளி "யிந்த : காசினியி லெங்கள்தலை.
போங்காலம் நேரிடினும் : பூதலத்தி லெங்களுக்கு
சாங்காலம் நேரிடினும் : சத்தியமாய் மெய்மறையை.
விட்டகலா தெந்தவித : வேதனைக்கு மஞ்சாமல்
மட்டோடி ருந்திறந்து : வானுலகம் சேர்ந்திடுவோம்."
என்றுறுதி வாக்களிக்க : ஏகனைத்து திக்கவண்ணம்
நின்றிருந்த வாண்டவரும் : நீள்கரத்தை மேலுயர்த்தி.
ஆசீர்வா தங்கொடுக்க : அனைவோரு மக்களிப்பாய்
நேசர்பதம் முத்தமிட்டு : நீங்கினர் தம்மனைக்கு.
எல்லோரு மேகியபின் : என்பிரிய தங்கையரே!
நல்லோர்கள் போற்றுகின்ற : நாயகிசெ சீலியம்மாள்.

பரமகுரு வாகுமந்த : பார்த்திபமேற் றிராணியரின்
திருவடியை முத்தமிட்டு : தீவிரமாய்ச் சொல்லுகிறாள்.
" ஆண்டவரே ! காணுமிந்த : அவனிதனி லேய்யடியாள்
மாண்டிடவே போவதினால் : மானிலத்தி லெந்தனுக்கு.
தீதுமணு காதிருக்க : திரவியங்க ளத்தனையும்
ஆதரவு மில்லாமல் : அக்மெலிந்து வாடுகின்ற.
எந்தன்பி றவிகளாம் : ஏழைக்கி றீஸ்துவர்க்கு
தந்தளித்தே னண்டவரே : தற்பரனூர் பேராலே.
பதறியழு மேழைகட்கு : பாகித்தென் னஸ்திகளை
பிதிரார்ச்சி தப்பொருளாய் : பிரித்தளித்தே னென்றாலும்.
இன்னுமொரு வாஸ்திமட்டும் : என்னிடத்தி லுண்டதனை.
கண்ணியமாய்த் தாங்களதை ; கையேற்றுக் காசினியில்.
அந்திசந்தி வேளையிலும் : ஆண்டவனூர் பூசையிலும்
சிந்தைகளி கூர்ந்திடநீர் : செய்யுஞ்ஜெ பங்களிலும்.
என்னைநினைந் தாண்டருளும் : என்கோவே " யென்றிறை
கன்னல்மொழி மாதரசி : காணரிய வாண்டவரின். [ஞ்சி
பொற்பாதம் முத்தமிட்டு : பூரிப்பாய்ச் சொல்லிடுவாள்
" அற்பக்க ளங்கமில்லா : ஆண்டவரே ! யிப்புவியில்.
நான்வசிக்கு மிந்தவிரு : நாலடுக்கு மாளிகையை
தானமதா யுங்களுக்கு : தந்திடுவேன் தாதையரே. "
என்றுரைத்தோர் காகிதத்தில் : ஏற்றமுறை போலுடனே
நன்றாய்க்கை முத்திரையை : நாட்டியபின் னேயதனை.
சர்வேசன் நாமமதால் : சாந்தகுண வாண்டவரின்
சீர்பாதம் முத்தமிட்டு : சீக்கிரமாய்க் கையளிக்க.
பூசகரா மந்தமிகும் : புகலரிய வாண்டவனூர்
ஆசிசுப வாழிசொல்லி : அம்மனையை விட்டகன்றார்.

---

## 23-வது அத்தியாயம்.

### இறகில்லாச் சம்மனசு.

அம்மம்மா நேசர்களே! : அம்புவியி லிவ்விதமாய்
சம்மனசு போலிருந்து : சஞ்சாரம் செய்துவந்த.

இறகில்லாச் சம்மனசு : இன்னிலத்தை விட்டகன்று
சிறந்திலகும் வானுலகம் : சேர்ந்துயர்ந்த சீரதனை.

செப்பிடவே போவதினால் : சீருடன்நீ ரெல்லோரும்
திப்பிரமை கொள்ளாமல் : சேர்ந்துமுழங் காலில்நின்று.

ஆண்டவனைப் போற்றிசெய்து : அக்களிப்பா யத்தினத்தில்
மாண்டுபர லோகமெனும் : மாற்றமில்லா மோக்ஷமதில்.

இப்பொழுது மெப்பொழுதும் : இங்கிதமாய் வாழ்ந்திலகும்
ஒப்புவமை யில்லாத : உத்தமியாள் பூதலத்தில்.

உற்றதிருப் பாடுகளை : உங்கருத்தில் நாட்டியகப்
பற்றறவே வாழ்வடைந்து : பரமனடி சென்றிடுங்கள்.

சந்திரமா பிம்பம்போல் : சாகரத்து தித்தவிளஞ்
சுந்திரமா வன்னையர்க்கு : சோதனையின் காலமுந்தான்.

நெருங்கவே பேயதுபோல் : நீழ்புவியில் வந்தவொரு
குறுங்கழுத்த னனமகா : கொடுங்கோலப் பாதகன்அல்.

மாக்கியூ ஸென்னுமிந்த : மாகொடிய பாவிமகன்
யோக்கியதை யில்லாத : யூதாஸைப் போன்றசில.

பஞ்சகமா பாதகரை : பாய்ந்தலறி யேயழைத்து
கொஞ்சமுமஞ் சாமல்வெகு : கோபமுடன் சொல்லுகிறன்.

“சேவகரே! நீங்களிந்த : சணப்பொழுதி லோடியேகும்
தேவனாசி ராகரித்து : தீர்வைக்குள் ளாய்மடிந்த.

வலரியா னென்னுமந்த : வாலனுடன் வாழ்ந்திருந்த
நிலவரஞ்சேர் தேவிநங்கை : நீலிஜெய சிலியைநீர்.

அச்சமின்றி யேபிடித்து : அரைநொடியி லென்னுடைய
கச்சேரி கொண்டுவரக் : கட்டளைதந்தே "னெனவே.

செப்பினது போலந்த : சேவகரு மோடியேநம்
ஒப்பில்லாத் தெள்ளமுதை : ஓநாய்கள் போற்கவிழ்ந்து.

பாதமதில் வீழ்ந்துதுதி : பாவிகளும் செய்யாமல்
சோதிமிகர் பொற்கரத்தை : சூதர்களோன் றாய்ப்பிணைத்து.

கட்டியபின் ராக்கினியை : கால்நடையாய்த் தாம்நடத்தி
பட்டியின்நாய்க் குட்டிகள்போல் : பாதகரு மோர்திரளாய்.

கரகோஷஞ் செய்துமனுக் : காதுகள்செ விடுபட
பறைமுழக்கி ஊர்ஜனங்கள் : பதைத்துத்தி கைத்திடவே.

திருநகர்ரோம் பட்டணத்தின் : தெருவழியே செல்லுகை
உருவமைந்த கன்னிமணி : ஓநாய்கள் மத்தியிலே. [யில்

செம்மறிபோ லேகுமிந்த : சேதிதனைக் கேட்டோர்கள்
கும்பல்கும்ப லாய்த்திரண்டு : கூடியவ ரோர்திரளாய்.

செல்லுமந்த வேளையிலே : சீரழிந்த சேவகர்கள்
கல்லுங்க ளாங்துருகக் : கைசோர வேயடித்து.

நெருங்குஞ்ச பையினுள்ளே : நேராகச் சென்றிடவே
பெருமிதமாய்க் கூடிநிற்கும் : பேசருமனுத்திரள்கள்.

மருவில்லா நாயகியின் : மாக்ஷிநிறை காக்ஷியொளிர்
திருவதன மண்டலத்தில் : தீட்டுமொளி காந்தியையும்.

அருள்மிகுந்த நேத்திரங்கள் : ஆதித்தன் போலிலங்க
தெருள்பொழிய மின்னுகின்ற : தேசுலவு லக்ஷணத்தை.

கண்டமனு வோர்களெல்லாம் : கலகலத்து கண்பூத்து
வண்டுகள்போ லேயிறைந்து : மாதவஞ்சேர் ராக்கினியை.

அண்ணார்ந்து பார்த்தவராய் : ஆவெனவே வாய்பொதிந்து
'கண்ணாடி போன்றவிந்த : களங்கமில்லா மாதரசை.

நீதியில்லா மாகொடிய : நிஷ்டூரப் பாதகனும்
சூதாக யெந்தவித : துன்பமி யற்றுவனோ.?

ஜோதிநிக ரில்லாத : சுரர்கணத்தின் தங்கையனை
பாதகனு மென்னென்ன : பாடுகள்ப டுத்துவனோ. ?

ஐயையோ' வென்றவர்கள் : அலகைதண்ட நாயகனை
மெய்யாக வேசபித்து : மேலும்மே லுந்திகைத்து.

கண்திறந்த பொம்மைகள்போல் : காதருகே கையை
[வைத்து
எண்ணாது யெண்ணிமிக : ஏக்கமுகங் கொண்டவராய்.

உண்மையிலங் கெல்லோரும் : உத்தமரி னுத்தமியாம்
பெண்மணியிக் கண்மணிக்காய் : பெருந்துயராய்க் காத்தி
[ருந்தார்.

அந்திசந்தி ராப்பகலாய் : ஆண்டவனைப் போற்றிவரும்
எந்தன்பி றவிகளே : ஏதேன்வ னவிருக்ஷ.

கொம்பினிலே நின்றுகொண்டு : குணவதியே வானையிந்த
அம்புவியி லேய்த்தமகா : அகங்கொழுத்த னூசியைப்போல்.

அற்பமதி கொண்டதுஷ்ட : அல்மாக்கி யூஸரசன்
கற்புடையா ளைப்பார்த்து : கலகலென வேசிரித்து.

பஞ்சவர்ணக் கிள்ளைதனை : பாயநிற்கும் பூனையைப்போல்
அஞ்சாக்கொ டுங்கோலன் : ஆங்கார மாயெழுந்து.

காரிருளின் மேகமது : கர்ச்சித்தி டிப்பதுபோல்
கூறரிய கோபமுடன் : கூவியவன் சொல்லிடுவான்.

"மேதினியை யாண்டுவரும் : வேந்தனெந்தன் முன்பாக
மாதேயுன் பேரதையும் : மாதாபி தாக்களவர்.

ஊரதையு மன்னோர்கள் : உண்மையிலே வாழ்ந்திருந்த
சீரதையு மிப்பொழுதே : செப்பிடுவா" யென்றுரைக்க.

உத்தமியா ளென்னபதில் : ஓதுவளோ வென்றறிய
சத்தமின்றி நின்றமனு : சனத்திரளுங் கேட்டிடவே.

திருவாய்ம லர்ந்தருளிச் : செப்புகிறு "ளையாவே !
சிறந்திலங்கி வாழ்ந்தவர்செ : சீலியூஸ் மெத்தெல்லூஸ்.

என்னுமிந்தப் பேருடனே : இந்நகரில் கண்ணியமாய்
பன்னரிய மேன்குலத்தில் : பாலகியாய் நான்பிறந்தேன்.
உயர்குலத்தி லேபிறந்த : உன்னதரா ஜேஸ்பரனூர்
அயராது யிர்விடுத்து : ஆதனையைத் தாபரித்த.
அந்தக்கி றீஸ்துமறை : ஆனதைநான் பற்றிநிற்கும்
இந்தமகா மாக்ஷிதனே : இன்னதெனச் சொல்லறியேன்.
என்பெயரா றியவெனில் : இப்போதே கேட்டிடுவீர்
கன்னிகைசெ சிலியென்பார் : காதலன்வ லேரியனும்.
நவமாக தீக்ஷைபெற்ற : நாதன்தி பூர்ஸனர்தான்
தவமாக நானடைந்த : தர்மன்கொ ழுந்தனையா".
என்றுகன்னி சொல்லுகையில் : இறைவன்முகம் நாணியங்
நின்றமனு வோர்நடுங்க : "நீஸியே" யென்றழைத்து. [கே
"அச்சமில்லாப் பாதகியே! : அமைச்சன்ச முகமதில்
கொச்சையா யுன்மறையை : கூறத்து ணிந்தனையோ?
ஓனனைப் போலநின்று : உன்தலைநி மிர்த்தியிங்கே
நாணமல் வேதமென்று : நாவாலு ரைத்தனையா?"
என்றவனுங் கூச்சலுடன் : எழுந்திடவே பொற்கொடியாள்
நின்றவனுக் கஞ்சாமல் : நீதமுட னோதிடுவாள்.
"திரிலோக முண்டமைத்த : தேவாதி தேவனெனும்
சர்வேச னன்றியிந்த : ஜகந்தனிலே யெந்தனுக்கு.
ஒன்றுமே தேவையில்லை : உத்தமசர் வேசுரனே
என்னிதய ஜீவியமும் : என்கண்கள் தீபமுமாய்.
இருப்பதால் மன்னவனே! : இவ்வுலக வாழ்வினிலே
விருப்பமெதும் வையாமல் : விண்ணுலகை நாடிடவே.
ஆசையெனக் கல்லாமல் : அல்லனுறும் லௌகீக
ஆசையெனக் கில்லையையா : ஆதனையாள் மன்னவனே!
அற்பக்க ளங்கமில்லா : ஆதித்தி ரித்துவத்தின்
கற்பனையை யாசரித்து : காதலுட னிப்புவியின்.

துன்பக்க டல்தனிலே : துவண்டெழுந்து வாடுவதே
அன்பருக்காய் நான்புரியும் : அமிர்தஜ லக்ரீடை.
ஆகுமென வேயறிவீர் : ஆகையா லிவ்வுலகில்
நாகம்போல் சீறிவெறும் : நடுநீதி செய்துவரும்.
உமக்கேனு முந்தனைப்போல் : ஊராளு மன்னவர்கள்
தமக்கேனும் நான்பயந்து : தத்தளியே னென்றிதனை.
நன்றாய றிவதன்றி : நானுரைக்கு மிம்மொழியும்
ஒன்றாயி ருக்கு"மென்று : உத்தமியாள் சொல்லிடவே.
மதியிழந்த பேயனவன் : "மாதே! நான் செய்துவரும்
அதிகார மானதிந்த : ஆதனையில் மிக்கதுதான்.
விட்டிடவும் வெட்டிடவும் : வேரொதையும் செய்திடவும்
மட்டுதிட்ட மில்லாத : வல்லமைப டைத்தவன்நான்.
இதனைநீ யுன்மனதில் : ஏற்றுநிலை பற்றிமிக
மதியூக மாகவேயுன் : மனையகல்வா" யென்றுரைக்க.
உத்தமியா "ளையாவே! : உந்தனதி காரமது
மெத்தப்பெ ரிதெனினும் : வேகமாய் விட்டடைத்த.
காற்றுத்து ருத்தியல்லால் : காரியம்வே றில்லையந்த
நாற்றத்து ருத்திதனை : நல்லதொரு ஆசிகொண்டு.
குத்தித்து ளைத்துவிட்டால் : கூடியுள்ள காற்றனைத்தும்
சத்தமின்றி யேயகல : சப்பைத்தோ லாய்விடுமே."
என்றுமறு வுத்தாரம் : இயம்பவே நீதிபதி
நின்றபடி யேவுறுமும் : நீண்டமுக மர்க்கடம்போல்.
சினந்துமுக மாறினனாய் : சீத்துப்பூத் தென்றலறி
மனந்தடு மாறியவன் : மாதரசைப் பார்த்துரைப்பான்.
"அச்சமின்றி வாய்பதஷ்டம் : ஆடுகின்ற மாதே! நீ [ட்டு.
நச்சுநச்சென் றேதுமொரு : நாரியைப்போல் லெச்சைகெ
பேசாதே யின்னுமுந்தன் : புறக்கணிக்கும் வார்த்தைகளால்
யேசாதே யின்னமும்நீ : யேசிடிலுன் கொட்டமதை.

அடக்கிடுவேன் பா"ரென்று : அவனுரைக்க வன்னைவெகு
அடக்கமுட னோதிடுவாள் : "ஐயா! நான் சொல்லிவந்த.
பேச்சுநிச மானமுழுப் : பேச்சன்றி பேச்சறியா
காச்சுமூச் சென்றுளறும் : கழிசிறைகள் பேச்சல்ல.
அறிவீரி தனை"யென : அப்பொழுதே மன்னனவன்
சிரமதனை யாட்டிமிகத் : தீவிரமாய்ச் சொல்லுகிறான்.
"மிக்கவதி காரமுடன் : மேட்டிமையா யாண்டுவரும்
சக்ரவர்த்தி யானவரின் : சாஸனமாம் கட்டளையை.
அறியாதா லல்லவோநீ : ஆணவமாய்ப் பேசுகிறாய்
சிறுமதியு மில்லாத : சிற்றெறும்பு போன்றவளே!
சாற்றுகிறேன் கேளு'மெந்த : சண்டாளர் யாரெனினும்
நாற்றிசையும் போற்றுகின்ற : நம்தெய்வம் விட்டகற்றி.
சுத்தக்கி றீஸ்துவையும் : சூதாகு மம்மறையும்
சித்தமகிழ் கொண்டவராய் : சேர்ந்தாலும் சேர்ந்தபின்னே.
விட்டகலோ மென்றுலகில் : விளம்புங்க சடர்களை
திட்டமாய் வெட்டியேகம் : தேவர்க்க ளித்திடுவீர்'
என்றியம்பி மார்க்கோரேல் : ஏவியநி ருபமதை
நின்றபடி காட்டியம்மா! : நீயுமிதற் கேதுசொல்வாய்?"
எனவிளம்ப மாதரசி : "ஏனையா! மன்னனவர்
கனமாக வேவிடுத்த : கட்டளைக ளத்தனையும்.
அனியாய மல்லாதே : ஆனமுழு ஞாயமதோ? [நான்.
வினையறிய வேண்டுமெனில் : விளம்புவே னுண்மையை
கிறீஸ்துவர்கள் வேதமதில் : கீழ்முறைக ளில்லையெனில்
கிறீஸ்துவரைத் தண்டித்து : கீழ்மைப்ப டுத்துவதேன்?
குற்றமுள்ள தென்பீரேல் : குற்றமதை யன்னோர்கள்
அற்பமெனும் பேதமின்றி : ஆதரையி லுள்ளளவும்.
ஒப்பிடுங்க ளென்றவர்க்கு : ஓதுவதே நீதியன்றி
ஒப்புயர்வே தில்லாத : உயர்பரமன் வேதமதை.

மறுத்திடுங்க ளென்றுவந்த : மாசிலருக் கோதுவது [னே.
பெருத்தமுறை சட்டமெனப் : பேயனுந்தான் சொல்லுவ
மறையதனை விட்டுவிட : மன்னனெவன் சொன்னாலும்
முறமையுள்ள சட்டமென : மூடனுந்தான் சொல்லுவனே.
சீவியெனும் பேருடனே : திருமறையைப் பற்றினதால்
நீவியென்ற ழைக்கமதி : நினைவழிந்த மன்னவனே.
நீரோதான் சொல்லு" மென : நீதிபதி யாக்கிரோஷ
கோரமுகங் கொண்டவனும் : கூறுகிறான் " மாதேநான்.
மர்க்கடம்போ லுன்னுடனே : வாயாடி வம்பிழுத்து
தர்க்கிக்க நேரமில்லை : தாமதங்கள் செய்யாமல்.
சேசுக்கிறீஸ்துமறை : சேர்ந்தவள்நா னல்லவென்று
தேசராசன் சொற்படியே : செப்பிவிட்டா லிப்பொழுதே.
மங்களமாய்க் கூடியுள்ள : மாசபையோர் தாமறிய
இங்கிதமா யுன்மனைக்கு : இங்கிருந்து சென்றிடலாம்.
நீதான வுன்மறையை : திருமறையென் றேயுரைத்து
சாதித்து நின்றிடிலோ : சத்தியமாய்க் கொன்றிடுவேன்."
என்றந்தப் பேயனவன் : ஏளனமாய்க் கூறுகையில்
நின்றிருந்த கற்பினொளி : நாயகியாள் வாய்மலர்ந்து.
" ஓதியவென் ஞாயமதை : உண்மையெனக் கொள்ளாமல்
காதிழந்த பித்தனைப்போல் : கத்துகிறீ ரென்றாலும்.
ஐயா! வென் னங்கமதில் : ஆயிரத்தோ ராத்துமங்கள்
மெய்யாயி ருந்திடினும் : மேதினியி லென்னேசு.
நாதரொனு மன்பருக்காய் : நாலாயி ரமுறையும்
ஓதரிய வாதையுற்று : உயிர்விடுவே னேயொழிய.
சத்தியமா யிம்மறையை : சாகரத்தி லோதுவித்த
உத்தமசர் வேசனைநான் : உன்மொழிபோ லிப்புவியில்.
சிரச்சேதம் செய்துவெகு : சீர்குலைய வாட்டிடினும்
பரிச்சேதம் நான்மறவேன் : பாதகனேகேட்டனையோ."

என்றுரைத்த மாத்திரத்தில் : என்பிரிய நேயர்களே!
நின்றிருந்த மானிடர்கள் : நீண்டபனை போல்விழுந்து.
திகைத்துமனம் பேதலித்து : சிந்தைதடு மாறினராய்
வகையில்லாப் பாலர்கள்போல் : வாடியவர் சோர்வடைந்து.
திப்பிரமை கொண்டவராய் : சீதமுக செல்வதிக்காய்
ஒப்பாரி வைப்பவர்போல் : ஓவென்ற மூகையிலே.
அல்மாக்கி யூசரசன் : அறிவுதடு மாறினனாய்
பொல்லாக்கொ டுங்கோபம் : பொங்கியடி யுண்டகரும்.
சர்ப்பம்போல் சீறியவன் : சாடிஎழூந் தக்கணமே
அற்பமெனு மஞ்சாத : அன்னையரைத் தான்பார்த்து.
நேராக நின்றுகொண்டு : நீசபிணம் போன்றவவன்
நாறுந்தன் வாய்திறந்து : நாணமல் சொல்லுகிறான்.
"மேதினியில் நாம்தொழூவும் : மேன்மைகுல தேவர்களை
மாதே! நீ யிப்பொழுதே : மாசபையோர் முன்னிலையில்.
தொழுததனைப் போற்றிசெய்து : தோத்திரங்கள் கூறியபின்
பழுதில்லா தூபமதை : பாங்குடனே காட்டிடுவாய்.
காட்டிடவே வேணுமிப்போ : காட்டேனென் றேமறுத்தால்
வாட்டியுன்னை யிக்கணமே : மடித்திடுவேன் பாதகியே!"
என்றவனு மோதிடவே : எதிரில்நின்ற நாயகியாள்
புன்னகைமு கந்துலங்க : பூங்குயிலே கூவுதல்போல்.
"ஐயாவே!" யென்றழைத்து : அன்புடனே சொல்லுகிறாள்
"மெய்யாக நீங்களெல்லாம் : மேன்மையுடன் கைதொழுது.
சேவைசெய்யு முங்களது : தேவரெல்லா முண்மையிலே
சீவன்சு ரணையில்லா : சித்திரப்ப துமையல்லால்.
வேறொதுவு மில்லையையா : வேணுமென்று லென்பிறகே
நேராக வந்துநின்று : நீரறியும் சத்தியத்தை.
கண்கூடாய்ப் பார்த்துடனே : காரியத்தை யோர்ந்திடவே
அண்டியதை யும்முடைய : அழகுமிகுங் கால்களினல்.

எட்டியுதைத் தேயுமிழ்ந்து : ஏசிக்க டிவதன்றி
கட்டியந்த தேவர்களை : காலைமுதல் மாலைவரை.
ஒன்றினுக்கு மஞ்சாமல் : ஓங்கியடித் தானுமந்த
நன்றியில்லாப் பேய்ச்சிலைகள் : நளபதியே! வும்மையது.
பதிலுக்கு தைக்காது : பாய்ந்துமது மேல்விழுந்து
மிதித்துநசுக் காதுவையா : மேன்மைதுரை மன்னவனே!
இந்தமட்டும் சொல்லிவந்த : இதனுண்மை நீரறிய
சிந்தைமகிழ்ந் தேயெழுந்தால் : சீக்கிரமாய் போய்வரலாம்.
தாமதங்க ளேனரசே! : தக்ஷணமென் பின்தொடர்ந்து
நேமமுடன் வந்திடில்நீர் : நேர்முகமாய்க் கண்டிடுவீர்.
ஊழியுள்ள காலமதாய் : உயர்ந்தெரியும் பாழ்நரக
ஆழிதனில் வெந்தழியும் : ஆவேசப் பேய்களையே.
குலதெய்வ மென்றுநம்பி : கூசாமல் கைதொழுது
நிலவரமாய்ப் போற்றிவரும் : நிர்மூட மன்னவனே!
எட்டியந்த பேய்ச்சிலையை : ஏசிக்க டிந்தடித்து [தால்.]
தட்ட வதை செய்துதைக்க : சோர்ந்துமனம் பின்னடைந்
செம்மையா யுள்ளவர்கள் : தேர்ந்துமனம் சீரடைய
உம்மெதிரே நானுதைத்து : உண்மையதைக் காட்டிடுவேன்.''
என்றுரைக்க வவ்விடத்தில் : ஏங்கிநின்றி ருந்தவர்கள்
ஒன்றாய்க்க லகலென : ஓசையெழ வேசிரிக்க.
அவ்விறைச்சல் கேட்டவந்த : அநியாய நீதிபதி
கௌவ வரும் குக்கலைப்போல் : கடுப்பா யெரிந்தெழுந்து.
முகத்தழுகு மங்கிடவே : மூடனந்த மூர்க்கனவன்
அகத்தாலே கெட்டழிந்த : அலகைமுகங் கொண்டவனாய்.
உரைக்கவே லோபியர்கள் : உற்றபொரு ளத்தனையும்
மறைக்குமாப் போலவிந்த : மாபாவி தன்வயற்றின்.
எரிச்சலதை யுள்ளடக்கி : இங்குமங்கும் தான்திரும்பி
பெருஞ்சிங்கம் போல்கதறி : பேசிடுவான் ''மாதே! நீ.

இந்நாட்டின் தேவர்களை : ஈனமென்றே தானிகழ்ந்து
உன்னூட்ட பாட்டமதால் : ஊரிலுள்ளோர் தாமறிய.
உன்னைக்கி றீஸ்துவளென் : ரூதினதா லிவ்விடத்தில்
நன்னயமாய்க் கூடியுள்ள : நற்சபையோர் முன்னிலையில்.
கற்றோரும் மற்றோரும் : கண்டறிய வுந்தனைநான்
குற்றமுள்ள பேதையெனக் : கூறியே தீர்ப்பறைந்தேன்.
ஆதலா லென்னுடைய : அறியகொலை யாளர்களே !
ஓதியவென் சொற்படியே : ஓடியவளைப் பிடித்து.
கட்டியபின் னேபலரும் : காணவ ழிநடத்தி
பட்டணிந்த பாதகியின் : பாங்கான மாளிகைக்கு.
தானழைத்துப் போயுடனே : தாமதங்கள் செய்யாமல்
வானங்கு மூர்வதுபோல் : மளமளென வேகொதிக்கும்.
வெந்நீரி னுவிதனை : வேகமாய் விட்டடைத்து
சின்னபின்னஞ் செய்தவளும் : சீவனதை விட்டழிய.
நீள்வதைகள் செய்யு" மென்று : நீதிபதி சொல்லிடவே
வாளேந்துந் தூதர்களும் : வந்துவிட்டா ரம்மையரே.

---

## 24-வது அத்தியாயம்.

### அர்ச்சியசிஷ்டவளின் அகோர பாடுகள்.

அன்னையரே ! நீதியில்லா : அவ்வரசன் மாசபையில்
வின்னமில்லா விண்மணிக்கு : வித்தகமாய்த் தானுரைத்த.
தீர்வைதனைக் கேட்டுமனம் : திகைத்துருகும் நேயர்களே !
சார்பாக மற்றதையும் : சாந்தமுடன் கேட்டிடுங்கள்.
நாயகிசெ சீலியரின் : நாயகன்வ லேரியனும்
நேயன்தி பூர்ஸனெனும் : நேர்மைகுண வாலவனும்.

ஆதனையி லோதரிய : அருள்வேத சாக்ஷியராய்
வேதனைக ளுற்றிறந்து : விண்ணுலகம் சேர்ந்தவுடன்.
ஐந்தேமா தங்களின்னும் : ஆகாமுன் ளுதனையில்
வந்ததம்மா நாயகிக்கு : வாதைமிகும் காலமுந்தான்.
ஆவிதுடித் தன்னையனை : ஆதனையில் மாய்த்தழிக்க
பாவியந்தச் சண்டாள : பாதகனு மோதுகையில்.
நாவாலு ரைக்கரிய : நாயகிசெ சிலியம்மன்
வாவிதனி லேமுளைத்து : வண்மையாய்ப் பூத்தமலர்.
வெண்டாம ரைமுகத்தாள் : விண்ணுலகைக் கண்களினல்
கண்டவள்போ லேமகிழ்ந்து : கரங்குவித்து தோத்தரித்து.
'திரித்துவமே' யென்றழைத்து : தேசுலவும் கன்னிகையாள்
சிரித்தமுகத் தோடிருக்கும் : சீர்சிறந்த வேளையிலே.
மாதரசி யானமிக : வண்மைமிகும் சௌபாக்ய
ஓதரிய ஞானமணி : உத்தமியா மோய்வனத்தை.
ஓரறிவு மில்லாத : உற்றமட மான்களின்மேல்
சீறியே பாய்ந்துவந்து : சிதைக்கும்கொ டும்புலிபோல்.
பேய்முகங்கள் கொண்டதுஷ்ட : பேருருவச் சேவகர்கள்
நாய்களைப்போல் பாய்ந்தலறி : நாயகியின் பொற்பதத்தை.
வீழ்ந்து துதி செய்யாமல் : மேலுலக மாமயிலை
சூழ்ந்துவளைந் தக்கணமே : சோதிமிகர் பொற்கரத்தை.
பாவிகள்பி ணைத்திறுக்கி : பாருலக நாயகியாள்
தாவிச்சு ழன்றுவிழ : சதிகோல மாயிழுத்து.
ஐயையோ தங்கையரே! : அப்பெரிய பட்டணத்தில்
மெய்யாக முக்கோடி : மேன்மைதுரை மக்களெலாம்.
சம்பமாய் வாழ்ந்துவரும் : சனத்திரள்கள் கண்காண
அம்பரியை நீசரவர் : அடிமேல டியடித்து.
நாளுமலங் காரமிறை : நாயகியாள் வாழ்ந்திருந்த
மாளிகைஎதெ ருப்புறமாய் : மங்கையாய்ச் செல்லுகிருர்.

ஓதிடவு மென்னுடைய : உடலம்ந டுங்குதம்மா
பாதையிலே ராக்கினியாள் : பட்டதுய ரோதுதற்கு.
விம்மிக்கண் ணீருதிர்த்து : வீழ்ந்தழுது வாடிடினும்
செம்மையாய்க் கேட்டுவரும் : சேசுபரன் நேசர்களே!
தாயர்களே நேயர்களே : தார்தலத்தி லுள்ளவரே!
சேயர்களைப் பெற்றெடுத்த : செல்வர்களே! சொல்லரிய.
தூயகிறை கற்பழகே : சூழ்ந்திலகும் சௌபாக்ய
நாயகியை பாதகர்கள் : நாடிப்பி டிக்கையிலே.
சுத்தமாய்ச் சொல்லவெனில் : சூரியனு தித்துசுமார்
பத்துமணி யாகுமந்த : பகல்பொழுது நேரமுதல்.
போகும்வ ழிதனிலும் : போனபின்னே மாடியிலும்
சாகரம்போ லேயுதித்த : சம்மனசோர் தங்கையம்மன்.
பட்டதிருப் பாடுகளை : பாதகன்நா னெவ்விதமாய்
திட்டமுடன் சொல்லிடுவேன் : சேவகரு மூர்சனமும்.
கச்சேரி வாசலிலே : கார்முகில்போல் சூழ்ந்திருக்க
அக்ஷணமே கொண்டுவந்தார் : அம்பரியைக் கட்டுடனே.
வாக்கிலடங் காதமகா : வாதையுட னேடுவரும்
பாக்கியஞ்சே ருத்தமியை : பார்த்துநின்ற வத்திரள்கள்.
நீக்குப்போக் கின்றியொரு : நிமைப்பொழுதி லேகலையும்
காக்கைகள்போ லேயிரைந்து : கனதுயர மோடழுக.
அப்போதோர் பாவிமகன் : ஆத்திரமா யோடிவந்து
ஒப்பில்லாத் தெள்ளமுதை : ஓங்கிக்கன் னத்தறைய.
சந்திரகி ரணமதால் : சாகரமி ருள்வதுபோல்
அந்தமுறு மர்ச்சிஷ்ட : அன்னையரின் கன்னமது.
கன்றிக்க றுத்திடவே : கர்த்தனே யென்றலறி
நன்றியுள்ள செல்வதியாள் : நாணியே வீழ்ந்தெழுந்து.
வேறெதுவும் சொல்லாமல் : விண்ணுலகை நோக்கினளாய்
நேராகச் செல்லுகையில் : நேர்ந்தவொரு சேதிதனை.

கேளுங்கள் தங்கையரே ! : கேடுகெட்ட சேவகர்கள்
நாளுமலங் காரமிகும் : நாயகியா ளைப்பிடித்து.
செல்லுகிரு ரென்னுமிந்த : சேதியைய றிந்தசர்வ
வல்லசரு வேசுரனின் : மாமறையோர் கேள்வியுற்று.
அங்கம்ப தைத்துருகி : ஆத்திரமா யோடிவந்து
பங்கமுற்ற நாயகியை : பார்த்தவுட னெல்லோரும்.
அண்டம்பு ரள்வதுபோல் : அவாழுது மாளுவதை
கண்டகுண மாதரசி : காதலுடன் சொல்லுகிருள்.
"சொந்தப்பி றவிகளே ! : சோர்ந்தழுது சோகமுற்று
எந்தனுக்காய் நீங்களிப்போ : ஏங்கியழும் காரணமேன் ?
வசந்த நல்ல காலமிப்போ : வந்ததமையால் சிந்தைநொந்து
கசிந்துருகி வாடாமல் : கர்த்தரிட மெந்தனுக்காய்.
வேண்டிடுவ தன்றியுநீர் : வேதமுறை மீருமல்
பாண்டியராய் வாழ்வடைந்து : பரலோகம் சென்றிடுங்கள்
தாரகைபோல் சூழ்ந்துகொண்டு : தவித்தழுகும் தங்கையரே
நேரமிக வாவதினுல் : நேராய்ம னையணுகி.
நான்மரித்தே னென்றவொரு : நற்சேதி கேட்டவுடன்
வான்மதிபோ லேயெழுந்து : வாழ்த்திடுங்க ளாண்டவனை.'
என்றுசொல்லி யவ்விடத்தில் : ஏந்திழையாள் நிற்கையிலே
நன்றியுள்ள தங்கையரே ! : நாயகியாள் பொற்கரத்தை.
கட்டினதும் போதாமல் : காளைக்கிடுவ துபோல்
இட்டிருந்தா ரம்மம்மா : ஈரார டிக்கயிர்கள்.
அந்தக்க பிற்றையிரு : ஆங்கார சேவகர்கள்
பந்தனமாய்க் கைப்பிடித்து : பாய்ந்தலறி யோடுகையில்.
எட்டியடி வைத்தேக : ஏலாத ராக்கினியாள்
தட்டுத்தடு மாறியங்கே : தள்ளாடிச் செல்லுவதை.
கண்டுமந்த பாதகர்கள் : காணுக்க போதிகள்போல்
சுண்டியிழுத் தாட்டிடவே : சூக்ஷமறி யாதவனை.

வண்டினம்போ லேசுழன்று : வாடியங்கு வீழ்ந்திடவே
தண்டார்தி ருமுகந்தான் : தரையில்ப டிந்ததம்மா.

வினையில்லா மாதரசி : வீழ்ந்தவி டந்தனிலே
கனமான கூர்ந்தபெரும் : கல்லுகளி ருந்ததினல்.

அன்னையரி லன்னைமுகம் : அக்கல்லில் மோதிடவே
பன்னரிய செவ்வுதிரம் : பாயுதம்மா பால்முகத்தில்.

அவ்வுதிர வாரியினல் : ஆடையுட லங்கமெல்லாம்
செவ்வையாய்த் தானனைய : தேசுலவும் செல்வதியாள்.

நின்றவிட மானதிலே : நீரருவி போல்பெருகி
சென்றதம்மா மாதுமணி : செல்லும்வ ழிகளெல்லாம்.

இத்துயரைக் கேட்டுருகி : இதயங்க லங்கியழும்
உத்தமரோ ! யிப்பொழுதே : ஊக்கமுட னும்மனதை.

சற்றேநி லைநிறுத்தி : சாந்தகுண மாதரசி
உற்றதிருப் பாடுகளை : உங்கருத்தில் நாட்டிவெகு.

தாழ்ச்சியுட னிப்பொழுதே : சாஷ்டாங்க மாய்விழுந்து
மாக்ஷிநிறை யர்ச்சிஷ்ட : மாசில்லாச் சோரிதனை.

கண்களினல் காண்பதுபோல் : காசினியை முத்தமிட்டு
விண்ணொளியி னசீரை : மீசுரமாய்ப் பெற்றிடுங்கள்.

கச்சேரி வாசல்விட்டு : கால்மைலு மேகாமுன்
அச்சமுறு மித்தகைய : ஆக்கினைக ளாவதென்றல்.

அன்னையர டைந்ததுயர் : யாரறிவார் அன்பர்களே
இன்னமு மிருக்குதம்மா : இங்கிருந்து மூன்றுமைல்.

நெடும்பாதை செல்வதினல் : நேரமிக வாகுமென்று
படும்பாவி யானவர்கள் : பலபேரு மோர்திரளாய்.

நெருக்கமா யுள்ளபல : நேர்வழியை விட்டுவிட்டு
குறுக்குமறுக் கானகடும் : கோணல்வழி கொண்டுவந்து.

வாக்கானு ளாக்கரிய : வாதைவிளைத் தெல்லோரும்
சீக்கிரமா யோடுகையில் : சீதமுக செல்வியப்போ.

காற்றிலடி பட்டசிறு : கதிர்மணிபோ லோடுகையில்
சாற்றறிய வாதையுறும் : சங்கைநிறை கன்னிகையை.

அல்லல்மி கவிளைத்து : அவ்வழிக ளுங்கடந்து
எல்லோரு மோர்திரளாய் : ஏகினர் மாளிகைக்கு.

செவ்வையாய்க் கேட்டிடுங்கள் : சென்றவர்க ளெல்லோரும்
அவ்விடம்போய்ச் சேர்ந்தவொரு : அரைநொடியி
[லேயையோ.

அஞ்சாக் கொடுங்கோலர் : அவ்வரசன் கட்டளைபோல்
மஞ்சனமா சாலையினுள் : மாமயிலை விட்டடைத்து.

பூட்டியபின் பாதகர்கள் : புண்ணியசி காமணியை
ஆட்டிடுமோர் பம்பரம்போல் : ஆகடிய மாயிழுத்து.

பூங்கொடியை யொத்ததிரு : புகழ்சேரும் பொற்பதங்கள்
வீங்கிடவே சண்டாளர் : விலங்குகளை மாட்டியவர்.

அகண்டபெரு மண்டாவில் : ஆழ்த்தியபின் மன்னனவன்
புகன்றமொழி போலவந்த : பொல்லாத நீசரவர்.

சலமூற்றி மூடியிட்டு : சாக்கிரதை யாயடைத்து
வலமிடமா யோடியவர் : வாகான நீண்டபெரும்

கட்டைகளைக் கொண்டுவந்து : கணக்கின்றி யேயடுக்கி
கட்டாக நின்றவர்கள் : கனலதனை மூட்டிடவே.

ஒப்பில்லாத் தங்கையரே! : ஓர்நொடியில் நீர்கொதித்து
குப்பெனவங் கேகிளம்பி : கூவிவரு மாவிதனை.

அப்பாலே செல்லாமல் : அவர்கள்செய்த தந்திரத்தை
செப்பிடநீர் கேட்டாலும் : சீவன்பி ரியுமம்மா.

மஞ்சனமா சாலையினுள் : மாதரசைத் தாமடைத்து
வஞ்சகமாய்ப் பாதகர்செய் : மாகொடுமை தாளாமல்.

வானோர்க ளுந்திகைக்க : வால்மிருகம் போன்றகொடும்
ஈனகொலை பாதகர்கள் : இணையில்லா வாதைகளால்.

பங்கமிழைத் தாடுகையில் : பாய்ந்தலறி யோடிவந்த
சிங்கமுகங் கொண்டசில : சீரழிந்த சேவகர்கள்.
நேரமிக வாகுதென்று : நீதியில்லா பாதகர்கள்
தாரையிள மாங்குயிலை : தரையிலே தள்ளியவர்.
அற்பமென வெண்ணுதீர் : ஐயோபெ ரும்பாறை
கற்களேமே லேசுமத்தி : கருதரிய கோரமுடன்.
குப்பெனவே கூவிவரும் : கொடுமையுள்ள ஆவிதனை
செப்பவே நீண்டபெரும் : செப்புக்கு ழாய்வழியாய்.
போக்கியபின் னன்னையரோ ! : போக்கிலிகள் செய்துவரும்
ஆக்கினைக ளால்வருந்தும் : அன்னைஜெய சீலியரின்.
தாமரையொப் பார்வதன : சங்கைமிகும் வாய்தனிலே
பாமரர்க ளானபடு : பாதகர்கள் தந்திரமாய்.
மட்டுதிட்ட மின்றியங்கு : வந்துவிழு மாவிதனை
விட்டடைத்துப் பூட்டியவர் : விட்டுவிட்டார் தங்கையரோ.
சுந்திரரோ ! யிவ்விதமாய் : சூதறியா வம்பரியை
ஐந்துமணி நேரமதாய் : ஆகடியம் செய்தார்கள்.
இப்படியா யங்கிருந்த : ஈனகுணப் பாதகர்கள்
ஒப்பில்லாத் தெள்ளமுதை : உபத்திரவம் செய்கையிலே.
தன்னிகரோ தில்லாத : தற்பரனுர் சர்வேசன்
அங்கேரஞ் செய்தவொரு : அற்புதத்தைக் கேட்டிடுங்கள்.
பூர்வகா லத்திலொரு : புத்தியில்லாப் பேயரசன்
சீர்புகழும் மூன்றுசிறு : தேசுலவும் வாலர்களை.
தீயெரியும் சூளையிலே : சேதமுறத் தள்ளிடவே
நேயர்களை யாண்டவனுர் : நீள்புவியி லற்புதமாய்.
காத்ததுபோல் தம்மினிய : கன்னிகா ரத்தினத்தை
நேத்திரம்போ லாதரிக்க : நினைவுற்று ரானதினுல்.
வஞ்சகர்கள் செய்துவரும் : மாகொடிய வாதைகளில்
கொஞ்சமெனும் சூடுதிருக் : கொற்றவிமேல் தாவாமல்.

...முடைய வாலமணி : தேறிமகிழ் வுற்றிடவே
...மாவி யத்தனையும் : சூழுமிளங் காற்றாக.
...தியங்கு வீசிடவே : மாக்ஷிநிறை மங்கைமணி
...ணாநற் சந்திரன்போல் : புனிதமாய் வீற்றிருந்தாள்.

---

## 25-வது அத்தியாயம்.

### வாலகன்னிகை வேதசாக்ஷியாகிறாள்.

இவ்வி தபே ரற்புதத்தை : ஈனர்கண்ட மாத்திரத்தில்
அவ்விடம்விட் டோடோடி : அரசனிடம் சொல்லிடவே.
மாச்சரியங் கொண்டகொடும் : மனுநீதி கர்த்தனவன்
ஆச்சரியங் கொண்டவனாய் : அறைகிறா 'னென்னயிவள்.
மாதவசி யுத்தமியோ ! : வானவரின் புத்திரியோ !
பூதலத்தில் நிதம்ப : புனிதவித்தை கற்றவளோ ?
திக்கெனவே பற்றிமிக : தீவிரமாய் தானெரிந்த
அக்கினியை யோர்நொடியில் : அடக்கியே வைத்தனளோ ?
ஐந்துமணி நேரமதாய் : ஆவிதனை விட்டடைத்தும்
வெந்துருகி மாளாமல் : வெளியேகி வந்தனளோ ?
ஆரர்களே வீரர்களே ! : சூதறவே யெந்தனுக்கு
நேரமதைப் போக்காமல் : நிகழ்த்திடுங்க ளுண்மையைநீர்.
மந்திரமோ தந்திரமோ : மாயாஜா லப்புரட்டோ ?'
எந்தவித மென்றறிய : இணையில்லா யோசனைகள்.
பண்ணிரபின் தான்தானே : பகுத்தறிவே தில்லாமல்
கண்ணிழந்த பாவியவன் : கனகோபங் கொண்டவனாய்.
அற்பங்க ளங்கமில்லா : ஆதவன்போ லேயிலகும்
கற்பினொளி மாதரசி : கண்மணியைப் பாவியவன்.

வம்பான சூனியமும் : வைப்பான மாரணமும்
தம்பனமாம் யோகமுறை : சாஸ்திரங்கள் கற்றமுழு.
சூனியங்கள் செய்யுங்கொடுஞ் : சூரியென்ற வனிளைத்து
ஈனர்களாம் சூரர்களை : இவனழைத்துச் சொல்லிடுவான்.
"நேரமிக வாவதினல் : நேராகச் சென்றவளின்
மாளிகைய டைந்துடனே : மறைவான வோரிடத்தில்.
ஆடம்ப ரங்களின்றி : அன்னவள்சி ரமுடலை
சாடிடவே வாளதினல் : தறித்திடுங்க" ளென்றுரைக்க.
"அப்படியே செய்திடுவோம் : ஆண்டவனே" யென்றவர்
ஒப்பியுடன் வாக்களித்து : ஓடியவர் சூரியன்போல். [கள்
கண்கூசும் வாளதனைக் : கருக்கேறத் தீட்டியபின்
புண்ணியஞ்சேர் ராக்கினியாள் : பூரிப்பாய் வீற்றிருக்கும்.
உன்னதநல் மாடியினுள் : ஓடியவர் பார்த்திடவே
மின்னலொளி யைப்பழிக்கும் : மேலான காந்தியுடன்.
மாதுகன்னி மாமணியாள் : மதுமலர்கள் பூத்ததுபோல்
வேதனைக ளற்பமின்றி : வீழ்ந்துமுழங் காலிருந்து.
விண்ணுலகை நோக்கினளாய் : விரித்தகரத் தோடுஜெபம்
பண்ணுவதைப் பார்த்தலறி : பயந்தவர்க 'ளோயோநாம்.
மண்ணுலகி லேபிறந்த : மங்கையெனப் பேதமையால்
எண்ணினேமா ஞலிவளோ : இந்திரவா னத்திருந்து.
பெண்ணுருவ மாயுதித்த : பேரரிய கற்பகமென் [கள்.
றெண்ணாமல் போனேமே : யென்செய்வோ' மென்றவர்
உள்ளந்து டிதுடித்து : ஊர்க்கொள்ளை யாடிவரும்
கள்ளர்கள்போ லவ்விடத்தில் : கலகலத்து நின்றுவிட்டார்.
ஆனாலும் தங்கையரே ! : அவ்வளவோ டில்லாமல்
ஈனமதி கொண்டதங்கள் : இறைவனும் ராயனுக்கு.
ஆணையிட்டுச் சொல்லிவந்த : அவ்வாக்குத் தத்தமது
வீணர்கள்நி னைவில்வர : வேறுபட்டுச் சொல்லுகிறார்.

'சிறுமியிவ ளின்சிரசை : சீக்கிரமாய் வெட்டிவிட்டு
வருகுவோ மென்றுறுதி : வார்த்தையளித் தின்னுமொரு.
நாழிகையு மாகாமுன் : நாம்மறுத்தால் வையகத்தில்
வாழும்சிறு பெண்களன்றி : வையகமு மேயிழிவாய்.
பேசாதோ பேசியேசும் : பேர்குலைய பூமியிலே
ஏசாதோ ?' யென்றவர்கள் : ஏற்கையில்லா வார்த்தைகளால்.
சிலநேரம் தம்மனதை : தேற்றித்தி டப்படுத்தி
விலைமாதர் பெற்றமக்கள் : மீண்டுமவர் சொல்லுகிறார்.
'மன்னுநீதி மன்னனவர் : மானிலத்தை யோர்குடையில்
நன்னயமா யாண்டுவரும் : நளபதியாம் மன்னனிடம்.
வீரியங்கள் பேசிவிட்டு : வெளிவந்த நாமுடனே
தீரமாய் வேலைதனை : செய்யாமல் போகிலிந்த.
சூரியவா ளேநமது : குரல்வளைக்குத் தீங்காக
சீறிவந்தி டுவதன்றி : சின்னஞ்சிறு பெண்கொலையை.
செய்திடுமிப் பாவமது : சிறிதளவே யானாலும்
மெய்வாக்க ளித்ததனை : மீறுவதோ மாபாவம்.
ஆகு' மென்றே தம்மனதை : ஆற்றியபின் னுத்திரமாய்
வாகான நீண்டபெரும் : வாளைப்பி டித்தொருவன்.
பொல்லாத கோபமொடு : புத்திதடு மாறினனாய்
பல்லையிறு கக்கடித்து : பாதகனு டல்நடுங்கி.
கற்புக்க ணிகலத்தின் : காந்திமுகம் கண்ணோக்க
அற்பன்து ணியாமல் : ஐயையோ நேயர்களே !
நாசக்கொ டுங்கோலன் : நாகம்போ லோர்நொடியில்
வீசிட்டான் கன்னிகையும் : விண்ணோக்கி யேவிழுந்தாள்.
அங்கந்து டிதுடித்து : அன்னையதைத் தானினைத்து
கங்கைஜலம் போலமிகக் : கண்ணீருந் தானுதிர்த்து.
கட்டிப்பி டித்தழுகும் : கண்ணான நேயர்களே !
மட்டியவ னுனதினால் மனமொடுங்கி கைநடுங்கி.

வெட்டினவவ் வெட்டுமனா : வெட்டாயி ருந்ததினல்
துட்டனின்னு மோர்முறையும் : துரிதமாய் வாள்பிடித்து.
மூன்றுந்த ரமாக : மூர்க்கமுடன் வீசிடவே
வான்றூதன் தங்கையரின் : வயிரம ணிக்கழுத்தில்.
குபுகுபென வேயுதிரம் : கொப்பளித்துப் பொங்குதம்மா
அபரூப நாயகியாள் : அந்நேர வேளையிலே.
'ஒப்புவமை யில்லாத : உன்னததி ரித்துவமே!
இப்புவியி லேயிவர்கள் : ஈனமதி கொண்டவராய்.
அறியாமல் செய்யுமிந்த : அக்கிரம தோஷமதை [வனே.'
பெரியமனம் கொண்டுடனே : பொறுத்தருளு மாண்ட
என்றவர்க்காய் மன்றாடி : ஏந்திழையாள் மெய்சோர்ந்து
நின்றிருந்த சேவகனை : "நேசர்களே" யென்றழைத்து.
ஆசீர ளிப்பதுபோல் : அன்னையர்தன் பொன்கரத்தை
நேசமுட னேயுயர்த்தி : நிலத்திலே தாழ்த்தினதும்.
வேதனைகள் தாளாமல் : விரைந்தோடும் சோரிதனில்
ஓதிடவோர் கப்பலைப்போல் : உத்தமியாள் தான்மிதக்க.
கண்டுவி ரண்டுருண்டு : கண்விழிக ளுமிருண்டு
சண்டாள ரோர்நொடியில் : சாடியே யோடிவிட்டார்.
கூடிநின்ற சேவகர்கள் : கொற்றவியை விட்டகன்று
ஓடினர்க ளென்றறிந்த : உத்தமியின் மித்திரரும்.
உறவின்மு றையினரும் : ஊழியர்கள் மற்றவரும்
அறிந்தவுட னாத்திரமாய் : அலறிப்ப தைபதைத்து.
ஓட்டமா யோடியவர் : ஊர்பான்மேற் றிராணியர்க்கு
வீட்டிலுற்ற சங்கதியை : விவரமாய்ச் சொன்னவுடன்.
ஐயையோ நேயர்களே! : அன்பரவர் மார்பறைந்து
மெய்தானோ வென்றழுது : மீன்போல்து டிதுடித்து.
வாய்விட்ட ழுதலறி : 'வான்வேத சாக்ஷியராய்
மாய்ந்தாயோ தாயேயென் : மங்காச்சு டர்விளக்கே!

ஆரணமே செங்கதிரே! : ஆயேசெ சீலியரே!
பூரணநற் சந்திரனே! : புத்திரியே யுத்தமியே!
மானிலத்தை விட்ட கன்ற : மாமயிலே தாரகையே!
நானுமினி யென்னசெய்வேன் : நாயகியே!' யென்றழுது.
துக்கமதால் வாடிமனம் : சோர்ந்தயர்ந்து தள்ளாடி
அக்கணமே வந்தார்கள் : அறைகொடியில் யாவருமே.
பறந்தோடி வந்தவர்கள் : பார்க்கையில்ஜெ யக்கொடியே
அறுந்துதனை வீழ்ந்ததுபோல் : அந்தமுறு மவ்வறையில்.
வெய்யோன்மு கந்துலங்க : மேன்மைமிகு முத்தமியாள்
மெய்சோர்ந்து வாடியங்கு : மிகுசோரி வாரிதனில்.
அமிழ்ந்தியமா கற்பினொளி : அன்னைஜெய சீலியரை
கவிழ்ந்தவர்க ளெல்லோரும் : கண்களினால் பார்த்துருகி.
துயரால்ம திமயங்கி : தொல்வினையால் மெய்வதங்கி
உயிரதனை விட்டனளென் : றுத்தமர்க ளும்நினைத்து.
ஆண்டவரு முத்தமரும் : அங்கிருந்த மற்றவரும்
மாண்டநம துத்தமிக்காய் : மாசிசுக்கள் போலழுது.
வாடியவர் மெய்பதறி : வாக்கடங்காச் சோபமுற்று
ஆடாமல் பார்த்துநிற்கும் : அத்தகைய வேளையிலே.
நேசர்களே! யவ்விடத்தில் : நேர்ந்தவொரு சம்பவத்தை
பூசகரே சொல்லவெந்தன் : புத்திதடு மாறுதம்மா.
இரண்டுமணி நேரமதாய் : இரத்தப்ர வாகமதில்
புரண்டுருண்டு சோர்வடைந்த : புண்ணியத்தி ருவுடலம்.
படபடென வேதுடிக்க : பார்த்துநின்ற புண்ணியர்கள்
வெடவெடத்து நின்றிடவே : வேதியரா மாண்டவரும்.
உன்னதசர் வேசனுக்காய் : உயிர்கொடுக்குங் கன்னிகைக்கு
இன்னுமுயி ருண்டெனவே : இவரறிந்து சொல்லியதால்.
வாக்கிலடங் காதகொடும் : வாதையுறும் நாயகியை
சீக்கிரமாய்த் தூக்கியந்த : சீர்சிறந்த வாண்டவனர்.

பன்னீரை யூற்றிதிருப் : பாலகியே னுற்றதிரு
சென்னியைப் போக்கியபின் : சிறந்தபட்டி னுலுடுத்தி.
போற்றிய நாயகியை : பெற்றெடுத்த வன்னையர்போல்
மேற்றிராணி யாண்டவரோ : மின்னித்து லங்குகின்ற.
மகிமைநிறை வானுலக : மன்னர்களின் தங்கையராம்
தகமைநிறை ராக்கினியை : தன்கரத்தி லேந்தினராய்.
மார்போடே சேர்த்தணைத்து : மடிமேல்வ ளர்த்திமிக
சோர்வடைந்த பொன்முகத்தை : சுத்தரவர் பார்த்தழுகும்.
தருணமதி லாண்டவர்மேல் : சாய்ந்திருந்த வன்னையரின்
கருணைமிகு நேத்திரங்கள் : காந்தியொளி வீசுவதை.
கண்டவர்க ளெல்லோரும் : கார்முகில்போல் சூழ்ந்துகொ
வெண்டாம ரைமுகத்தை : வீட்சித்து நிற்கையிலே. [ண்டு
சருவேச னுக்குகந்த : சன்மார்க்க நேயனொனும்
மறுவில்லாத் தங்கையரோ ! : மாக்ஷிமையா லற்புதமாய்.
புருவந்து டிதுடித்து : புஷ்பவிதழ் போலசைய
அருமைநிறை கற்பினெளி : அழகுஜெய சீலியம்மன்.
மறுமுறையும் பூதலத்தை : மாதயவாய்ப் பார்க்கவெண்ணி
தெருள்பொழியும் நேத்திரத்தை : திக்ஷண்ய மாய்த்திறந்து.
பார்த்திடவே நேசர்களே ! : பாலூட்டு மன்னையர்போல்
சார்த்தியே மார்பணைத்து : சாகரம்போல் வீற்றிருக்கும்.
மேற்றிராணி யார்முகத்தை : மெல்லிநல்லாள் கண்டவுடன்
சாற்றரிய பேரின்ப : சாகரத்துள் மூழ்கினளாய்.
அன்னைமுகம் கண்டசிறு : அருங்குழவி போலவளும்
புன்னகைமுகம் துலங்கி : பூரிக்க வாண்டவனார்.
நெஞ்சம்பி ளந்துருகி : நேத்திரங்கள் நீர்சொரிய
பஞ்சவர்ணத் தாரகையை : பக்ஷமுடன் முத்தமிட்டு.
"பன்னரிய கண்மணியே ! : பாலகியே யாருயிரோ ! [ணைத்து.
வின்னமில்லாக் கன்னிகையே ! : விண்மணியே !" யென்ற

"செப்பரிய வாதையுறும் : செங்கதிரோ ! யிப்பொழுது
எப்படியி ருக்குதம்மா" : என்றவரும் கேட்டிடவே.
கல்லுங்க ரைந்துருக : கண்மணியாள் வாய்மலர்ந்து
சொல்லுகிறு "ளாண்டவரோ ! : சோதித்தி ரித்துவத்தின்.
சூழ்கிருபை யாலுமெந்தன் : சுகிர்தகுண தந்தையரோ !
தாழ்வில்லா தங்களது : சத்தியவா சீராலும்.
மாக்ஷிநிறை சேசுவெனும் : மகிபருக்காய் நான் வேத
சாக்ஷியுமே யானேனென் : சர்வாதி காரணசர்.
வேசனெனக் கிவ்வுலகில் : வீற்றுரைத்த வம்மொழிபோல்
நேசமுடன் செய்ததனை : நிறைவேற்றி விட்டமையால்.
எனக்கோர்கு றையுமில்லை : ஏனெனிலென் தந்தையரோ !
வினையில்லா மோக்ஷமெனும் : விண்ணுலக பாக்கியத்தை.
அடைந்திடவும் நேரமெனக் : காவதினல் துன்பமெனும்
மிடியுடனே வாழுகின்ற : மித்திரர்க ளானவெந்தன்.
ஏழைக்கி றீஸ்துவர்கள் : ஏங்கிடா தாதரிக்க [து.
தாழ்பணிந்து வேண்டுகிறேன் : தந்தையரோ" யென்றுரைத்
திங்கவொளி வீசுகின்ற : தேசுலவு மாமணியின்
மங்காத்தி ருமுகத்தை : மறுமுறையுங் கண்டிடவே.
அங்குவந்து கூடிநின்று : ஆறுப்பெ ருந்துயரால்
அங்கம்ப தைத்துருகும் : அஞ்ஞான நேயர்களை.
கண்டவிளங் கண்மணியாள் : கனிந்தகுர லோடுசிறு
வண்டோசை போலிறைந்து : வாய்திறந்து சொல்லுகிருள்.
"கண்ணான நேயர்களே ! : காசினியை விட்டகன்று
விண்ணுலக மேகிடவே : வேளையெனக் காகுதம்மா.
அடிமுடிக ளில்லாத : அம்மோக்ஷா னந்தமது
குடிகொண்டி ருப்பதினல் : கூடியிங்கு நிற்குமெந்தன்.
மித்திரரோ ! நீங்களென்னை : மேதினியின் நிற்பாக்ய
புத்திரியென் றெண்ணமல் : புகலுமொழி கேட்டிடுங்கள்.

ஐயையோ நீங்களெல்லாம் : அழிநரகக் கூளியெனும்
பொய்யான தேவர்களை : புத்தியுடன் விட்டகற்றி.
பாசமனு வோர்களுக்காய் : பாரச்சி லுவைதனில்
நேசவுயி ரைக்கொடுத்த : நித்தியப ரஞ்சுதனின்.
மெய்மறையைப் பற்றிமிக : மேன்மையாய் வாழ்வதுடன்
வையகத்தி லுள்ளளவும் : வல்லதிரி யேகனெனும்.
படிபுகழும் தெய்வமதை : பாரினிலே நம்பிநின்றால்
தடைகளின்றி யென்னுடனே : சாஸ்வதமாய் வானுலகில்.
நித்தியபே ரின்பமெனும் : நீடுழி பாக்கியத்தை
உத்தமரே நிக்ஷயமாய் : உளமகிழ்ப் பெற்றிடுவீர்."
என்றமலன் மாமறையை : ஏகாந்த மாயுரைத்து
நன்றியுள்ள கன்னிமணி : நாயகியா ளாண்டவரை.
அருள்விழியால் நோக்கிசற்று : அசையாதி ருந்திடவே
பொருளறிந்த வேதியர்தம் : பொற்கரத்தா லாசீரை.
தாமதமொன் றில்லாமல் : தந்திட்ட மாத்திரத்தில்
சோமநிகர் பொன்வதனம் : சுக்கிரன்போ லேதுலங்க.
வானுலகைக் கண்களினால் : வண்மையாய்ப் பார்த்தபடி
ஞானமதி லாழ்ந்திருந்த : நாயகியா ளப்பொழுதே.
கிரீத்தமுக மேதுலங்க : சேசுவே யென்னையுந்தன் [த்து.
திருக்கரத்தி லொப்படைத்தேன் : தேவனே! யென்றுரை
வேடனடி யுண்டதினால் : வெகுகாயங் கொண்டசிறு
மாடப்பு றாவதுபோல் : வாடியே சோர்வடைந்து.
விண்ணுலகை நோக்குந்திரு : வினையில்லாக் கண்களினால்
மண்ணுலகை நோக்கிடவே : மனமில்லா நாயகிபோல்.
அருள்விழிகள் மூடினளாய் : ஆண்டவரின் மார்பினிலே
தெருள்பொழியும் தேவகன்னி : சீராய்த்த லைசாய்த்து.
பழுதில்லா தேவசுதன் : பார்பிறந்த வோர்நூற்று
எழுபதொடு வெட்டாகும் : இவ்வாண்டி லுத்தமியாள்.

..வதி ருவுளத்தை : சிராய்கி றைவேற்றி
..திதனை விட்டுபரன் : அருள்வேத சாக்ஷியராய்.
..ப்பான வானுலக : திருநகரின் சீர்பெறவே
..ப்பட்டாள் தங்கையரே! : புகழ்சேர்செ சிசிபம்மன்.
..ண்டாளெ னவறிந்த : மாத்திரத்தி லன்புடைய
..ண்டவரும் மற்றவரும் : ஆருத்து யரடைந்து.
..பின னிகலமாம் : கன்னிஜெய சிசியரின்
..ம்பக்க ளங்கமில்லா : அருட்பாதம் முத்தமிட்டு.
..டால லங்கரித்து : பன்னீர்மி கத்தெளித்து
..ட்டுதிட்ட மில்லாத : மாமலர்கள் சாற்றியபின்.
..காச்சு டரொளிரும் : நிறமுடைய கற்களினுல்
..ங்காய மைத்தசொர்ணப் : பைம்பெட்டி யுள்வளர்த்தி.
..ன்னிகை பிறந்ததுவும் : காசினியில் வாழ்ந்ததுவும்
..ன்னதசர் வேசனுக்காய் : உயிர்கொடுத்து மாண்டதுவும்.
..ந்தவிதம் யெந்தவிடம் : எந்தநாள் யெவ்வருஷம்
எந்ததினம் யெந்தமணி : எம்மாதம் யெத்தேதி.
என்னும்பல நற்குறிப்பை : இறைவனவன் பேருடனே
பொன்னெளிசேர் தங்கரத்தால் : பூதலத்தோர் தாமறிய.
சங்கைமிகு மாண்டவரோர் : தங்கத்த கடுதனில்
அங்குள்ளோர் முன்னிலையில் : அலங்கார மாயெழுதி.
அருள்வேத சாக்ஷியராய் : ஆவனுட னேமரித்து [னுள்
தெருள்பொழியும் கற்பினெளி : சேர்ந்துறங்கும் பெட்டியி
பந்தனமாய் வைத்தடைத்து : பார்புகழும் பொக்கிஷத்தை
வந்திருந்தோர் மட்டுமப்போ : வானவர்போ லேசுமந்து.
கொண்டேகி யர்ச்சிஷ்ட : கோமான்வ லேரியனும் [னும்.
மண்டலத்தோர் போற்றுகின்ற : மாதவன்தி பூர்ஸனெ
மறுவில்லாப் புண்ணியர்கள் : மாக்ஷிநிறை கல்லறையின்
அருகிலே வைத்திதனை : அடக்கியபின் னேசர்களே.

புருவம்ச ரிந்ததவப் : புண்ணியன்மேற் றிராணிமுனி
சிறுகுழந்தை போலவரும் : தேம்பித்தி கைத்தழுது.
நேசகுண செல்வதிக்காய் : நெஞ்சம்பி ளந்துருகி
பூசைஜெப தானதர்ம : புண்ணியங்க ளானபல.
அந்தியமா கர்மங்களை : ஆதனையி லுள்ளளவும்
அந்திசந்தி யெப்பொழுதும் : அயராமல் செய்துவந்தார்
என்பிரிய நேயர்களே ! : இந்தவம்மா ளைச்சரிதை
தன்பெயரைக் கொண்டவம்மன் : சாக்ஷிப்ர மாணமதால்.
நீங்களுமறிந்துகொள்ள : நேர்வதென்ன கேட்பீரேல்
சாங்காலம் நேரிடினும் : சாகரத்தி லுள்ளளவும்.
ஈராறு மண்டலத்தை : இமைப்பொழுதி லுண்டமைத்து
சீராய ளிக்கவல்ல : திருச்சுதனின் சீர்மறையை.
கடைப்பிடித்து நின்றொழுகி : காசினியில் வாழ்வடைந்த
முடிவாகு மிம்மையிலும் : முடிவில்லா முத்தியிலும்.
போற்றரிய தாரகையாம் : புகழ்சேர்செ சிலியைப்போல்
நாற்றிசையு மேதுதிக்க : நாகமணி போல்துலங்கி.
வானவரின் தங்கையென : வாழ்வடைந்து வானுலகில்
மோனசரு வேசுரனை : முகமுகமாய்க் கண்டிடுவீர்.
பூவாகும் தங்கையரே ! : புண்ணியரே மங்கையரே !
தேவனரு ளாலேசெ : சிலியின்தி ருவுடலம்.
அழியாதி ருப்பதன்றி : அவ்வலேரி யானுடலும்
இளையான்தி பூர்ஸன்மேற் : றிராணியா ரிவ்வுடனும்.
இன்னமுமி ருக்குதம்மா : ஏற்றநல்ல சாக்ஷியுடன்
நன்னயமாய் ரோமைதிரு : நகர்தனிலென் னேசர்களே.
மங்களஞ்சேர் கன்னியரே ! : மாமரியின் மைந்தர்களே !
சங்கைமிகு மென்பிறனி : தங்கைமங்கை தாயர்களே !
பன்னரிய நேசமிகும் : பாவலரே நாவலரே !
பொன்னணியு மேனியரே ! : போற்றரிய முத்தமிழின்.

ல்மணமு மில்லாத : நட்டவறி வாளனுமாய்
ல்மணமு மாருத : பாலனுமா னமரிய.
சையவ னேயியற்றி : சூழ்புவியோர் தாமகிழ
சையுட னேவிடுத்து : ஆட்கொண்டா னதினுல்.
லாரும் கற்றவரும் : காசினியி லுள்ளவரும்
ல்லோரு மேமகிழ்வாய் : எற்றிதனை யெத்தினமும்.
டிப்பு கழடைந்து : பாரினிலே வாழ்வடைந்து
டிமன மங்களமாய் : குணமடைந்து நன்மைபெற.
க்திருச்ச ரிதைதனை : இயம்பியவிச் சேயனுக்காய்
க்தலமும் போற்றுகின்ற : முதலோனை வேண்டிமிக.
ந்தியுள்ள நேசர்களாய் : பாக்கியமோ க்ஷம்பெறவே
ந்தியமு மாதரசை : நேசமுட னுசரித்து.
நவீரோ லுங்களுக்கு : வல்லபரன் மிக்கசுகம்
நவாரி துங்சமே : தானறிவீ ராகையினுல்.
பாவியெனக் காகவென்றும் : பாக்கியசெ சீவியிடம்
ஆவலுடன் வேண்டிடுவீர் : ஆதனையா மென்சேசு.



## ஜெபம்.

அதிமிக பூஜிக்கப்படத்தக்க ஏக திரித்துவத்திற்கு
சிலுவையில் அறையுண்ட நமது ஆண்டவராகிய சே
கிறீஸ்துநாதருடைய மானுஷீகத்திற்கும், ஒட்டலே
மாட்சிமைதங்கி முப்பொழுதும் கன்னிமை குன்றாமல் ம
திப்பேறுபெற்ற அர்ச். மரியாயின் மாசில்லாக் கன்னிமை
கும், சகல அர்ச்சியசிஷ்டவர்கள், முத்தர்கள், வானோர்க
வேதசாக்ஷிகள், தபோதனர்கள், கன்னியர்கள், ஸ்துதிய
ளுடைய கூட்டங்களுக்கும், சகல சிருஷ்டிகளினாலே அ
வரதகாலம் ஸ்துதியும், தோத்திரமும், மகிமையும் புகழு
உண்டாகக்கடவது. நமக்கோவென்றால் சதாகாலமும் பா
விமோசனம் உண்டாவதாக. ஆமென்சேசு.

நித்திய பிதாவின் திருச்சுதனைத் தாங்கிய அர்
கன்னிமரியாயின் திரு உதரம் பாக்கியம் பெற்றது.

நமது ஆண்டவரான சேசுக்கிறீஸ்துநாதர் பாலுண்ட
திருக்கொங்கைகள் பாக்கியம் பெற்றன.

